சரசுவதிமகால் நூலக வெளியீடு எண் :- 274

# தொல்காப்பியம்

## சொல்லதிகாரம்

## (ஆத்திரேயர் உரை)




வெளியீடு
பன்மொழிப்புலவர், பேராசிரியர்
திரு. ரு. சதாசிவம், எம்.ஏ.எம்.லிட்,
இயக்குநர்

1989

விலை ரூ. 40–00

முதற்பதிப்பு—செப்டம்பர் 1989

TOLKAAPPIYAM : COLLATIKAARAM
(COMMENTARY BY ATTHIREYAR)

வெளியீடு

© தஞ்சை சரசுவதி மகால் நூலகச்சங்கம்
தஞ்சாவூர்

பதிப்பகம்
[illegible] அச்சகம்
தஞ்சாவூர்.

## பொருளடக்கம்

# வெளியீட்டுரை

தமிழ்மொழியின் தொன்மைப் பெருமையை விளக்கிக்கூறும் நூல் தொல்காப்பியம் ஆகும். தமிழ்மொழிக்கே முதல் நூலாகக் கருதப்படுவது தொல்காப்பியமே.

தொன்மையான பெருமை கொண்ட சரசுவதிமகால் நூலகத்தில் தமிழ்ப் பகுதியில் இடம் பெற்றுள்ள அரியபடைப்பு, இப்போது வெளிவருகின்ற தொல்காப்பியம்—சொல்லதிகாரத்தின் ஆத்திரேயர் உரை நூலாகும்.

தொல்காப்பியச் சுவடிகள் பல இந்நூலகக் கருவூலகத்தில் உள்ளன. இதுவரை வெளிவராததும், சிறப்பு மிக்கதுமான ஆத்திரேயர் உரையை இப்போது வெளியீடு செய்கின்றோம். தொல்காப்பியத்திற்குப் பேராசிரியர், இளம்பூரணர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடனார், சேனாவரையர் ஆகியோர் உரை செய்துள்ளனர். தமிழ்மொழிக்குப் பெருமை சேர்க்கும் வண்ணம் சொல்லதிகாரத்திற்கு ஆத்திரேயர் உரை நூலாகிய இந்நூலை வெளியிட்டுள்ளோம்.

'ஆத்திரேயன்' என்ற பெயர் மட்டுமே சுவடியில் காணப்பெறுவதால் அவர் பெயராலேயே உரை நூல் வெளியிடப்படுகிறது. ஆத்திரேயர் தமிழ், வடமொழி இரண்டிலும் புலமை மிக்கவர். வடமொழி இலக்கணமான பாணினி சூத்திரங்களை ஒப்பு நோக்கி அவர் பெயரையும் சில இடங்களில் குறிப்பிட்டு உரை எழுதுகிறார். அது மட்டுமல்லாமல் ஆத்திரேயர் தமிழ் நெறிக்குரிய இலக்கண மரபைச் சிறப்பாகக் கூறுகிறார் உரை எளிய நடையில் உள்ளது. சங்க இலக்கிய நூல்களிலிருந்தும், சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி, திருக்குறள் ஆகிய நூல்களிலிருந்தும் அவ்வப்போது மேற்கோள்களை எடுத்துக்காட்டியுள்ளார். சில பகுதிகளுக்குச் சிறப்புரையும் எழுதியுள்ளார்.

இந்நூலை இந்த நூலகத்தின் சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர் தமிழறிஞர் திரு. **வ. வேணுகோபாலன்** அவர்கள் சிறப்புறப் பதிப்பித்து ஆய்வு முன்னுரையும் எழுதியுள்ளார்.

இந்நூலை அச்சிட நிதியுதவி நல்கிய மத்திய அரசுக்கு எனது மனமார்ந்த நன்றியினை உரித்தாக்குகின்றேன். இநநூல் நன்முறையில் விரைவில் வெளிவரச் செயலாற்றிய இந்நூலக நிர்வாக அலுவலர் திரு. **சீ. கிருஷ்ணன்** அவர்களுக்கும், இதுவரை இந்த நூலைப் பொறுப்பேற்று அச்சிட்ட வெளியீட்டு மேலாளர் மற்றும் நூலகர் திரு. **அ. பஞ்சநாதன்** அவர்களுக்கும், இந்நூலை இயன்ற அளவு நன்முறையில் அச்சிட்டுக்கொடுத்த தஞ்சாவூர் வாண்டையார் அச்சகத்தாருக்கும் எனது நன்றி உரித்தாகுக.

**மு. சதாசிவம்**
இயக்குநர்,
சரசுவதிமகால் நூலகச்சங்கம்.

தஞ்சாவூர்,
10—9—89.

## பதிப்பாசிரியர் உரை

தஞ்சாவூர் சரசுவதிமகால்நூலகத்தில் மிகச்சிறந்த அரியபடைப்புக்களைக் கொண்ட சுவடி நூல்கள் பல ஆயிரக்கணக்கில் உள்ளன. தமிழ், வடமொழி, தெலுங்கு, மராத்தி ஆகிய மொழிகளில், பாரதநாட்டின் பொதுவுடைமையாகப்பலதுறை நூல்களும் உள்ளன.

இந்நூல்களை, நூலகத்தார் தொடர்ந்துவெளியிட்டுவருகின்றார்கள். தமிழ்த்துறை நூல்கள் பலவற்றை வெளியிட்டுப் பெருமை கொண்டுள்ளது நூலகம்.

இந்நூலகத்தில், பழமையில் சேகரித்துப் பாதுகாக்கப் பெற்ற தமிழ்ப் படைப்புக்களில் மிகப்பழமை கொண்டதும், தமிழ்மொழிக்கே முதல் நூலாகக் கருதப்படுவதுமான தொல்காப்பியம் சொலலதிகாரம் ஆத்திரேயர் என்ற உரையாசிரியர் உரையுடன் உள்ள சுவடி நூலை இந்நாள் வெளியிடுகின்றது.

தொல்காப்பியம் சொல்லதிகாரம் உரையுடன் கூடிய இந்நூல் மிகவும் சிதிலமாக இருப்பினும், உரைச்சிறப்பைக் கருதி வெளியிடப்படுகிறது.

தொல்காப்பியம் சொல்லதிகாரம் இந்நூலகச்சுவடி எண் 628 காப்பீடுப் புத்தகம் எண் 188ல் உள்ளதுஉரையாசிரியரான இளம்பூரணர் உரைபன்முறை பலரால் வெளிவந்துள்ளன. எனினும் இவ்வுரை பற்றிக்கூறும்போது, சுவடி ஏடுகளில்எழுத்துக்களின் சிதைவும், சிலவரிகள் விடுபட்டும் உளளன. அவற்றை ஓரளவு ஒப்புநோக்கிப் பதிப்புப் பணிபுரிந்துள்ளேன்.

தொல்காப்பியம் முழுமைக்கும் இளம்பூரணர் உரை கிடைத்துள்ளது. தொல்காப்பியம் எழுத்து அதிகாரத்திற்கு நச்சினார்க்கினியர் உரையும் கிடைத்துள்ளது.

சொல்லதிகாரத்திற்கு, இளம்பூரணர், கல்லாடனார், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் என்பவர்கள் உரை எழுதியவர்கள்.

தொல்காப்பியம் பொருளதிகாரத்திற்கு மெய்ப்பாட்டியல் முதல்மரபியல் ஈறாக ஐந்து இயல்களுக்குப் பேராசியர் உரை எழுதியுள்ளார்.

நச்சினார்க்கினியர், பொருளதிகாரத்திற்கு அகத்திணையியல் முதல்பொருளியல் இறுதியாக ஐந்தியல்களுக்கு உரை எழுதினார்

கல்லாடனார், சொல்லதிகாரத்தில்சிலபகுதிகட்குமட்டுமே உரைஇயற்றினர்

தெய்வச்சிலையார், சொல்லதிகாரத்திற்கு உரை எழுதினார்.

இப்பதிப்பு, சொல்லதிகாரம், ஆத்திரேயர் உரையாகவெளியிடப்பெறுகிறது

சுவடி நூலின் இறுதியில் 'ஆத்திரேய' என்று குறிப்பு ஒன்றுமட்டுமே உள்ளது. எனவே ஆத்திரேயர் என்ற பெயருடன் இப்பதிப்பு வெளிவருகிறது.

உரையைப் பிற உரைகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, இலக்கண மரபு அனைத்திற்கும் வேறுபாடு இல்லையெனினும், ஆங்காங்கே வேறு பாடுகள் காணப்பெறுகின்றன. தெய்வச்சிலையார் உரையின் அமைப்பிலேயே இவ்வுரை அமைந்துள்ளது.

ஆத்திரேயர் என்ற பெயர்க்குறிப்பு மட்டுமே காணப்பெறுவதால், வேறு விளக்கம் அறிய முடியவில்லை. ஆத்திரேய என்ற பெயர், கோத்திரத்தைக் குறிப்பதாகும். இயற்பெயர் அறிய முடியவில்லை.

எவ்வாறு இருப்பினும், இந்நூலகச் சுவடியிலும் காப்பீடு பிரதியிலும் காணப்பெறும் 'ஆத்திரேய' என்ற உரையாசிரியர் பெயரைக் கொண்டே இப்பதிப்பு வெளிவருகின்றது.

தொல்காப்பியத்தின் உரையாசிரியர்கள் வரிசையில் ஆத்திரேயரும் இடம் பெறுகிறார். இப்பணியில் குறைகளைப் பெரிதாக எண்ணாமல் உரையின்நிறை கண்டு, போற்றுமாறு பணிவன்புடன் வேண்டுகின்றேன்.

இப்பதிப்புப் பணியை எனக்கு அளித்த சரசுவதிமகால் நூலகஇயக்குநரும் மாவட்ட ஆட்சித்தலைவருமான உயர்திரு சு. இராசேந்திரநாதன் இ.ஆ.ப. அவர்கட்கும், நூலக நிர்வாக அலுவலர் உயர்திரு. சீ. கிருஷ்ணன் அவர்கட்கும், நூலக வெளியீட்டு மேலாளர் மற்றும் நூலகர் உயர்திரு அ. பஞ்சநாதன் அவர்கட்கும் என் அன்பு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்பதிப்பை இயன்ற அளவு செவ்விதாக அச்சிட்டுதவிய வாண்டையார் அச்சகத்தாருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

தஞ்சாவூர், வ. வேணுகோபாலன்.

1—6—89.

# ஆய்வு முன்னுரை

## தொல்காப்பியர் வரலாறு

சொல்லென்னும் பூம்போது தோற்றிப் பொருளென்னும்
நல்லிருந் தீந்தாது நாறுதலால்-மல்லிகையின்
வண்டார் கமழ்தாமம் அன்றே மலையாத
தண்டாரான் கூடல் தமிழ் (மதுரைக்காஞ்சி)

நறுமணம் கமழும் மல்லிகைபோல் தமிழ் மணம் உலகில் பரவச்செய்த ஒப்பற்ற முதல் நூல் தொல்காப்பியம்.

உலகில் உள்ள மொழிகளில் காலத்தால் முதன்மை பெற்ற முதிர்ந்த மொழி இளமை குன்றாதமொழி, ஆற்றல் சான்றமொழி. தமிழ்த்தாயின் சீரிளமைத்திறம், நம்மைச்செயல் மறந்து வாழ்த்தச் செய்வதில் வியப்பில்லை என்பது உண்மை.

தமிழ்மொழியின் ஆற்றலை, உலகில் நிலைநிறுத்திய பன்னூல்கள் பழமையில் இருந்தனவாகப் பெயரளவில் அறிகின்றோம். ஆனால் முழுமையாக, இந்நாள் தமிழ்மொழிக்குக் கிடைத்த முதுநூல் தொல்காப்பியம் ஒன்றேயாம்.

இறையனார் அகப்பொருள் களவியல் உரைகொண்டும் சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லாரின் கருத்துரை கொண்டும், தமிழ்மொழியின் காலப்பழமையையும் முச்சங்க வரலாற்றையும், முச்சங்கங்கள் வளர்த்த அரியநூல்களைப்பற்றியும் அறிகிறோம். மறைந்த நூல்களைப்பற்றி அறியும்போது இழந்தோமென்ற நிலையில் எண்ணி உள்ளம் வெதும்புகின்றது

எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும், கடைச்சங்கம் வளர்த்த நூல்கள் என்ற பாங்கில், நமக்குக்கிடைத்துள்ளன.

இடைச்சங்கத்து நூல் என்ற பெருமையுடன் கிடைத்த நூல் தொல்காப்பியம் சங்க வரலாற்றைப் பற்றியும் காலத்தைப்பற்றியும் விரிவான ஆய்வுகள் செய்த அறிஞர் பலரும் முடிவு கண்டிலர்.

தொல்காப்பியம் ஒன்றே தமிழ்மொழியில் இந்நாள் காலத்தால் மூத்த படைப்பு என்பதை, மறுக்க இயலாது.

திருவள்ளுவர் இரண்டாயிரம் ஆண்டுக்குமுன் வாழ்ந்தவர் என்று முடிவு செய்து கொண்டோம். ஆனால் அப்பெரியாரின் வரலாறு கிடைக்கவில்லை.

தொல்காப்பியம் இயற்றிய தொல்காப்பியருக்கு வரலாறு அறிய முடிய வில்லை. வரலாறு அறியமுடியாத, பெருமையைக்கொண்டவர்கள் தொல்காப்பி யரும், திருவள்ளுவரும் என்று அமைதி அடைகின்றோம்.

இவ்விருவரைப் போன்றே, எட்டுத்தொகை நூல்களில், பாக்கள் பாடிய புலவர் பலர்க்கும் வரலாறு அறிய முடியவில்லை.

எனினும் தமிழ்மொழியின் பெருமையை உலகில் நிலைநிறுத்தியவர்கள் சங்கத்தமிழ்ப்புலவர்கள்.

தொல்காப்பியருக்கு முன்பே, பல்துறைப் படைப்புக்கள் தமிழ்மொழியில் இருந்த பெற்றியை அறிகின்றோம்.

"சதுமன்ற ஆரியர்வருமுன், சகமுழுதும் நினதாயின் முதுமொழி நீ அநாதியென மொழிதவதும் வியப்பாமோ" என்று பேராசிரியர் சுந்தரம்பிள்ளை யவர்கள் கூறியிருப்பதை, நினைவில் கொண்டிருக்கிறோம்

## தொல்காப்பியர் வரலாறு

தொல்காப்பியத்தை இயற்றிய ஆசிரியரின் இயற்பெயர் அறியச் சான்-றில்லை அவர் இயற்றிய நாலுக்குத் தொல்காப்பியம் என்பதுபெயர். அப்பெயர் கொண்டே தொல்காப்பியர் என வழக்காறு உண்டாயிற்று.

'சமதக்கினி என்ற முனிவரின் புதல்வர் தொல்காப்பியர்' என்பர் நச்சி-னார்க்கினியர். இச்செய்திக்குச் சான்று காணமுடியவில்லை. மற்றும் காப்பிய கோத்திரத்துப் பிறந்தவராதலின் 'காப்பியர்' எனவழங்கப்பெற்றார் என்பதும் பொருந்துவதன்று. இதுவும் சான்றில்லாச்செய்தியாகும்

காப்பியக் குடியில் தோன்றியவர் என்று கூறி, அவ்வாறு ஒரு குடிமரபு இருந்ததாகக் கருத இடமுண்டு என்று கூறுவதற்கும் சான்றில்லை.

காப்பியக்குடி, காப்பியாறு, காப்பியாமூர் என ஊர்கள் பெயர் உள்ளன வென்று கொண்டு, அவை சார்பாக, 'தொல்' என்ற சிறப்புச்சொல்லுடன் சேர்த்துத் தொல்காப்பியனார் என்று வழங்கியதாகலாம் என்பதற்கும் சான்-றில்லை.

தமிழ்ச்சங்க காலப்புலவர் வரிசையில் வெள்ளூர்க்காப்பியன், பல்காப்பி-யன், காப்பியாற்றுக்காப்பியன் எனப்பெயர்கள் இருப்பவைகொண்டு காப்பியம் என்றசொல் குடிப்பெயராகும் என்பதும் சிலர் கருதுவதில் சான்று காணமுடிய வில்லை.

## தொல்காப்பியம்

தொல்காப்பியம் என்பதன் பொருள் பழமையைக் காப்பது என்பதாகும் தொல்-பழமை காப்பு-இயம் காப்பதாகிய நூல்பழம்பெரும் நூல்களைக்கண்டு ஆய்ந்து தொகுத்தநூலே தொல்காப்பியம். தொல்காப்பியத்தைத்தோற்றுவித் தகாரணத்தால் தொல்காப்பியன் எனப் பெயரும் பெற்றார் ஆசிரியர்.

இக்கருத்தை, தொல்காப்பியம் சிறப்புப் பாயிரத்தில் பனம்பாரனார் கூறுகின்றார்.

"முந்து நூல் கண்டு முறைப்பட எண்ணி
புலம் தொகுத்தோனே, யோக்கறு பனுவல்
நிலந்தரு விற் பாண்டியன் அவையத்து" என்பது கொண்டு

சங்க காலத்து நூல்கள் தொகை நூல்கள் என்பதும் அறியலாம்.

தொல்காப்பியத்தில் பெரும்பான்மையாக சூத்திரங்களைக் கூறும்போது, 'என்ப' 'என்மனார் புலவர்','இயல்புணர்ந்தோர் மொழிப','மொழிப' என்றே குறிப்பிடுகின்றார். தாம் பழமையான தமிழ்நூல்களைஆய்ந்துதொகுத்துக்கூறு இன்ற பாங்கினால் தான் அவ்வாறு கூறினாராதல் தெளிவு'என்மனார் புலவர்' என்பது, அவருக்கு முன்னதாக இருந்த புலவர் செய்த நூல் வழக்கைக் குறிப் பிடுவதாகும் என்பதில் மறுப்பிற்கு இடமில்லை.

இறையனார் களவியல் உரைப்பாயிரத்தில் விரிவான செய்திகள் உள்ளன.

## அகத்தியர்

தொல்காப்பியர், அகத்தியரின் மாணவர் என்று கூறப்படும் இலக்கியச் செய்திகள், சான்றுடையன என்று கருதுவதற்கில்லை.

தொல்காப்பிய உரையாசிரியர்களும் சுவைபட இச்செய்தி கூறுகின்றனர். அகத்தியரின் பன்னிரு மாணவர்களில் தொல்காப்பியர்ஒருவர் எல்பதும் தொல் காப்பியத்துக்கு முதல் நூல் அகத்தியம் என்பதும் கூறப்பெறும் செய்தி.

ஆனல்,தொல்காப்பியச்சிறப்புப்பாயிரத்துள்பனம்பாரனார்,அகத்தியரின் மாணவர் தொல்காப்பியர் என்று கூறவில்லை. தொல்காப்பியர் ஆற்றலையும் அறிவையும்,சிறப்பித்துக் கூறிய பனம்பாரனார் தொல்காப்பியரின் ஆசிரியர் அகத்தியர் என்பது உண்மையாயின் கூறியிருப்பர்.

தொல்காப்பியம் வழிநூல் என்று பலரும் கூறுகின்றனர். தொல்காப்பியர், தம் நூலில், தமக்கு முதனூல் என்பதும் கூறுகின்றார்.

"வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதனூலாகும்"

முதனூலைப் பற்றித் தொல்காப்பியர் கூறுவதனால், அகத்தியர் பற்றிக்கூற்றில்லை என்பது தெளிவு. வினையின் நீங்கி விளங்கிய அறிவான் முனைவன் இறைவன் என்பதே பொருள்.

எனவே அகத்தியர் பற்றின செய்திகளைக் கொண்டு, தொல்காப்பியருக்கு அவர் ஆசிரியர் என்றும், அகத்தியம் முதனூல் என்றும் கூறுவது மிகைபடக் கூறுவதாகும்.

ஒரு கதையைக்கூறி, தம் கருத்தைப் பதியவைத்தல் ஒருமரபு என்ற முறையில் சில செய்திகள் உள்ளன.

தொல்காப்பியத்தின் பெருமையைக் கூறுமிடத்து, தமிழ்நாட்டின் பலகூறுகளால் உயர்ந்த நாகரிகச் சிறப்பு. அவ்வாசிரியர் காலத்தில் இருந்த பாங்கினை விளக்குவதாகும் எனல் சுருக்கமான விளக்கமாகும். விரிப்பிற்பெருகும்.

## தொல்காப்பியர் காலம்

காலஆராய்ச்சி,பலரும் ஆய்ந்து முடிவு கண்டிலர். எனினும் கி.மு. 1320க்கும் முன்னர் தொல்காப்பியரின் காலம் எனல் பொருந்தும். (பேராசிரியர் இ. சுந்தரமூர்த்தி அவர்கள் எழுத்ததிகாரம் நூலில்) கூறுவதை ஏற்றுக்கொள்வலாம். இடைச்சங்கத்துக்கும்,கடைச்சங்கத்துக்கும் தொல்காப்பியமே வழிகாட்டியநூல் என்பது இறையனார் களவியல் உரையின் கூற்றாகும் கடைச்சங்கத்தின்காலம் கி.பி முதல் இரண்டு நூற்றாண்டுகள் எனப் பொதுநோக்கில் கூறப்படுவதால் இடைச்சங்கத்தின் காலம் கி.மு. 1320 எனல் பொருந்தும்.

தொல்காப்பியம் பொருளதிகாரம் இளம்பூரணம் பதிப்பாசிரியர் செல்லூர்க்கிழார் என்ற செ.ரெ.இராமசாமிப்பிள்ளை, கழகப்புலவர்,'இற்றை ஐயாயிரம் ஆண்டுக்கு முன்னர்' என்பர்.

மற்றும் புதியஆய்வாளர்களின் கண்ணோட்டத்தில் கடைச்சங்கநூல்களுக்கும் பின்னரே தொல்காப்பியம் எழுந்தது எனவும் கூறுவர்.

தொல்காப்பியத்தில், சில இடைச்செருகல் உள்ளன என்பது அறிஞர்களின் கருத்து. அதனை மறுப்பதும் இயலாது. இருந்தாலும், தொல்காப்பியத்தின் காலப்பழமை கி.மு. 1320 ககு முன்னதே எனல் கொள்வது சால்புடையதாகும்

## உரை

அத்துணைக் காலப்பழமை கொண்ட நூலுக்கு உரை, கி.பி. 11-ம் நூற்றாண்டுக்குப் பின்னரே காணப்பெறுகின்றன. எனின், எத்துணையோ நூல்கள் மறைந்தமைபோல, பழமை உரைகளும் மறைந்தன ஆகலாம் எனக்கருத வேண்டும்.

திருக்குறளின் காலம் இரண்டாயிரத்துக்கு முன்னதாகக் கொண்டிருக்கிறோம். அந்நூலுக்குஉரை தந்தவர்களும் மிகப்பின்னாளில்தான் தோன்றியவர்கள் என்பதும் அறியலாம்.

திருக்குறளுக்குப் பதின்மர் உரை எழுதினார்கள் என்று அறிவோம்.
தொல்காப்பியத்துக்கு, இளம்பூரணர், நச்சினார்க்கினியர், பேராசிரியர், சேனாவரையர், தெய்வச்சிலையர், ஆத்திரேயர் ஆகியோர்உரைஎழுதினார்கள் என அறிகிறோம்.

### பனம்பாரனாரின் சிறப்புப்பாயிரம்

வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிச்
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
புலம் தொகுத்தோனே, போக்கறு பனுவல்
நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து
அறம்கரை நாவின் நான்மறை முற்றிய
அதங்கோட் டாசாற்கு அரில்தபத் தெரிந்து
மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி
பல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப்பியன் எனத் தன் பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமையோனே[1].

இப்பாயிரத்திற்கு உரையாசிரியர்கள் விரிவாக உரையெழுதினர்.
தெளிவுரையாக நாம் அறியத்தக்கது பின்வருமாறு. தமிழ் நிலம் என்பது வடக்கே வேங்கடமலையும் தெற்கில் குமரித்துறையும் என்பதாகும்.

1. பாயிரம் உரைத்த பனம்பாரனார் குறுந்தொகையில் குறிஞ்சித்துறையில் 52-ம் பாடல் எழுதியவர்.

கிழக்கும் மேற்கும் எல்லைகூறாமையால், கீழ்கடலும் மேல்கடலும் எல்லை என்பது உணரவேண்டும்.

இவ்வெல்லை, தொல்காப்பியர் காலத்து தமிழ்நிலத்தின் எல்லை,

இந்தத் தமிழ் நிலஎல்லையில் உள்ள மக்கள் வழங்கும் வழக்கு மரபும், புலவர்களின் செய்யுள் மரபும், ஆகிய இரண்டின் அடிப்படைக் கூறுகளின் எழுத்து, சொல், பொருள் மூன்றையும் தெரிந்து கொண்டார் ஆசிரியர்.

அதன்பின், செந்தமிழ் மரபு இயல்பாக வளம் பெற்ற நிலத்தின் கூறுபாடுகளுடன், அப்போது வழக்கில் பயின்றுவந்த முன் நூல்களைப் படித்துப்பார்த்து முறையாக ஆராய்வுக்கு உரிய கருத்துக்களை ஆராய்ந்தார்.

ஆராய்ந்தவற்றைக்கொண்டு, முந்நூலின் அரியகருத்துக்களைத் தமிழுலகம் தெளிவுற அறியும் வண்ணம் பரந்து காணப் பெற்றவற்றை ஒருசேர ஒரு நூலாகத் தொகுத்தார்.

தாம் தொகுத்தநூலை கடல்கோளால் தமிழ்நிலப்பகுதி மூழ்கியதால் பழந்தமிழ்நூல்கள் மறைந்தனவே என்று ஏங்கி, மீண்டும் தமிழ் செழிக்கும் நிலத்தைத் தேடிக் கொண்ட திருவிற்பாண்டியனின் தமிழ் அவைக்குச் சென்று, அவ்வவையில் தலைமைப்புலவனை திருவிதாங்கோட்டை ஊராக உடைய அறம் கூறுவதையே மேற்கொண்ட அதங்கோட்டு ஆசான் என்பவருக்குப் படித்துக் காட்டினார்.

அதங்கோட்டு ஆசான் ஆசிரியர் தொகுத்த நூலில் கேள்விகள் கேட்க அவருக்கு எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்று மரபுகளையும் ஒன்றுடன் ஒன்று கலவாத முறையில் பழமையில் உள்ளவாறு தொகுத்து எழுதிய எழுத்து முறையைக் கூறினார்.

நான்கு வேதங்களை முற்றக்கற்றவனான அதங்கோட்டாசான்ஆசிரியரின் ஆற்றலைக் கண்டு, இந்திரவியாகர்ண மரபைத் தெளிவாக ஆராய்ந்து தெரிந்தவர் என்று மகிழ்ந்து, இந்நூலில், பழமை நூல்களின் மரபுகளை அழியாமல் காத்துத்தொகுத்தமையால் ஆசிரியர்தொல்காப்பியன் என்றுபுகழ்ந்துகூறினர்

"ஆசிரியர் அதுமுதல்தொல்காப்பியன் என்று தம்மைச்சிறப்பாகஅழைக்கும் வண்ணம் தகுதிகளைப் பெற்றவரானார்."

யான் எழுதிய உரைவிளக்கம், ஆய்வாளர்க்கு மாறுபட்ட நோக்குடையதாகத் தோன்றும் என்பதும் அறிவேன்.

என்னுடையஆய்வறிவுக்குப் புலனானதைக்கூறுவது மேலும் ஆய்வாளர்க்கு உதவும் என்பது என் கருத்து.

தொல்காப்பியம்,தொகுக்கப்பெற்றநூல்;பழமையில் பரந்து சாணப்பெற்ற தமிழ்த்துறை நூல்களைக்கண்டு, ஆய்ந்து ஒருங்கே தொகுத்திருக்கிறார்.

(எழுத்து) தமிழ் மொழியின் இனிமை வாய்ந்த ஒலியமைப்பு முறையையும் எழுத்துக்கள் இணையும்போது ஏற்படும் ஒலி மாற்றநிலையையும் கூறுகிறார்.

(சொல்)தமிழ்ச்சொல்லின் சிறப்பு, உயிர் உள்ளதின் பகுப்பு, உயிரில்லாத பகுப்புமுறை, சொற்களின் பொருள் பொதிந்த அமைப்புக்கு முன்னம் இருந்த விதிகளையும் கூறுகிறார்.

(பொருள்) தமிழ் மக்களின் அகம், புறம் என்ற பகுப்பையும் பாவமைப்பு, நாகரிகமரபு ஆகியவற்றைத் தெளிவுறக் கூறுகின்றார்.

## கடைச்சங்க நூல்களுக்கு முன்னது தொல்காப்பியம்

"சகரக் கிளவியும் அவற்றோரற்றே
அ ஐ ஔ எனும் மூன்றலங் கடையே"
"ஆ ஏ ஒ வெனும் மூவுயிர் ஞகாரத்துரிய
ஆ வோடல்லது யகரமுதலாது"

என்பதனால் சகரமுதற்சொற்கள், தொல்காப்பியர் காலத்தில் இல்லை எட்டுத் தொகை பத்துப்பாட்டு நூல்களில் வருகின்றன.

சமைதல், சலம், சதுக்கம், சந்தி, யூகம், யவனர், சங்கு, சமம் முதலிய சொற்கள் கடைச்சங்க நூல்களில் வருகின்றன.

சிறப்புப்பாயிரத்தில் குறிப்பிடப்பெறும் நான்மறை என்பதற்கு நச்சினார்க்கினியர் கூறுவது அறியலாம்.

"நான்கு கூறுமாய் மறைந்த பொருளும் உடைமையான் மறை என்றார். அவை தைத்திரியமும், பௌடியமும் தலவகாரமும், சாமவேதமுமாக, இனி இருக்கும்,யசுவும்,சாமமும் அதர்வணமும் என்பாரும் உளர்.அது பொருந்தாது இவர் நூல்செய்த பின்னர் வேதவியாதர் சின்னாள் பல் பிணிச்சிற்றறிவினோர்க்கு உணர்தற்கு நான்கு கூறாக இவற்றைச் செய்தாராகலின்"

மேலும் ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன் என்பது பாணினிக்கு முன் இந்திரவியாகரணம் வழங்கியதால், அதனை முற்றகற்றவர் என்பது அறிய வேண்டும்.

"பாணினிமுனிவர் கி.மு. 7-ம் நூற்றாண்டு என்றும் கி.மு. 4-ம் நூற்றுண்டு என்றும் ஆய்வாளர்கூறுவர். பாணினி, தம்வியாகரணத்தில் 64 ஆசிரியர்களைக் குறிப்பிடுகிறார். அவர்களில் இந்திரனும் ஒருவன். எனவே, பாணினிக்கு முன் இருந்த இந்திரவியாகரணமே ஐந்திரம். தொல்காப்பியர் பாணினிக்கு முற்பட்டவர்" என்பர் 1

எனவே, தொல்காப்பியர், தாம் தொகுத்த தமிழ் எழுத்து முறைக்கு, இந்திரவியாகரணத்தையும் ஆய்வுபுரிந்தவர் என்பதே பொருள். தொல்காப்பியரின் ஆற்றலைக் கூறுவதே ஐந்திரம் நிறைந்தவர் என்பதாகும். இதன் ஆய்வு விரிப்பிற்பெருகும்

தொல்காப்பியத்துக்குப் பாயிரம் எழுதிய 'பனம்பாரனார்' சங்ககாலப் புலவர். அவருடைய பாடல் குறுந்தொகையில் தொகுக்கப் பெற்றுள்ளது.

பாயிரத்தில் குறிப்பிடப்பெற்ற பாண்டியனைப்பற்றின செய்திகள் புறநானூறு 9-லும், மதுரைக்காஞ்சி 761—765லும், பதிற்றுப்பத்தில் 9-81-2லும் கலித்தொகை 104லும் காணப்பெறுகின்றன.

பாயிரம்கூறும் அதங்கோட்டாசானைப் பற்றி அறியச் சான்றில்லை.

பன்னிருபடலம், பன்னிரு பாட்டியல் போன்ற நூல்களில் தொல்காப்பியருடன் ஒருசாலை மாணவராக விளங்கிய பலர் பெயர் புலனுகின்றன.

தொல்காப்பியர் காலத்துத் தமிழகத்தின் பகுதியைக் கடல்கொண்டசெய்தி பாயிரம் கூறும் நிலம்தரு திருவிற்பாண்டியனைக் குறிப்பதென்றே சங்கச்சான்றுகளால் அறியலாம்.

"முந்நீர் விழவின் நெடியோன் நன்னீர்பஃறுளி மணலினும் பலவே_புற.9.

"மலிதிரையூர்ந்ததன் மண் கடல் வெளவலின் மெலிவின்றி மேற்சென்று மேவார் நாடிடம்பட, புலியொடுவில் நீக்கி புகழ் பொறித்த கிளர்கெண்டை வலியினால் வணக்கிய வாடாச்சீர் தென்னவன் தொல்லிசை நட்டகுடி".
கலி 104

நிலம் தரு திருவின் நெடியோன்" பதிற்-9-81-2

"தொல்லாணை நல்லாசிரியர் புணர்கூட்டுண்ட புகழ்சால் சிறப்பின், நிலம் தருதிருவின் நெடியோன் போல" மதுரை 761-765

"நிலம்தந்த பேருதவிப் பொலந்தார் மார்பின் நெடியோன் உம்பல்-60-61

1. Tamil Studies by M. சீனிவாச ஐயங்கார்.

மேற்கண்ட சங்கப்பாடல்களில் தமிழகத்தில் கடல்கோள் நிகழ்ந்த செய்தியும் அன்றைய பாண்டியன் நிலந்தருதிருவின் பாண்டியன் என்பதும், அவன் தொல்காப்பியத்தைத் தன் அவையில் அரங்கேற்றியவன் என்பதும் அறியலாம்.

பனம்பாரனார் கூறும் செய்திகளுக்குச் சங்கநூல் சான்றுகள் உள்ளன. 'தொல்லாணை நல்லாசிரியர் புணர் கூட்டுண்ட சிறப்பின்' என்பது சங்கப்-புலவர்கள் ஒன்று கூடிய அவையைக் குறிப்பிட்டது என்பது அறியலாம்.

பனம்பாரனார் பாயிரத்தில் "பாண்டியன் அவையத்து" என்று குறிப்பிடப் படுகின்றது 'சங்கம்' என்ற சொல்லாட்சி இல்லை. இது ஆய்வுக்குரியது.

தொல்காப்பியர், 'சகரக்கிளவி மொழி முதல்வாராது' என்று கூறியதற்கு இணங்கச் சங்கம் என்ற சொல்லாட்சி காணப்பெறவில்லை 'அவை' என்றே உள்ளது. திருவள்ளுவரும் கூத்தாட்டவை என்றார். கூத்தாட்டவையின் பொருள் வேறு, சங்கம் வேறு எனினும், சங்கநூல்களில் யாண்டும் 'சங்கம்' என்ற சொல்லாட்சி இல்லை என்றே கூறமுடிகின்றது.

பனம்பாரனார் கூற்றில் 'சங்கம்' என்று குறிப்பிடவேண்டிய இடத்தில் 'அவை' என்றே உள்ளது.

'தொல்லாணை நல்லாசிரியர் புணர் கூட்டுண்ட' இடம் அவை என்ற பெயரில்தான் விளங்கியதாகும்.

சின்னமனூர்ச்செப்பேட்டில் "மதுராபுரிச்சங்கம் வைத்தும்" என்ற சாசனச் செய்தி கி. பி. 10 நூற்றாண்டில் கூறப்பெறுகிறது

'சங்கத்தமிழ்' என்ற சொல்லாட்சியின் காலப்பழமை குறித்து ஆய்வுபுரிய வேண்டும்.

எனவே, தொல்காப்பியம் இடையூழி காலத்துத் திருவிற்பாண்டியன் அவையத்து அரங்கேற்றப் பெற்றது என்பதும், அவை என்றது புலவர் கூடிய சங்கம் என்பதும் உய்த்துணரத்தக்கன.

தொல்காப்பியத்தைப்பற்றி, ஆசிரியர் பலர், பல்வேறு கருத்து வேறுபாடு கொண்டுள்ளார்கள்.

காலத்தால், கடைச்சங்க காலத்துக்கு முன்னர், கி.மு. 1300 க்கு முன் வாழ்ந்தவர் என்பதில் ஐயமில்லை.

## உரையாசிரியர் ஆத்திரேயர்

தொல்காப்பியத்துக்கு, உரை எழுதியவர்கள் பலர். எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் மூன்று பகுதிகளுக்கும் உரை எழுதியவர் இளம்பூரணர். இவரை உரையாசிரியர் என்றே கூறுவர். இவ்வுரையாசிரியரே இளம்பூரணரே பழமையானவராக ஆய்வாளர் கருதுகின்றனர்.இவ்வுரையாசிரியரின் காலம் கி.பி. 12-ம் நூற்றாண்டு என்பர்.

இளம்பூரணர் உரைக்கு முன்பே, தொல்காப்பியத்துக்கு உரை இருந்தமையை இளம்பூரணரே குறிப்பிடுகின்றார். "அன்றியும் ஒருவன் சொல். 4,20 29, ஒரு திறத்தார் 4,41,45,49. ஒருவன் சொல்லுவது 6,17 ஒருசார் ஆசிரியர் 17, 33, 43, என்பாரும் உளர். 24, 6, ஒரு கருத்து. 51, 53, 253, இருதிறத்தார் ஆசிரியர் 92, ஒரு சாரார் 222, 250, 261, இப்பகுதி ஆசிரியர் 236."

என்பாரும் உளர், என்பர் ஒரு சாரார் என்பன கொண்டு அறியலாம் பிற உரையாசிரியர்கள், சேனாவரையர், நச்சினார்க்கினியர், பேராசிரியர், தெய்வச்சிலையார், கல்லாடனார் ஆகியோராவர்.

இப்பதிப்பின் உரையாசிரியர் ஆத்திரேயர். எனவே,தொல்காப்பியத்துக்கு எழுவர் உரையாசிரியர் என்பது அறிய முடிகின்றது. பெயர் தெரியாத உரையாசிரியர் ஒருவரும் சொல்லதிகாரத்தின் சிலபகுதிகட்கு உரை எழுதியிருப்பதாகவும் அறிய முடிகிறது. (திரு. சுந்தரமூர்த்தி அவர்கள் எழுத்-முன்னுரை பக்-10)

தொல்காப்பியம் முழுமைக்கும் உரைகண்டவர் இளம்பூரணர் ஒருவரே.

தொல்காப்பியம் சொல்லதிகாரத்திற்கு உரை கண்டவர்கள். (இளம்பூரணருடன்) சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடனார்,ஆத்திரேயர் ஆகியோர்எழுத்ததிகாரத்திற்கும்நச்சினார்க்கினியர் உரை எழுதியுள்ளார்.

பேராசிரியர், பொருளதிகாரத்திற்கு, மெய்ப்பாட்டியல், உவமை இயல், செய்யுளியல், மரபியல் ஆகிய நான்கு இயல்களுக்கே உரை எழுதினார். நச்சினார்க்கினியர் உரை,பொருளதிகாரத்துக்கு கிடைக்காத பகுதிகள், மெய்ப்பாட்டியல், உவமை இயல், மரபியல் மூன்றுமாகும்.

இப்பதிப்பின் உரையாசிரியர் ஆத்திரேயரைப் பற்றிச் சில செய்திகளைக் கூறுவது இன்றியமையாததாகும். 'சொல்லதிகாரம் உரை' ஏட்டின் இறுதியில் ஆத்திரேய கோத்திரத்து' என்ற வரிகள் உள்ளன. எனவே ஆத்தி-ரேயர் உரை என்றே இப்பதிப்பில் குறிப்பிடப்பெற்றுள்ளது.

ஆத்திரேயரைப்பற்றி அறிய,வேறுசான்று இப்போது காணமுடியவில்லை. இவ்வுரையாசிரியரின் இயற்பெயர் தெரியவில்லை. ஆத்திரேய கோத்திரத்து என்று சுவடியின் ஏட்டில்காணப்பெறுவதொன்றே கொண்டு உரையாசிரியரை அப்பெயரால் குறிப்பிடப்பெற்றது. ஆத்திரேய கோத்திரத்து என்பதால் இவ்வுரையாசிரியர் அந்தணர் என்பது அறியலாம்.

## ஆத்திரேயன் பேராசிரியன்

தொல்காப்பியத்திற்கு "வலம்புரிமுத்தில் குலம்புரி பிறப்பும்" என்னும் பொதுப்பாயிரம் செய்தான், ஆத்திரேயன் பேராசிரியன்எனவும் பாயிரம் செய்தான் பெயர் கூறியவாறு" என்பது தொல்காப்பியம் பொருளதிகாரம் (653 சூ பேராசிரியர் உரை சைவசித்தாந்தப் பதிப்பு பக். 576) குறிப்பிடுகின்றது. தொல்காப்பியம்பொருளதிகாரத்துக்கு உரைசெய்தவர் ஆத்திரேயன் பேராசி-ரியர் என்பது உண்மை. எனவே, ஆத்திரேயன் என்ற கோத்திரப் பெயர் கொண்டு, இப்பதிப்பின் உரையாசிரியரும் ஆத்திரேயன் பேராசிரியராகலாம் எனக்கருத இடமுண்டு. எனினும், தொல்காப்பியம் பொருளதிகாரத்துக்கு உரைகண்ட ஆத்திரேயன் பேராசிரியரே, சொல்லதிகாரம் உரை எழுதிய ஆத்திரேயர் என்று கூறச்சான்றில்லை.

அன்றியும், தொல்காப்பியம் பொருளதிகாரத்துக்கு உரைவளம் எழுதிய பேராசிரியரின்உரைப்பாங்கும்,கடாவிடைப்பாங்கும்,சொல்லதிகார ஆத்திரேய உரையில் அமைந்திருப்பதாகக் கூறமுடியவில்லை எனவே, இருவரும் வேறு வேறாவர் என்பது கொள்ளவேண்டும்.

## பேராசிரியர் நேமிநாதர்

திரு. மு. இராகவையங்காரவர்கள் எழுதிய சாசனத்தமிழ்க்கவி சரிதம் பக்-66ல் இரண்டாம் குலோத்துங்கன் காலத்துப்புலவர் பற்றி எழுதும்போது, "பேராசிரியர் நேமிநாதன் என்பாரொருவர் இவனது அவையில் இருந்தவர் என்பது தமிழ் நாவலர் சரிதையால் (பா-129) தெரிகின்றது. இந்நேமிநாதர் தொல்காப்பியத்துக்கு உரையிட்ட பேராசிரியரோ என்ற சங்கை உண்டு"

என்றும் பக்-84 ல், 'திரிபுவன வீரதேவன் காலத்தேதான் நேமிநாதம், வச்சணந்திமாலை என்ற இலக்கண நூல்கள் இயற்றிய குணவீர பண்டிதரும் விளங்கினர். மேற்கூறிய நூல் திரிபுவன தேவன் பேரவையில் அரங்கேற்றப்பட்டது என்பது அந்நூற்பாயிர உரையால் விளக்கமாம்.

"பேராசிரியர் நேமிநாதர் பட்டோலை பிடித்தெழுதக் கூத்தர் பாடியது' என்று தமிழ்நாவலர்சரிதையில் பாடலொன்று காணப்படுகின்றது. (செங்கால் மடவன்னம் 129) இந்நேமிநாதரான பேராசிரியர், நேமிநாதம் இயற்றிய குணவீர பண்டிதரோ என்ற சங்கை உண்டு.

## சேனாவரையரும் தெய்வச்சிலையாரும்

மற்றும், திரு. மு ரா. ஐயங்காரவர்கள் (சாசனத்தமிழ்க்கவி சரிதம் பக்-111 112,113) சேனாவரையரைப் பற்றிக் குறிப்பிடும் போது, "தொல்காப்பியச் சொல்லதிகாரத்துப் பெயரியல் பாலறியவரும் உயர்திணைப் பெயர்கள் இன்னவென்பது கூறும் 10-ம் சூத்திரத்துள் 'பெண்மையடுத்த மகனென் கிளவியும்' என்பதன்விசேடஉரையாகப் "புறத்துப்போய்விளையாடும் பேதைப்பருவத்துப் பெண்பாலரைப் பெண்மகன் என்று வழங்குப" என்று இளம்பூரணரும் "விளையாடும் பருவத்துப்பெண்மகளைப் பெண்மகன் என்றல் பண்டையோர் வழக்கு" என்று தெய்வச்சிலையார் எழுதிச்செல்ல, சேனாவரையரோ "புறத்துப் போய் விளையாடும் பேதைப்பருவத்துப் பெண்மகளை மாறோக்கத்தார் இக்காலத்துப் பெண்மகன் என்றும் வழங்குப" என்று பயிலுமிடம் குறிப்பிட்டுக் கூறுகின்றார்.........அவ்வழக்கு, அந்நாட்டுப் பயிறலை தாம் நேரிலறிந்து அது தொல்காப்பியர்காலத்து வழக்குடன் ஒற்றுமைப்படும் அரிய செய்தியை எழுதுகின்றார். "...என்றும் கூறித் தென்பாண்டி நாட்டுக் கொற்கை சூழ்ந்த மாறோக்கம் சேனாவரையருடைய ஊர்" என்பர்.

மேலும் 'சேனாவரையரது அரிய உரைக்கருத்துக்கள் பலவற்றுள் ஒன்றனையும் பேராசிரியர், நேமிநாதமுடையாரும் நன்னூலாரான பவணந்தியாரும் ஆளாமல் இருக்க, அவ்விருவர் உரையையும் சேனாவரையர் மறுப்பதனால் அவ்விருவருக்கும் பிற்பட்டவர் சேனாவரையர்" என்பர். ஆத்திரேயன் பேராசிரியர் என்பாரும், பேராசிரியர் நேமிநாதர் என்பாரும் ஒருவரா, அவர்க்குக் குணவீர பண்டிதர் என்ற பெயர் என்பதும் உளதாகுமா? என்று திரு. மு ரா. ஐயங்காரவர்கள் கூறியிருக்கிறார்கள்.

ஈண்டு யான்குறிப்பிடுவது, ஆத்திரேயர்என்ற கோத்திரப்பெயருடையார் ஒருவர் சொல்லதிகாரத்திற்கு உரை எழுதியவர் என்பது மட்டுமே.

## ஆத்திரேயர் தெய்வச்சிலையார்?

திரு. மு.ரா. அவர்கள் (111,112,113) ஆகியபக்கங்களில் குறிப்பிட்டவற்றில் இளம்பூரணர்உரையும்,தெய்வச்சிலையார்உரையும் சேனாவரையார் உரையும் 'பெண்மகன்என்பது பற்றிக்கொண்ட கருத்தைப் பற்றிவிளக்கப்பெற்றிருப்பதில் தெய்வச்சிலையார் 'பண்டையோர் வழக்கு' என்று விளக்கியிருக்கும் பகுதி இப்பதிப்பான ஆத்திரேயர் உரையில் அமைந்துள்ளது. எனவே ஆத்திரேய கோத்திரத்துத் தெய்வச்சிலையார் என்பது இவ்வுரையாசிரியர் பெயராகும் எனல் கருதுதற்குரியது.

மேலும் திரு மு.ரா. அவர்கள், "அரையன் தெய்வச்சிலையான் எடுத்தகை அழகியான்31/1920விக்கிரமபாண்டியரானதேவச்சிலைப்பெருமான் 391/1916" என்ற சாசனக்குறிப்பில்பயிலும் பெயர்கள்,அந்தணகுலத்தைக் குறிக்கவில்லை.

திரு ராகவையங்காரவர்கள் பழமைஉரையாசிரியர்கள்,தெய்வச்சிலையார், நச்சினார்க்கினியர்,சேனாவரையர்,பரிமேலழகர் போன்றாரது பெயர்கள்,கல்-வெட்டுக்களில்முன்னோர்பலருக்கு வழிநடக்கக்காணப்பெறுவதையும் அரையர் களும் மக்களும் அந்நாளில் அப்பெயர் கொண்டவர்கள் இருந்தனர் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்கள். அவ்வகையில் நச்சினார்க்கினியரைப்பற்றிக், கல்வெட்டுச் சான்று கூறுகிறார்.

பாரத்துவாசி நச்சினார்க்கினியன் என்பது பெருவழக்கு. அவர் அந்தணர் என்பதும் ஆய்வாளர் கண்ட உண்மை.

"கொங்குச் சேரனான வீரராசேந்திரன் மகற்கு (1207-1252) கண்டிய தேவரான நச்சினார்க்கினியன் என்பது பெயர் (192/1909) நறையூர் கிழவன் (SII VI 17) அரையன்நச்சினார்க்கினியன்(SII VI 17)மதுரைமாவட்டம் பழனிப் பிரதேசத்துப் பெரியகோட்டைச் சிவபிரான் திருநாமம் நச்சினார்க்கினியர் என்பது (498/11907) மற்றும் MER 1931-2 P51- முதலியன கண்டுகொள்க"

எனவே அரையர் பெயர்ஒற்றுமைஇருப்பினும் உரையாசிரியர்நச்சினார்க்-கினியர் அந்தணர் என்பது போன்றே, தெய்வச்சிலையாரும் ஆத்திரேய

கோத்திரத்து அந்தணர் எனக்கொள்வது பொருந்துகின்றது.

### காலம்

இளம்பூரணர், கி.பி. 12-ம் நூற்றாண்டினர் என்பதும் கி.பி. 13-ம் நூற்றாண்டின் முற்பகுதியினர் ஆத்திரேயர் தெய்வச்சிலையார் என்பதும் அடுத்து 13-ம்நூற்றாண்டின் பிற்பகுதியினர் சேனாவரையர் என்பதும் 'முரா அவர்கள்' ஆய்வு, முறையே ஏற்றுக்கொள்ளத்தக்கது.

நச்சினார்க்கினியர், கல்லாடனார், சேனாவரையரை அடுத்து வாழ்ந்தவர்கள் ஆவர்.

இப்பதிப்புச்சுவடியில் 'ஆத்திரேயகோத்திரத்து' என்றிருப்பது கொண்டும் தெய்வச்சிலையார் உரை (கரந்தைச்கவியரசு பதிப்பு) ஒப்புமை கொண்டும், இருவரும் ஒருவரே எனக்கருதுகின்றேன்.

இவ்வுரையாசிரியர், இளம்பூரணரை அடுத்து கி.பி. 13-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவராவார் என்பது அறியலாம்.

### சாசனங்களில் உரையாசிரியர் பெயர்கள் பற்றிக் குறிப்பு

**குறிப்பு :** சாசனத்தமிழ்க்கவி சரிதம் மு ரா. ஐயங்கார்

பக்-108-109 சேனாவரையர்

1. திருவழுதி வளநாட்டுத் திருவள்ளூர் சேனாவரையனாயினதத்தன். (TAS VOL III P75)

2. புவனேக சுந்தரநல்லூர் அரையன் ஆண்டானான சேனாவரையன் (SII·V.P. 154)

3. மிழலைக் கூற்றத்துப் புதுக்குடியூரினரான சேனாவரையச் (MEA457 1929-30)

4. ஆற்றூர்ச் சேனாவரையன் 465/1929 – 30 (கி.பி. 1276)

பக்-114-118 நச்சினார்க்கினியர்

1. மதுரைமாவட்டம், பழனிப்பிரதேசத்துப் பெரியகோட்டைச்சிவபிரான் திருநாமம் 498 1907

2. கொங்குச்சேரனான வீரராசேந்திரதேவன் (A.D./207-52) மகற்குக் கண்டிய தேவரான நச்சினார்க்கினியன் என்பதுபெயர் 192/1909

3. நறையூர் கிழவன் அரையன் நச்சினார்க்கினியன் (SII - IV 17) மற்றும் MER 1931-2 P-51 முதலியன

**தெய்வச்சிலையார்**

1. அரையன் தெய்வச்சிலையான் எடுத்தகை அழகியான் 31/1920

2. விக்கிரமபாண்டியன் காயங்கரராயரான தேவச்சிலைப்பெருமாள் 391/1916

பக்-116 பரிமேலழகர்

13-ம்நூற்றாண்டின் பிற்பகுதியினனான விஜயகண்டகோபாலன் 1272-AD 27-ம் ஆட்சியாண்டில் காஞ்சி வரதராஜப்பெருமாள்கோவிலில்உள்ள சாசனம்.

'ஆமூர்'நீலங்கரையர் என்ற சிற்றரசர்ஒருவர் வண்டுவரைப்பெருமானான பரிமேலழகிய பெருமாள் தாதருடைய நந்தவனமொன்றை விலைக்குப் பெற்று அதனை ஜயங்கொண்ட சோழமண்டலத்துநகரம் காஞ்சிபுரத்துத் திருவத்தியூர் அருளாளப் பெருமாளுக்குத் திருமாலைப்புறமாக அளித்தனர்' (இவரே உரையாசிரியர் பரிமேலழகர்.)

ஆத்திரேயரின்இயற்பெயர் பற்றி அறியச்சான்றில்லை.இப்பதிப்பின்உரைப் பாங்குகொண்டு ஆத்திரேயரும் தெய்வச்சிலையாரும் ஒருவரா என்பதும்முடிவு செய்ய இயலவில்லை. எனவே ஆத்திரேயர் உரை என்றே இப்பதிப்பின் உரையாசிரியரைக் குறிப்பிடுகின்றேன்.

உரையாசிரியர்ஆத்திரேயர் அந்தணர்,என்பதும் இவர் சிவபெருமானிடம் பற்றுக்கொண்டவர் என்பதும் அறியமுடிகின்றது.

## நூற்பாக்கள் அமைப்பு

தொல்காப்பியர் தொகுத்து இயற்றிய நூற்பாக்களின் இயல்புபற்றி ஆய்வு செய்ததில் சில உண்மைகளை அறியமுடிகின்றது.

தொல்காப்பியத்தின் நூற்பாக்களை, இப்பதிப்பின் உரையாசிரியர் ஆத்திரேயர் அமைந்திருக்கும் முறைக்கும் இளம்பூரணர் முதலியோரின் அமைப்பு முறைக்கும் வேறுபாடு உள்ளது.

ஒரு நூற்பாவாக இளம்பூரணர்அமைந்திருப்பதை இரண்டு நூற்பாக்களாக ஆத்திரேயர் அமைத்திருக்கிறார். உரியியல் 4,5, ஆகிய இரண்டு நூற்பாக்களை

இளம்பூரணர் ஒரு நூற்பாவாக அமைத்துள்ளார். இதுபோன்றே 8 9 நூற்பாக்கள் இரண்டையும் ஒரு நூற்பாவாகவும், 10,11 இரண்டையும் ஒரு நூற்பாவாகவும் இளம்பூரணர் அமைத்திருக்கிறார்.

27-வது நூற்பா அவற்றுள், தடவென்கிளவி என்று தொடங்கிய ஒருநூற்பாவை இளம்பூரணர் 3-நூற்பாக்களாக அமைத்திருக்கிறார். இதுபோன்று பல நூற்பாக்கள் அமைப்பில் வேறுபாடு கொண்டுள்ளமை அறியலாம். விரிப்பின் பெருகும் என்று முழுவேறுபாடுகளையும் கூறவில்லை.

உரையாசிரியர் ஆத்திரேயரைப் பற்றிக்குறிப்பிடத்தக்கசிறப்பு யாதெனின் சங்கநூல்களில் இவருக்குள்ள புலமை உரை வழியே நன்கு தெரிகின்றது.

சொல்லதிகாரம் உரை விளக்கத்திற்குச் சங்கநூல்களிலிருந்தே மேற்கோள் எடுத்துக்காட்டியுள்ளார்.எட்டுத்தொகை பதினெண்கீழ்க்கணக்கு ஆகியவற்றிலிருந்து சிறந்த மேற்கோள்கள் கூறியுள்ளார்.

மற்றும் சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி முதலிய காப்பியங்களிலிருந்தும் மேற்கோள் பாடல் கூறியிருக்கின்றார்.

தொல்காப்பியத்தின் சிறப்புநோக்கிக் காலத்தால்மிகப்பின்னர்த் தோன்றிய நூல்களைக் குறிப்பிடவில்லை.

'கம்பராமாயணம்' பெருங்காப்பியமாயிருந்தும் ஆத்திரேயர் மேற்கோள் நூல்களில்ஒன்றாக இடம்பெறவில்லை இதனால் கம்பர்காலத்துக்கும்முன்னவர் ஆத்திரேயர் என்பது புலனாகின்றது கம்பர் காலம் கி.பி. 12 ம் நூற்றாண்டு என்பர் அறிஞர். எனவே கி.பி. 12-ம் நூற்றாண்டுக்கு முன்பு விளங்கியவர் ஆத்திரேயர் என்பது குறிப்பிடத்தக்கது.

## உரையாசிரியர் வைதிக சமயத்தவர்

உரைவளம் எழுதுமுன், தொடக்கத்தில், 'எண்ணிய எண்ணிய எய்துப, கண்ணுதல் பகவன் கழல்பணிவோர்க்கே' என்ற இறைவணக்கம் கூறுகின்றார். கண்ணுதல் பகவன் என்பது சிவபெருமானைக் குறிப்பதாகும்.

முழுமுதற்பொருளாகிய சிவபெருமானை வழுத்தியதுடன் அன்றி, வைதிக சமயத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர் என்பதும் அறியலாம். (பக்-13சூ13 உரை) மற்றும் வேதமரபு பற்றியும் உரையில் கூறுவர். (பக்_31 சூ 47 உரை) சொல் என்பது வேதத்தைக் குறிப்பது என்றும், தொல்காப்பியர் வைதிக முனிவன் என்றும் கூறுவர்.

## பிற உரையாசிரியர் பற்றி ஆத்திரேயர் கூறும் கருத்துக்கள்

வேற்றுமையியல் சூ 4-ன் 'முற்றுச்சொல் என்பது முடிந்த சொல் என்று மொழிமாறுதல் காரணமாக எச்சஇயலுள் கூறுகின்றமையாலும் அச்சொல் மற்றொரு சொல்லை அவாவிநிற்றல் பொருந்தாமையானும்' என்று கூறி அகத்தியச் சூத்திரமும் கூறி, 'அது சொல்லறியாதார் உரை' என்க என்பர். சூ 4, பக்-46 இளம்பூரணர் உரையைச் சில இடங்களில் மறுத்துள்ளார் என அறிய முடிகிறது.

## தமிழ் நடையும் வடமொழி நடையும்

ஆத்திரேயர் வடமொழி தமிழ் மொழி ஆகிய இரு மொழிகளிலும் மிக்க புலமை பெற்றவர் என்பது அறியலாம். தமிழ், இலக்கணத்தையும் வடமொழியில் பாணினீயவியாகரணத்தையும் ஒப்பிட்டுத்தமிழ் மொழிக்கு உயர்வு கூறிக் கொள்வதில் பெரும்பற்றுடையவராதலால் 'இது தமிழ் நடை' எனச்சிறப்பித்துக்கூறினர். (பக் 6. சூ-2 உரை)

வடமொழி இலக்கணம்பற்றி, பக்-6, 50, 61, 67, 181, 182, 223 ஆகியவற்றிலிருந்து காணலாம்.

'பல்லோர் அறியும் சொல் என்னாது சிவணி என்றதனுல் பெற்றதென்னையெனின் ஒன்றிரண்டு பலவென வடமொழிப் புலவர் கூறியவாறு போலப் யாகுபடும் வழக்கின்மையின் ஒன்று பலவெனத் தமிழ்நடை இரண்டு பாலாம் என்பர்.

## சங்க காலத்தமிழ்ப்புலவர் மீது பற்று

ஆசிரியர் பேரூர்கிழான், செயிற்றியன், முனிவன், அகத்தியன் இளங் கண்ணன் (28) ஆசிரியன் நல்லந்துவன், கபிலன்-பரணன் (பக்-223)

## சங்ககால மன்னரை நினைவுகூர்தல்

பாண்டியன்மாறன். ஆசிரியன் காத்தான்.

## பாணினியைப்பற்றி

வேற்றுமைத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை மூன்றையும் தம் முடை ஒப்புமை நோக்கி, பாணினியார் தத்புருட சமாசம் என்று குறிப்பிட்டார் என்பர். (பக்-50) செயப்படு பொருள்பற்றி_67

## குறளுக்குச் சிறப்புரை

குறள் 570 'கல்லார்ப் பிணிக்கும் பாடலுக்குச் சிறப்புரை கூறுவர் கடுங் கோல் என்பது அஃதுடைய அரசர்க்குப் பெயராகி வருதலின் அன்மொழித் தொகையாயிற்று' என்பர். (பக்-225)

'அழுக்காறுடையார்க்கு' (குறள் 165) என்ற குறளுக்கு, கேடுபயத்தற்கு அழுக்காறுதானே அமையும், பகைவர் கெடுக்குதல் தப்பியும் வேண

" அற்றார் அழிபசி (குறள் 226) என்ற குறளுக்குப் பொருள் அற்றாரது குணங்களைச் செய்ய ஒருவன், தான் தேடின பொருள் வைத்தற்கு இடம் பெற்றானும் என உரைக்க வேண்டுதலின் ஆம் என்னும் வினைக்குறிப்பு எஞ்சிநின்றது. திருமுருகாற்றுப்படை முதற்பகுதி சிலவரிகளுக்கு, ஆத்திரேயர், சிறப்புரை கூறியிருப்பது சுவை கொண்டதாகும். (பக்-218)

இயற்சொல், திரிசொல், வடசொல், திசைச்சொல் பற்றி (பக்-207-208 விரிவான ஆய்வுரை கூறியுள்ளார் ஆத்திரேயர்.

பொருண்மை நிலைபற்றி (பக்-202)-ல் கூறித் தமிழறிவார் எனச்சிறப்பித்துக் கூறுவர்.

(பக்-67 சிறப்புடைய பொருள்மேல் 'ஒடு' வருமென உரைத்தாரும் உளர் என இளம்பூரணரைக் குறிப்பிடுவர் (வே-ம-சூ 7) ஆயினும் இப்பொருள் பாணினியார்க்கும் ஒக்கும் என்பர்.

(பக்_118) தொல்காப்பியரின் நூல் கருத்துக்குப் பெருமைதந்து, 'இது இவ்வாசிரியர் கருத்தென்று கொள்க' என்பர். பிறநூல் முடிபும் கூறுவர்.

(பக் 28) ஆத்திரேயர் காலத்து கி. பி. 12-ம் நூற்றாண்டின் இறுதியில், தமிழகத்தில் விளங்கிய தலைவர்கள், உடையார் தேவர் என்ற பெயர் கொண்டிருந்தமையைச் சிறப்பினன் ஆகிய பெயர்கள் என்பர்.

(பக்-20 சூ 25) அன்மைக்கிளவி அல்லாத பொருளைச் சுட்டுதல் என்பதற்கு இது ' ஆசிரியர் மதம் ' என்று தொல்காப்பியரைக் குறிப்பிடுகின்றார்.

(பக்-79) வடமொழிச்சார்பான காரக வேற்றுமை பற்றி விளக்கம் கூறுவர்.

(பக்-50-வேறு சூ 9) 'வினை என்பது செயல்வினைக்குறிப்பென்பது வினையினாற் குறிக்கப்பெற்ற பொருள் அஃதாவது செயற்படுபொருள. முதல் என்பதனை வடநூலாசிரியர் காரகம் என்ப, அஃது தொழிலை உணர்த்துவது, அது பல்வகைத்தது செய்வானும் செயப்படு பொருளும் — காரகமும் இடனும் என்ப.

## ஆத்திரேயரின் உரை விளக்கச் சிறப்புக்கள்

**கிளவியாக்கம் :** சொல்லினது தொடர்ச்சி என்றவாறு சொற்கள் ஒன்றோடொன்று தொடர்ந்து தொடர்பு மேலாகும நிலைமையைக் கிளவியாக்கமென்றார் (சூ-1பக்-3)

**உயர்திணை :** சொல்லே என்பதனுள் உயர்தல் என்பது மிகுதல். (பக்-8)

**சிவணி :** ஒன்றிரண்டு பலவென வடமொழிப்புலவர் கூறியவாறு போலப் பாகுபடும் வழக்கின்மையின் ஒன்று பலவெனத் தமிழ்நடை இரண்டுபாலாம் (பக்-6)

**கதிப்பொருண்மை—** தேவர், மக்கள், விலங்கு மூவகை.

**நரகதி ;** மக்களின் தூய்மையில்லாதவர் (பக்-7)

**தோற்றம்**—பெரிது (பக்-11 சூ 10)

**கூறிட்டு மொழிதல்**– செத்தவன் பிறப்பானே என்றவழி பற்றறத் துறந்தானே தானே. பிறனே என்றல் (பக்-13 சூ 13 உரை) இன்றோ நாளையோ வாழ்வு தாலம் (பக்-15 சூ 16)

**வேதாகமத்துணிவு :** உலகும் உயிரும் பரமும் அனாதிபதியும் பசுவும் பாசமும் அனாதி' எனவரும் உலகும் உயிரும், பரமும், பசுவும் பொருந்தும் பொருள் ஆனவாறும் பாசமும் பதியும் இவற்றோடு பொருந்தாத பொருள் ஆனவாறும் காண்க. (பக்-24 சூ 32 உரை)

**சிறப்பினாகிய பெயர்**-இக்காலத்து உடையார், தேவர் என்பன சிறப்பினான் ஆகிய பெயர். (பக்-26 சூ 39 உரை)

**இயம்** - கொட்டுவனவும், எறிவனவும், ஊதுவனமுமாம். (பக்-30 சூ 44உரை)

**ஒருபெயர் பொதுச்சொல் :**

**பார்ப்பார் வேதம் :** என்பது அரசர்க்கும் வணிகர்க்கும் பொதுவாயினும் பார்ப்பார்வேதம் எனத்தலைமைபற்றி வந்தது. (பக் 31 சூ 47)

**குடிமை :** குடியின் தன்மை (பக்-36 சூ 55 உரை)

**காலம் :** என்பது முன்னும் பின்னும் நடுவும் ஆகி என்றும் உள்ளதோர் பொருள்

**உயிர் :** என்பது சீவன்

**உடம்பு :** என்பது மனம், புத்தி ஆங்காரமும் பூத தன் மாத்திரையுமாகிய வினையினாற் கட்டுப்பட்டு எல்லாப்பிறபபிற்கும் உள்ளாகி நிற்பதோர் நுண்ணிய உடம்பு இதனை மூலப்பிரகிருதி எனினும் ஆம்.

**பால்வரை தெய்வம் :** என்பது ஆணும் பெண்ணும் அலியுமாகிய நிலைமையை வரைந்து நிற்கும் பரம் பொருள்.

**வினை :** என்பது ஊழ்.

**பூதம் :** என்பது நிலம், நீர், தீ, வளி, ஆகாயம் ஆகிய ஐம்பெரும் பூதம்.

**ஞாயிறு :** என்பது தீத்திரளாய் உலகு விளக்குவது.

திங்கள்-என்பது நீர்த்திரளாய் உலகிற்கு அருள் செய்வது.

சொல்-என்பது எழுத்தினான் இயன்று பொருள் உணர்த்துவது அச்சொல்லினான் இயன்ற மந்திரம், விடம் முதலாயின தீர்த்தலின் தெய்வம் ஆயிற்று.

சொல்-என்பது வேதம் என்று கொள்ளப்படும் இந்நூல் செய்தான் வைதிக முனிவன் ஆதலின் இவ்வாறு கூறினான்.

பால் உரை நில்லாத தெய்வப்பொருண்மை :

வியாழன், வெள்ளி முதலான கோள்மீனும் பரணி, கார்த்திகை முதலான நாள் மீனும் தாரகையும் பூதம், பேய் எனப்பால் உணர நில்லாதவை (பக்-38 39 சூ 56 உரை)

**அகத்திய சூத்திரம் :** "மற்றுச்சொல் நோக்கா மரபின் அனைத்தும் முற்றி நிற்பது முற்றியல் மொழியே" முற்றுச்சொல்-முடிந்த சொல் (பக் 46 வே-சூ 4 உரை)

**இயற்கை :** இயல்பாகிய கிழமை: பொருட்கு இயல்பாகிய பண்பு (பக்-59 வே-சூ 18 உரை) முதுமை என்பது பரிணாமம்.

**தொகை :** முதற்பெயரோடு செறிவது தொகுத்தல் என்பது செறிதல் (பக்-62)

**கருமம் :** கருமம் என்பது வடமொழிச்சிதைவு செயப்படுபொருளைக் கருமம் என்று வழங்குவப (பக்-64 வே-ம-1 உரை)

**பிண்டப்பெயர்-** திரட்சியான் ஆகிய பெயர் (பக்-66 வே-ம-சூ 7)

**அமைத்தன்**-அமைச்சன் (பக்-67 வே-ம 58 உரை)

**தொன்னெறி**-உயர்ந்தோர் வழக்கினும் சான்றோர் செய்யுளினும் வரூஉம் வேற்றுமை மயக்கம் (பக்-71 வே-ம சூ-17 உரை)

**யாதனுருபு**-என்பது வேற்றுமையில்லாத உருபு, உருபு எனினும் வடிவு எனினும் ஒக்கும் (பக்-76 வே.ம சூ-24 உரை)

**பால்வரை கிளவி**-இடம் வரைந்த சொல் (பக்-78 வே-ம சூ 26 உரை)

**அனுமித்து**-அநுமானம் செய்து (பக்-79 வே-ம சூ 26 உரை)

**காரகம்**-ஐந்தாவதாகிய நீங்கிநிற்றல் காரகம் அன்றோ எனின் காரகம் என்பது தொழில முதல்நிலை ஆதலின் காரகம் அன்று என்பது கருத்து (பக்-80 வே-ம சூ 8 உரை) காரகம்-தொழிற்குறிப்பு.

**ஆகுபெயர் :** யாதானும் ஒரு பொருத்தத்தினால் ஒன்றன் பெயர் ஒன்றாக வருவது (பக் 80-வே-ம-சூ 30 உரை) ஒருசார் ஆசிரியர் வேற்றுமை ஏழெனக் கொண்டனர். (பக்-98)

**பெயரியல் :** கிளவியாக்கம் முதலாக விளிமரபு ஈறாகத் தொடர்மொழி இலக்கணம் கூறி, இனி அத்தொடர்மொழிக்கு உறுப்பாகிய தனிமொழி இலக்கணம் கூறுகின்றார். (பக். 99-பெ-1 சூ உரை)

**இடைச்சொல்-உரிச்சொல் :** பெயர்வினைகளைச் சார்ந்த இடத்தில் தோன்றும். (பக் 101 பெ-5 உரை)

இத்துணையும் கூறப்பட்டது சொல்லாயின் பொருள் குறித்துவரும். அது சொன்மை நிலை, பொருண்மை நிலை என இருவகைப்படும். அவற்றுள் பொருண்மை நிலை, வெளிப்படு நிலை, குறிப்பு நிலை என இருவகைப்படும்.

**சொன்மை நிலை :** பெயர்.வினை எனச்சிறப்புடைச்சொல் இரண்டாம், இடை உரி எனச்சிறப்பில்லாச்சொல் இரண்டாம் இந்நான்கு சொல்லும் தனிமொழிக்குப் பொது இலக்கணம் சொன்மை நிலை இலக்கணமில் வழி உணர்த்தலரிது, குலத்தினான் ஆகிய பெயர் அந்தணன், அந்தணி, அந்தணர். (பக்.106)

**பொருண்மை நிலை :** வழக்கிலும் சான்றோர் செய்யுளகத்தும் பயின்று வரும் வழக்கு தமிழ்நாட்டுப் பிறந்தது தமிழறிவாரை நோக்குதல் இலானும் இலக்கணம் இன்றியும் பாகம் உணர்வார் ஆகலானும் எடுத்து ஓதாராயினர்.

**மரூஉச்சொல் :** நீங்கள் எல்லீரும் என்னும் சொல் எல்லாம் எனவும் மரூஉ வழக்காகி வந்த தன் மரூஉ வழக்கு நீக்கப்படாது என்பது எழுத்ததிகாரத்து மொழிப்புணர்ச்சி கூறுகின்றவழி மரூஉ முடிபு என எடுத்தமையால் கொள்ளப்படும். (பக் 117-பெ-சூ 2 உரை)

**எல்லாம் என்னும் பெயர் :** இப்பெயர் உயர்திணைக்கண் உளப்பாட்டுத் தன்மைக்கே உரித்து என்பது இவ்வாசிரியர் கருத்தென்று கொள்க. இதனைச் செய்யுள் மருங்கினும் என்னும் அதிகாரப்புறனடையான் பிறநூல் முடிபு எனத் தழீஇக் கோடலுமாம். (பக் 118-பெ-32 உரை)

**காலக் குறிப்போடு தோன்றலாவது :** இவன் இருவுடையன் என்றவழி, சொல்வான் குறிப்பு. தொன்று தொட்டுத் திருவுடையன் என்பதாயின் இறந்த காலம் காட்டும். இப்பொழுது என்பதாயின் எதிர்காலம் காட்டும் (பக். 130-வி 16 உரை)

**படர்க்கை :** அஃறிணைக்கே உரித்தாகிவருவது 'கிளியும் பூவையும் தன்வினை

யான் உரைக்குயாதலின் அஃறிணைக்கண் தன்மைவினை இன்றென்பது என்னையெனின், கிளியும் பூவையும் ஆகிய சாதி எல்லாம் உரையாடும் என்னும் வழக்கின்மையானும் அவ்வகை உரைக்குங்கால் ஒருவர் உரைத்ததைக் கொண்டு உரைக்கும் ஆதலானும் ஒருவன் பாடின பாட்டை நரம்புக்கருவியின் ஓசையும் பொருளுப்பட இயக்கியவழிககருவியும் உரையாடிற்றாதல்வேண்டுமாதலானும் அவ்வாறு வருவன மக்கள் வினையாகலான் தன்மை வினையென்றெனக. யான் என்னும் பெயரை விரவுப்பெயர்க்கண் ஓதாது உயர்வினைக்கண் ஓதினமையா-னும் அஃறிணைக்கண் தன்மை இன்றென்க. (பக் 133வி.19 உரை)

செய்ம்மன் இது இலக்கணத்து செய்வது, செய்வன, செய்பவை, செய்யுமவை என வழங்கும் போலும் [பக் 137-கு-28]

**இடைச்சொல் :** பெயரும் வினையும் இடமாக நின்று பொருள் உணர்த்தலின் இடைச்சொல்லாயிற்று. [பக் 155 - இடை சூ-1] 'அவற்றுள்' புணரியல் நிலையிடைப்பொருள் நிலைக்குதவுனை எழுத்ததிகாரத்துக் கூறப்பட்டன. [பக் 157-சூ-2 உரை

'நாளென ஒன்றுபோல் காட்டி' என்ற வழிப்பெயர் குறித்தது எழுதததி-காரத்துள் [சூ 204] என என்னெச்சம் என ஓதுதலான் இவையெல்லாம் வினை. யெச்சம் பொருண்மை உணரவும் பெயரெச்சம் பொருண்மை உணரவும் வரும்- [பக்-162 இடை-சூ-10 உரை]

**மாட்டேறு :** என்று என்னும் இடைச்சொல் அறுவகைப் பொருண்மை குறித்து நிற்கும். இது மாட்டேற்று வகையான் எச்சவாய் பாட்டது என்று கொள்க. இச்சொற்களானும் செய்யும் என்பதன்கண் உம் இடைச்சொல் ஆயினவாறு கண்டுகொள்க. (பக் 164-இடை-சூ-11 உரை)

**குறைச்சொற்கிளவி :** உரிச்சொல் என்பது ஒரு உரிச்சொல் வாய்ப்பட்டாற் சொல்லப்படும் பொருட்குத்தானும் உரித்தாகி வருவது.

எழுத்ததிகாரத்துள் இதனைக்(சூ57) குறைச்சொற்கிளவி என்று ஓதினமை-யால் வடநூலாசிரியர் 'காது' என்று குறிப்பிட்ட சொற்களே இவை என்று கொள்ளப்படும். அவையும் குறைச்சொல்லாகா. (பக் 181-உரி-சூ-1 உரை)

**கௌணம்:** பொருள்படும் வழி உரிச்சொல், சொல்லானும் குறிப்பானும் பண் பானும் புலப்படவரும் இவற்றை வடநூலாசிரியர் 'கௌணம்' என்பர். (பக் 182-உரி-சூ-1 உரை)

**மிகுதல் :** முன்புநின்ற நிலையில் பெரிதாதல் மொழிப்பொருட்காரணம் விழிப் பது தோன்றா, பொருள்மேல் சொல் நிகழ்தல் தொன்றுதொட்டுநின்றதாகலின் உலகினுள் மிக்காரெல்லாம் காரணமின்றி வழங்குபவோ என்னும் ஐயம் குறித்-துக் கூறினார்.

அஃதேல் இன்னஎழுத்து இப்பொருள்படும்எனவும் இத்தன்மைத்துஎனவும் இப்பயன்தரும் எனவும் மற்றைய நூலகத்தும் பிறாண்டும் உரைக்கப்படுதலின் காரணம் உரைப்பரிது என்பது (பக் 203-உரி-சூ-99 உரை)

எழுத்துப் பிரிந்திசைத்தல் இயல்பின்றே ஒருசொற்கு அங்கமாகிய எழுத்-துப்பிரிந்து நின்று பொருள்பட ஒலித்தல் இத்தமிழகத்தில் இல்லை. (பக் 203 சூ-99உரை)

வழி நனிகடைபிடித்து—சான்றோர் செய்யுட்கண் வந்த நெறியை மிகவும் கடைப்பிடித்து.

ஓம்படை—பாதுகாவல்
ஆணை—விதி (பக் 264-சூ-100 உரை)
ஒல்—செயற்படும் என்பது குறித்தது
இருமை—பெருமை
அம்—அழகு, நுணுக்கம்
உருப்பு—வெம்மை
கவ்வை—அலர்
இவறு—லோபம்
பீடு—பெருமை
நொறில்—நுடக்கம், விரைவு
அல்குதல்—தங்குதல்
நீடுதல்—ஆராய்தல்
தணத்தல்—நீக்கம்
நரலை—குற்றம் (பக் 204-205-206 சூ-100 உரை)

செந்தமிழ் நிலம் : செந்தமிழ் நாடாவது வையையாற்றின் வடக்கும் மருத-யாற்றின் தெற்கும் கருவூரின் கிழக்கும் மருவூரின் மேற்கும் என்ப.

இவ்வாறு உரைத்தற்கு இலக்கணம் காணாமையானும் வையையாற்றின் தெற்காகிய கொற்கையும் கருவூரின் மேற்காகிய கொடுங்கோளூரும் மருத-யாற்றின் வடக்காகிய காஞ்சியும் தமிழ் திரிநிலமாதல் வேண்டும் ஆதலானும் அஃது உரையன்று என்பார் உரைக்குமாறு.

"வடவேங்கடம்...நாடி" என்றமையானும் இதனுள் தமிழ்கூறு நல்லுலகம் என விசேடித்தமையானும் கிழக்கும் மேற்கும் எல்லை கூறாது தெற்-கெல்லை கூறியதனால், குமரியின் தெற்காகிய நாடுகளை ஒழித்து வேங்கட மலையின் தெற்கும் குமரியின் வடக்கும் குணகடலின் மேற்கும் குடகடலின் கிழக்குமாகிய நிலம் செந்தமிழ் நிலம் என்று உரைப்ப.
[பக் 206-207 எச்-சூ 1 உரை]

இயற்சொல் — செஞ்சொல்

திரிசொல் — இயற்சொல்லால் உணர்த்தப்படும் பொருள்மேல் வேறுபட்ட வாய்ப்பாட்டான் வருவன திரிசொல்லாகும். திரிசொல் முழுச்சொல்.

உரிச்சொல் — குறைச்சொல், திரிசொல் இயற்சொல்லைச் சாரவைத்ததனால் செந்தமிழ் நாட்டுப்பட்ட தேயந்தோறும் தாம் அறிகுறியிட்டு ஆண்டசொல் என்று கொள்க. [பக் 208-எச்-சூ-3 உரை]

திசைச்சொல்பற்றி : குடபால் இருபுறச்சையமுடன் உறைபுகூரும் தமிழ்திரி நிலங்களும் முடியுடையவர் இடுநில ஆட்சியின் அரசு மேம்பட்ட குறுநிலக் குடுமிகள் பதின்மரும் உடனிருப்பவருமாகிய பன்னிருவர் அரசரும் படைத்த பன்னிருதேயத்தினும் தமிழ்ச்சொல்லாதற்கு விருப்புடையன என்றமையானும் "தமிழ்கூறு நல்லுலகத்து வழக்கும் செய்யுளும் ஆயிருமுதலின், எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி" என நிறுத்துப்பின்னும் 'செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு முந்துநூல்கண்டு' என ஓதியவதனால், சிவணிய நில மாவது, எல்லை குறித்த நிலத்தைச் சார்ந்த நிலமென வேண்டுதலானும். பன்னிரு நிலமாவன, குமரியாற்றின் தென்கரைப்பட்ட பழந்தீபமும், சொல்ல மும், கூபகமும், சிங்களமும், சையத்தின் மேற்குப்பட்ட கொங்கணமும், துளு வமும் குடகமும், குன்றகமும், கிழக்குப்பட்ட கருநாடகமும் வடுகும் தெலுங் கும், கலிங்கமும் என்று கொள்ளப்படும்.

இவற்றுள் கூடகமும் சொல்லமும் கடல் கொள்ளப்படுதலின் குமரியாற்-றின் வடகரைக்கெல்லாம் எனக்குறியிட்டோதினார் போலும்.

பஞ்சத்திராவிடம் எனவும் வடநாட்டார் உரைப்பவாகலானும் அவை ஐந்தும் வேங்கடத்தின் தெற்காதலும் கூடாமை உணர்க. அந்நிலத்து வழங் கும் சொல்லாகிச் செஞ்சொல்லின் வேறுபட்டுச் சான்றோர் செய்யுளகத்து வருவன நீக்கப்படா. (பக் 208-209-எச்-சூ-4 உரை)

வடசொல் : எல்லா நாட்டிற்கும் பொதுவாயினும், வடநாட்டில் பயில வழங்-குதலின் வடசொல் என்றாயிற்று. இன்னும் வடசொல் என்றதனால் தெய்வ வழக்காகிய பாகதச் சொல்லாகி வருவனவும் கொள்க. வடமொழியாவன வாரி, மணி, குங்குமம் என்னும் தொடக்கத்தன. வட்டம், சட்டம், பட்டினம் என்பன பாகதம். (பக் 209-எ-சூ-5 உரை)

சிதைந்த சொற்கள் : திசை நான்கு, சாகரம், சத்தியம், முத்து, பவளம் என வரும். பாகதச் சிதைவாகி வருவனவும் கொள்க.

திரிசொல்லும், திசைச்சொல்லும் பெரும்பான்மை பெயரும் சிறுபான்மை வினையுமாகிவரும் வடசொல், பெயராயல்லது வராது. (பக் 210-எ-சூ-6 உரை)

**மொழிமாற்றியற்கை :** இச்சூத்திரத்துக்குப் பிற உரையாசிரியர் கருத்துப்பற்றி விளக்கம் கூறும் ஆத்திரேயர், 'ஒருசாராசிரியர் உரைப்பவாலெனின்' என்பர் **இளம்பூரணர்** உரையைச் சுட்டியதாகும். (பக் 215-எ-சூ-13 உரை)

**தொகைச்சொல் :** பொருளுணர்த்தும் சொல்லாயினும் தொழிலுணர்த்தும் சொல்லாயினும் இரண்டு சொல் விட்டிசைத்து நில்லாது ஒட்டி நிற்பது. இஃது ஒட்டுப்பெயர் என்னும் குறியும் பெறும். இக்கருத்தைச் **சேனாவரையர்** மேற்கொள்வார். (பக் 219-எ-15 உரை)

**முருகாற்றுப்படையில் 6 வரிகள்** —'உலகம் உவப்ப ...... வாணுதல் கணவன் என்று வரும் ஆறுவரிகட்கு பக் 218 - முதல் 220 வரை விரிவான உரையை ஆத்திரேயர் கூறுகிறார். (எச்-சூ-16 உரை)

**பாணினியார் கூற்று** — 'வேற்றுமைத்தொகை, உவமத்தொகை, வினைத்தொகை,பண்புத்தொகை என்பன தம்முள் ஒருபுடை ஒப்புமையுடையவாதலிற் **பாணினியார்** இவற்றைத் '**தற்புருடசமாசம்**' என்று குறிப்பிட்டார். (பக் 223 எச்-சூ-19 உரை)

**கடுங்கோல்** — கடுங்கோல் என்பது அஃது உடைய அரசர்க்குப் பெயராகி வருதலின் அன்மொழித் தொகையாயிற்று. (பக் 225-எச்-சூ-19 உரை)

**திருக்குறள் 2 பாடல்களுக்கு உரை** — 'அழுக்காறுடையார்க்கு அதுசாலும் ஒன்றார் வழுக்கியும் கேடீன்பது' என்பதனுள் கேடுபயத்தற்கு அழுக்காறு தானே அமையும்.

'அற்றார் அழிபசிதீர்த்தல் அஃது ஒருவன் பெற்றான் பொருள் வைப்புழி' என்பதற்குப் பொருள் அற்றாரது குணங்களைச் செய்ய ஒருவன் தான் தேடின பொருள் வைத்தற்கு இடம் பெற்றானாம் என உரைக்க வேண்டுதலின், ஆம் என்றும் வினைக்குறிப்பு எஞ்சி நின்றது.

**மணிக்காஞ்சி** — காஞ்சி என்பது மேகலைக்குப் பெயராதலின் அது, மணிக்காஞ்சி என்றுஒட்டி மணிமேகலை என்பதன் மேல்வந்தது(பக்241எச்சூ50உரை)

## சொல் அதிகாரம் - சொற்களைப் பாகுபாடு உணர்த்துதலால் சொல்லதிகாரம் என்னும் பெயர்த்தது

### இயல்கூறும் பொருள்

1 **கிளவியாக்கம்** —கிளவியது ஆக்கம். கிளவி-சொல் சொல்லினது தொடர்ச்சி கூறுவது.

2 **வேற்றுமைஇயல்** — பொருள்களை வேறுபடுத்தினமையால் பெற்ற பெயர் வேறுபடுத்தற்குரிய உருபும் கூறியது இயல்-இலக்கணம்.

3 **வேற்றுமை மயங்கியல்** — ஒன்றற்குரிய உருபு ஒன்றனோடு மயங்குதலும் ஒன்றற்குரியபொருள் ஒன்றனோடு மயங்குதலும்கூறினமையால் பெற்றபெயர்.

4 **விளிமரபு** — எழுவகை வேற்றுமையும் அவ்வாறு மயக்கம் உணர்த்தியபின் எட்டாவதாகிய விளி இலக்கணம் உணர்த்தினமையால் பெற்றபெயர்.

5 **பெயரியல்** — கிளவியாக்கம் முதலாக விளிமரபு ஈறாகத் தொடர் மொழி இலக்கணம் கூறி இனி அத்தொடர் மொழிக்கு உறுப்பாகிய தனிமொழி இலக்கணம் கூறுகின்றார். அத்தனிமொழி நான்கினும் பெயர்ச்சொல்சிறந்ததாகலின் பெயரியல் கூறப்பெற்றது.

6 **வினையியல்** —முறையே பெயர் இலக்கணம் கூறியபின் இவ்வியலில் வினை இலக்கணம் கூறப்பெற்றது.

7 **இடையியல்** —' முறையே பெயரும், வினையும் கூறி, பெயரையும் வினையையும் சார்ந்து தோன்றும் இடைச்சொல் இலக்கணம் கூறப்பெற்றது.

8 **உரியியல்** — முறையே பெயர், வினை, இடை கூறியபின் நான்காவதான உரிச்சொல் இலக்கணம் கூறப்பெற்றது. ஒருவாய்பாட்டால் சொல்லப்படும் பொருட்குத்தானும் உரித்தாகிவருவது இதனைக் குறைச்சொற்கிளவி எனப்பெயர் பெறும் என்பர்.

9 **எச்சவியல்** — கிளவி ஆக்கம் முதலாக உரிச்சொல் ஈறாகக்கிடந்த எட்டு ஓத்தினுள்ளும் உணர்த்தாத எஞ்சி நின்ற பொருளை ஈண்டு உணர்த்தினமையால் எச்ச இயல் என்று கூறப்பெற்றது.

**இயல் அமைப்பு :** சொற்களைப் பொருள் நிலைமை நோக்கித் தனிமொழி தொடர்மொழி என இருவகைப்படுத்தினார். செப்பினானும் வினாவினானும் அமைக்க வேண்டும். சொற்களை எடுத்தோதி அத்தொடர் கூறுவதற்கு மயங்கா மரபினவாகி வருவன. எழுவகை வேற்றுமைகள் மயங்குமாறு கூறி அதன்பின் எட்டாவது விளிவேற்றுமை கூறி அதன்பின் தனிமொழிப் பகுதியாகிய பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் பாகுபாடு உணர்த்தி அதன்பின் சொற்கள் விகாரப்படுமாறும், ஒட்டுமாறும் எஞ்சுமாறும் பிறவும் எஞ்சிய எல்லாம் எச்ச இயலுள் கூறினார்.

## இயல்களும் பக்க எண்களும்



## இயல்களின் நூற்பாத்தொகை

| | | |
|---|---|---|
| 1 | கிளவியாக்கம் | 60 |
| 2 | வேற்றுமையியல் | 21 |
| 3 | வேற்றுமை மயங்கியல் | 33 |
| 4 | விளிமரபு | 36 |
| 5 | பெயரியல் | 41 |
| 6 | வினையியல் | 5[illegible] |
| 7 | இடையியல் | 4[illegible] |
| 8 | உரியியல் | 100 |
| 9 | எச்சஇயல் | 66 |
| | சொல்லதிகாரம் நூற்பாத்தொகை | 458 |

# சூத்திர முதற்குறிப்பு அகரவரிசை

# சூத்திரம் கூறும் பொருள்

## கிளவியாக்கம் — 1

## வேற்றுமையியல்—2

## வேற்றுமை மயங்கியல் — 3

## விளிமரபு—I

## பெயரியல் — 5

## வினையியல்—6

## இடையியல்—7

## உரியியல் — 8

## எச்சவியல் — 9

## பாடபேதம்

| | | | |
|---|---|---|---|
| கிள வி-7 | சூ வரி 2 | உளப்பட | உடப்பட |
| சூ-18 | 10-வரி | மறத்தற்கு | மதித்தற்கு |
| சூ-26 | உரை | வந்தது கொண்டு குறிப்புள் ஒன்றாயினும் | வந்தது கண்டு குறிப்புள் வேறாயினும் |
| விளி சூ - 3 | 1-வரி | அவறறுள் | அ[illegible]தாம் |
| சூ-140 | | [illegible]வேற்றுமை } [illegible] } | வி[illegible]டு செ[illegible] |
| வினை-சூ [illegible] | | [illegible] | அ[illegible] |
| வினை-சூ 34 | 1-வரி | [illegible] | தோன்றில் |
| வினை-சூ 38 | 1-வரி | செய்யுங்கிளவி | செய்யுமென்கிளவி |
| வினை சூ 44 | 3-வரி | குறிப்பொடு தோன்றல் | கிளத்தல் |
| வினை-சூ 49 | | தொழிற்படக் } கிளத்தலும் } | தொழிற்படுத் } தடக்கலும் } |
| வினை-சூ 52 | 4-வரி | மூவிடத்தான | அம்மூவிடத்தான |
| | 5-வரி | ஈரிரண்டு | இவ்விரண்டு |
| இடை சூ 23 | | ஏவும் | ஏயும் |
| இடை-சூ 47 | 1-வரி | கிளத்தவல்ல } அன்னபிறவும் } | வேறுபிற } தோன்றலும் } |
| உரி-சூ 3 | | உறுதவ | அவைதாம் உ[illegible] |
| உரி-சூ 3 | உதாரணம் | வாழியநெஞ்சே | வாழியென[illegible] |
| உரி-சூ 28 | உதாரணம் | பழுதுகழிநாள் | பழுது கழிவ[illegible] |
| உரி-சூ 85 | 1-வரி | யானு | ஆனு |
| எச்-19 | 1-வரி | அளவிற்சுவையின் | அளவிற்கவையின் |

குறிப்பு : பாடபேதங்கள் மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே சாமிநாதையாவர்கள் நூலகப்பிரதியில் கண்டவை.

# தொல்காப்பியம்

## சொல்லதிகாரம் (ஆத்திரேயர் உரை)

## 1. கிளவியாக்கம்

**எண்ணிய எண்ணிய எய்துப**
**கண்ணுதல் பகவன் கழல் பணிவோர்க்கே.**

சூ 1 உயர்திணை என்மனார் மக்கள் சுட்டே
அஃறிணை என்மனார் அவரல பிறவே
ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே

இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோ எனின் மேற்சொல்லப்பட்ட சொற்களைப் பாகுபாடு உணர்த்துதலால் சொல்லதிகாரம் என்னும் பெயர்த்து.

சொற்களைப் பொருள்நிலைமை நோக்கித் தொடர்மொழி, தனிமொழி என இருவகைப்படுத்து, அத்தொடர் மொழியை அல்வழித் தொடர், வேற்றுமைத்தொடர் என இருவகைப்படுத்து, அவ்விருவகைத் தொடரும் செப்பும் வினாவுமாக நிகழ்தலான் அவற்றை வழுவாமல் கூறுதற்-காக முற்படச் சொன்னிலைமையால் பொருளை உயர்திணை, அஃறிணை என இருவகைப்படுத்து. அவ்வுயர்திணை உணர்த்தும் சொற்களை ஒருவனை அறியும் சொல் ஒருத்தியை அறியும் சொல் பலரை அறியும் சொல் என மூவகைப் படுத்து, அஃறிணை உணர்த்தும் சொற்களை ஒன்றனை அறியும் சொல் பலவற்றை அறியும் சொல் என இருவகைப்படுத்து, அவ்வகைப்பட்ட சொல்லும் பெயர்ச்சொல்லும் பெயர்ச்சொற்கண்ணும் வினைச்சொற்கண்ணும் வருதலின் பெயரால் பாலறியப்படும் சொல்லும் தத்தம் மரபினற் கூறி-னல்லது.....

செப்பினும் வினாவினும் அமைக்க வேண்டும். சொற்களை எடுத்தோதி அத்தொடர் கூறுவான் மயங்கா மரபினவாகி வருவன எழுவகை வேற்றுமைகள் மயங்குமாறு உணர்த்தி அதன்பின் எட்டா-வதாகிய விளிவேற்றுமை உணர்த்தி அதன்பின் தனிமொழிப் பகுதியாகிய பெயர்ச்சொல் பாகுபாடும் வினைச்சொல் இடைச்சொல் உரிச்சொல் பாகு-பாடும் உணர்த்தி அதன்பின் சொற்கள் விகாரப்படுமாறும் ஒட்டுமாறும்,

எஞ்சுமாறும் பிறவும் உணர்த்தினரென்க. அவற்றுள் அல்வழித்தொடர் கிளவியாக்கத்துள்ளும் வேற்றுமைத் தொடர் வேற்றுமை ஓத்துள்ளும் வேற்றுமை மயங்கியல் விளிமரபு என்பவற்றுள்ளும் வேற்றுமை மயங்கியல் விளி மரபு என்பவற்றுள்ளும் தனிமொழிப் பகுதியாகிய பெயரிலக்கணம் பெயரியலுள்ளும் வினையிலக்கணம் வினையியலுள்ளும் இடைச்சொல் இலக்கணம் இடைச்சொல் ஓத்தினுள்ளும் உரிச்சொல் இலக்கணம் உரிச்சொல் ஓத்தினுள்ளும் எஞ்சிய எல்லாம் எச்ச இயலுள்ளும் உணர்த்தினரென்று கொள்க.

இவ்வகையினன் ஓத்தும் ஒன்பதாயிற்று. பொருளுணர்த்துவன, தனிமொழியாதலால் தொடர்மொழியென வகுத்ததனற் (பயன் என்னை யெனின்) பொருளுணர்த்துதற்குச் சிறப்புடையன தொடர்மொழி என்று கொள்க.

என்னை, சிறந்தவாறெனின் சாத்தன் என்ற வழி பொருண்மை மாத்திரம் உணர்த்துவதல்லது கேட்டார்க்கு ஒரு பயன் பட நில்லாமையின் சாத்தன் உண்டான் எனப் பயன்பட வரும் தொடர் மொழியே பொருள் இனிது விளக்குவது என்க.

சொல்லிலக்கணம் அறிந்ததனற் பயன் கொள்ளும் பயன்... அஃதேதல் தொடர்மொழியாவது தனிமொழியான் ஆம் ஆதலால் தனிமொழி-யின் இடைச்சொல் உரிச்சொல் என்பன தனித்து நிகழாமையின் வாக்கி-யத்தினைப் பிரித்துப் பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச் சொல்லுமெனக் குறியிடவேண்டுதலின் அதன்பிற் கூறப்பட்டது.

இனி எழுவாய் வேற்றுமையையும் விளி வேற்றுமை-யையும் எழுத்ததிகாரத்துள் அல்வழிக்கண் முடித்தாராதலான் அவற்றை வேற்றுமைத் தொடர் என்றல் அமையாதெனின் அவை வேற்றுமை என்று குறி பெறுதலானும் எழுவாய் வேற்றுமைகள் கிளவியாக்கத்தொடு மணந்து கிடப்பவைத்தலானும் விளிவேற்றுமை எழுவாயது திரிபாகலானும் அமையும் என்க.

இவ்வதிகாரத்துக் கூறப்பட்ட ஒன்பது ஓத்தினுள்ளும் முதற்கண்ணது கிளவியது ஆக்கம் என விரியும். அதற்குப் பொருள்

சொல்லினது தொடர்ச்சி என்றவாறு. சொற்கள் ஒன்ரேடொன்று தொடர்ந்து தொடர்பு மேலாகும் நிலைமையைக் கிளவியாக்கமென்ருர். அது வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகி அதனை உடைய ஓத்திற்குப் பெயராயிற்று.

இவ்வோத்தினுள் மு த்திரம் என்னுதலிற்ரோ எனின் சொல்லிலக்கணம் உணர்த்திற்று.

உயர் ணை-சொல்லே' என்பதனுள் உயர்தல் என்பது மிகுதல். திணை என்பது பொருள். என்மனுர் என்பதுஎன்று சொல்லுக புலவர் என்றவாறு. மக்கள் என்பது மக்கள் என்னும் பொதுப் பொருண்மை சுட்டென்பது குறிப்பு. இனச்சுட்டில்லா எனவும் தெய்வம் சுட்டிய எனவும் ஒதிஞராதலின் அது சுட்டப்படும் பொருண்மேல் ஆகுபெயராய் நின்றது. ஏ என்பது ஈற்றசை. அல்லென்பது அல்லாமை. திணை என்பதற்கும் என்மனுர் என்பதற்கும் மேல் உரைத்தவாறே கொள்க. அவரல என்பது மக்கள் அல்லாத பொருள் என்பது. பிற என்பது பிற பொருள். மக்கள் அல்லாத பிறவும் என்னும் உம்மை எஞ்சி நின்றது. ஆய என்பது அவ் என்னும் சுட்டு நீண்டு இசைத்தது. இருதிணையின் என்பது இரண்டு திணையின் கண்ணும் என்றவாறு. கண்ணென்னுமுருபும் உம்மும் தொக்கு நின்றன. இசைக்குமன் சொல்லே என்பது ஒலிப்பன சொல்லாவன என்றவாறு. உலகத்துப் பொருள் எல்லா வற்றினும் மக்கள் என்று சுட்டப்படும் பொருளை உயர்திணை என்று சொல்லுவர். அவரல்லாத பொருளையும் பிற பொருளையும் அஃறிணை என்று சொல்வார் ஆசிரியர். அவ்விரு திணையின் கண்ணும் ஒலிப்பன, சொல்லாவன என்றவாறு.

அஃதே (வ்வாறெனின்) உயர்திணைச்சொல் அஃறிணைச் சொல் எனச் சொல் இருவகையாம் என்பது பெறுதும். அஃதேல் திணையிடமாக அத்திணைக்கண் பிறவற்றை இசைத்தல் வேண்டுமெனின் ஒக்கும். அவ்விரு திணைக்கண்ணும் உளவாகிய பாலினையே சொற்கள் இசைப்பன என்க. மேல் எழுத்ததிகாரம் கூறிச் சொல்லதிகாரம் கூறுவார், சொல்லாவது இத் தன்மையதென இலக்கணம் கூற வேண்டுதலின இச்சூத்திரம் முற்கூறப் பட்டது.

* அஃதற்ருகத் தேவரை அறியும் சொல் அஃறிணையா நமே எனின்,

*2 ம் சூத்திரமாக ஏட்டில் உள்ளது. இது ஆய்வுககுரியது.

அஃதாகாதவாறு முன்னர் கூறப்படும். உயர் என நிற்பத் திணை யென வந்த சொல் எவ்வாறு வந்ததெனின் ஒரு சொல்முன் ஒரு சொல் வருங்கால், தொகை நிலைவகையான் வருதலும் தொகா நிலை வகையான் வருதலும் என இரண்டல்லது இல்லை என்க

அவற்றுட்டொகை நிலைவகையான் வந்தன யானைக்கோடு, பொன்மேனி, கருங்குதிரை, வினைத்தொகை...... கொல்யானை, உவாப் பதி-ஞன்கு, பொற்றெடி என்பன.

தொகாநிலையான் வந்தன: சாத்தன் உண்டான், சாத்தனை வெட்-டினான், உண்டான் சாத்தன், உண்டுவந்தான், நிலம், நீர், தீ, வளி, ஆகாயம் என்பன அவற்றுள் இது தொகை நிலை வகையான் வந்தது. தொகைதாம் பல. அவற்றுள் இது எத்தொகையான் வந்தது எனின் பண்புத்தொகையான் வந்த தென்க. என்னை, மற்றுள்ள பொருள் எல்லாவற்றிலும் உயர்பொருள் என விசேடித்து நின்றமையின் உயர்வானம் என்றாற்போல வினைத்தொகை ஆகா-தோ எனின் 'வினையின் தொகுதி காலத்தின் இயலும்* என்றார்' ஆதலின். ஈண்டுக் காலம் தோன்றாமையின் ஆகாதென்க.

எற்றுக்கு உயர்ந்த மக்கள், உயராநின்ற மக்கள், உயரும் மக்கள் என நல்வினை ஏதுவாக மூன்று காலமும் கோடலாகுமெனின் அவ்வாறு கருதுவார்க்கு வினைத்தொகையுமாம்.

உயர்பொருள் என்றது திணை என்றது என்னையெனின் அவ்-வாறு ஆடல் வேண்டி ஆசிரியர் குறி என்று கொள்க

என்மனார், என என்பன எங்ஙனும் முற்றுச்சொல் திரிந்து நின்றது. குறைக்கும் வழி குறைத்தல் எனபதனால் அப்பகாரம் குறைத்து விரிக்கும் வழி விரித்தல் என்பதனால் மன்னும் ஆரும் இரண்டிடைச் சொல் பெய்து என்ம-னார் என்று ஆயிற்று எனப் பொருளுரைப்பனால் எனின் (இன்பம்) பகரம் குறைக்கின்றது செய்யுளினிடை வேண்டியன்றே. ஆண்டுக் குறைத்த வழி பின்னும் இரண்டெழுத்து விரித்தல் வேண்டுமாயின் குறைத்ததனால் பயன் இன்மையின் இவ்வாறெழுதும் உரை குற்றமென்க. இஃது எதிர்காலச் சொல்லாயினும் இறந்தகாலம் குறித்து நின்றது. இறப்பும் எதிர்வும் மயங்கப்

*தொல் எச்ச 18

பெற்றுமாகலின். அஃது ஆசிரியர் என்னும் பெயர் கொண்டு முடியும். ஈண்டு அப்பெயர் எஞ்சி நின்றது. மக்கள் என்றது சுட்டு என்றது என்னை யெனின் மக்களாவார் நீர்மையரன்றி ஆணும் பெண்ணும் அலியு-மாகிய வடிவு வேற்றுமையுடையாராகலின் அவரெல்லார் மாட்டும் பொது-வாகிக் கிடக்கும் மக்கள் தன்மையைக் குறித்து மக்களிவர் என்னும் பொதுப்பொருண்மை உயர்திணை ஆவது என்பதறிவித்தற்குச் சுட்டென்றார். அவரல்லாத அஃறிணை என்றது பிறவென்றது என்னையெனின் மக்களல்லாத என்ற வழி உயிருடையவற்றையே சுட்டுமென்று ஐயுற்று உயிரில் பொருளும் அஃறிணை என்பது அறிவித்தற்குப் பிற என்றார். இசைக்குமன என்பது செய்மன என்னும் தொழிற்பெயர். அது செய்யுமன என விரிந்து நின்றது. அது சொல் என்னும் பெயர்ப்பயனிலை கொண்டு முடிந்தது.

இனி இச்சூத்திரத்திற்குப் பிறவாற்றானும் கடாவிடை உள்ளுறுத்து உரைப்பிற் பெருகும்.

2 *ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்*
*பல்லோர் அறியுஞ்சொல்லொடு சிவணி*
*அம்முப் பாற்சொல் உயர்திணையவ்வே*

நிறுத்த முறையானே உயர்திணைச்சொல் பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: ஆடூஉ அறிசொல் என்பது ஆண்மகனை அறியுஞ்சொல் என்றவாறு. அறிவார்க்குக் கருவியாகிய சொல் அறிசொல்லாயிற்று. மகடூஉ அறிசொல் என்பது பெண்டாட்டியை அறியுஞ்சொல் என்றவாறு. பல்லோர் அறியுஞ்சொல்லொடு சிவணி என்பது பலரை அறியுஞ்சொல்லொடு கூடிற்று. அம்முப்பாற்சொல் உயர்திணையவ்வே என்பது அம்மூன்று கூற்றுச்சொல் உயர்திணையிடத்த.

உயர்திணைப் பொருள் பற்றி வரும் பெயர்ச்சொல்லும் வினைச் சொல்லும் மூன்று பகுதிய என்றவாறாயிற்று.

எற்றுக்கு? ஆண், பெண், அலி, ஆண்பன்மை, பெண் பன்மை, அலிப்பன்மை இவரெல்லாரும் தொக்க பன்மை எனப் பலவகைப் படுமால் எனின் பொருள் நோக்கிக் கூறினரல்லர். சொல் முடிபு மூவகை

என்று கூறினரென்க. என்னை? அலிப்பொருண்மை மகடூஉ அறிசொல்லானும் (கூறப்படுமாதலானும்) பலரறி சொல்லானும் கூறப்படுதலானும் ஆண்-பன்மையும் பெண்பன்மையும் எல்லாரும் தொக்கபன்மையும் வந்தார் எனவே முடிதலானும் மூவகையாகி அடங்கின. பல்லோர் அறியும் சொல்லென்றது சிவணி என்றதனற் பெற்றதென்னையெனின் ஒன்றிரண்டு பலவென வடமொழிப் புலவர் கூறியவாறு போலப் பாகுபடும் வழக்கின்மையின் ஒன்று பலவெனாத் தமிழ்நடை இரண்டு பாலாம்.

அவற்றுள் உயர்திணை ஒருமை ஆடூஉ அறிசொல், மகடூஉ அறிசொல் என இரு முடிபு உடைத்தாகலின், அச்சொற்கள் பலரறி சொல்லொடு கூடி மூன்று பாலாயின அல்லது பால் உள்ளன இரண்டென்பது அறிவித்தற்கெனக் கொள்க. சிவணி என்பது வினையெச்சமன்று, ஒடுவின் பொருண்மை தோன்ற வந்தது. தாயொடு கூடி மூவர் என்றாற்போல அம்முப்பால் சொல்லும் என உம்மைகொடாதது என்னையெனின் பால் ஐந்துளவாதலின் கொடாமையும் அமையும் என்பது.

*சூ 3 ஒன்றறி சொல்லே பலவறி சொல்லென்று*
*ஆயிரு பாற்சொல் அஃறிணை யவ்வே.*

அஃறிணைச்சொல் பாகுபடுமாறு உணர்த்திற்று.

உரை : ஒன்றனை அறியும் சொல்லும் பலவற்றை அறியும் சொல்லும் என அவ்விரு கூற்றுச்சொல் அஃறிணையிடத்த.

அஃறிணைப் பொருண்மை உயிர்ப்பொருள், உயிரில் பொருள் எனவும் உயிர்ப்பொருட்கண் ஆண் பெண் எனவும் அவை எல்லாம் பொருள் தொறும் ஒருமையும் பன்மையுமாகியும் பலவகைப்படுமாலெனின், அவை யெல்லாம் ஒருமையாயின் வந்தது எனவும் பன்மையாயின் வந்தது எனவும் பன்மையாயின் வந்தன எனவும் வழங்கப்படுதலின் சொல் முடிபு நோக்கிக் கூறினர் என்க. அஃறிணைப் பொருள் பற்றி வரும் பெயர்ச்சொல்லும் வினைச் சொல்லும் இருபகுதியவாம் என்று கொள்ளப்படும்.

*சூ 4 பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்*
*ஆண்மை திரிந்த பெயர்நிலைக்கிளவியும்*

*தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்*
*இவ்வென அறியும் அந்தந்தமக் கிலவே*
*உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்*
எஞ்சியது உணர்த்திற்று.

உரை · பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின் என்பது பெண்மையைக் குறித்த உயர்திணைப் பெண் பிறப்பினுள் என்றவாறு. ஆண்மை திரிந்த பெயர்நிலைக்கிளவியும் என்பது ஆண்மைத்தன்மையில் திரிந்த பெயர்க் கண் நிற்கும் சொல்லும் என்றவாறு. தெய்வம் சுட்டிய பெயர்நிலைக்கிளவி யும் என்பது தெய்வப் பொருண்மையைச் சுட்டிய பெயர்க்கண் நிற்கும் சொல்லும் என்றவாறு இவ்வென அறியும் அந்தம் தமக்கிலவென்பது இவை என அறிய நிற்கும் ஈற்றெழுத்தினைத் தமக்கென இல என்றவாறு. உயர்திணை மருங்கிற்பால் பிரிந்திசைகும் என்பது உயர்திணை மருங்கில் பாலாகிப் பிரிந்திசைக்கும் என்றவாறு.

ஆண்மை திரிந்த பெயராவது பேடி; அச்சத்தின் ஆண்மையில் திரிந்தாரைப் பேடி என்பவாகலான். ஈண்டு அப்பெயர் பெற்றது அலியென்று கொள்க. அலி மூவகைப்படும். ஆணுறுப்பிற்குறையின்றி ஆண்மையிழந்ததூஉம் பெண்ணுறுப்பிற் குறையின்றிப்பெண்தன்மை இழந்ததூஉம் பெண் பிறப்பிற்-றேன்றி பெண்ணுறுப்பின்றி, தாடி தோற்றி ஆண்போலத்திரிவதூஉம் என அவற்றுள் பிற் கூறியது ஈண்டுப் பேடி எனப்பட்டது. அதன்கண் நிற்கும் சொல்லாவது வினைச்சொல். பேடி என்னும் சொல்லொடு தொடரும் வினைச் சொல்லும் தெய்வப்பொருண்மை குறித்த பெயரொடு தொடரும் வினைச் சொல்லும் உயர்திணை ஆண்பால் அறிசொல்லானும் பெண்பாலறி சொல்-லானும் பலர் அறிசொல்லானும் என்றுயிற்று. உதாரணம் முன்னர்க்காட்டுதும்.

தேவரும் மக்களும் விலங்குமாகிய கதிப்பொருண்மை கூறி, நரகதிப் பொருண்மை கூறாததென்னையெனின் அக்கதிமேல் நிகழ்வதோர் வழக்கின்மையின் கூறாராயினர். நரகன் வந்தான், நரகி வந்தாள், நரகர் வந்தார் என வழங்குபவாலெனின் அக்கதியுட்டோன்றுவார் ஆணும் பெண்ணு மாகிப் போகம் நுகர்வர் என்னும் இலக்கணம் இன்மையின் மக்களில் தூய்மை யில்லாதாரை உலகத்தார் வழங்குமாறு அவை என்க. நரகர் துயருழப்பர்

என அக்கதிமேல் தோற்றுவராம். மேலும் வருமாலெனின் அவ்வாறு வருவன பால் கூறப்படுதலன்றி ஆணும் பெண்ணும் வரையறுக்கப்படாத ஒருமைப் பொருளை........உயர்திணை அஃறிணையென வரையறுக்கப்படாத பொருளை உயிர்த்தன்மையைக் குறித்து உயர்திணைப் பன்மையான் வழங்கினர் என்க.

சூ 5 னஃகான் ஒற்றே ஆடூஉ அறிசொல்

நிறுத்த முறையானே ஆடூஉ அறிசொல் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: னகரமாகிய ஒற்றை அந்தமாக உடையசொல் ஆண்பால் உணர வரும் சொல்.

ஏகாரம் ஈற்றசை: அந்தம் என்பது மேலைச்சூத்திரத்தினின்றும் தந்துரைக்கப்பட்டது. இவ்வுரை வருகின்ற சூத்திரங்கட்கும் ஒக்கும்.

உதாரணம்: உண்டான், உண்ணாநின்றான், உண்பான், இவை வினைச்சொல், கரியன், நெடியன் இவை வினைக்குறிப்பு. பாண்டியன், மாயவன் இவை பெயர்.

அஃதேல் வினையியலுள்ளும் 1"அன், ஆன் அள், ஆள் என்னும் நான்கும் ஒருவர் மருங்கிற்படர்க்கைச் சொல்லே" என ஓதுகின்றாராகலின் ஈண்டுக்கூறுதற்குக்காரணம் என்னை எனின் 2"வினையிற்றோன்றும் பாலறி கிளவியும் பெயரிற்றோன்றும் பாலறி கிளவியும் மயங்கல் கூடா" என வழூஉக்காக்கின்றாராதலின், அவை வழுவாமல் கூறுங்கால் அச்சொற்களின் இயல்பு அறியவேண்டும் என்றே அதற்காக ஈண்டுத்தோற்றுவாய் செய்தாரென்க

ஆண்மைப் பொருண்மைக்கண் வரும் பெயர்ச்சொற்கும், வினைச்சொற்கும் ஈற்றெழுத்துப் பல உளவாயினும் அவையெல்லாம் கூறாது னகர ஒற்று ஒன்றனையும் கூறினமையானும் தோற்றுவாய் செய்தவாறு உணர்க. இவ்வுரை முன்வருகின்றவற்றிற்கும் ஒக்கும்.

சூ 6 ளஃகான் ஒற்றே மகடூஉ அறிசொல்

மகடூஉ அறிசொல் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: ளகாரமாகிய ஒற்றை அந்தமாக உடையசொல் பெண்பால் உணரவரும் சொல் என்றவாறு.

---

1 வினை. சூ. 8. 2 வினை சூ. 11.

ஏகாரம் ஈற்றசை உ-ம் உண்டாள், உன்கின்ருர், உண்பாள். இவை வினை, கரியன் குறியள் இவை வினைக்குறிப்பு. அவள் திருவினுள் இவை பெயர்.

சூ 7 ரஃகான் ஒற்றும் பகர இறுதியும்
மாரைக் கிளவி யுளப்பட மூன்றும்
நேரத் தோன்றும் பலரறி சொல்லே

பலரறிசொல் ஆமாறு உணர்த்திற்று.

உரை ; ரகாரமாகிய ஒற்றும் பகாரமாகிய உயிர்மெய்யிறுதியும் மார் என்னும் சொல் உளப்பட இம்மூன்றும் பொருத்தப் பலர் அறி சொல் தோன்றும் என்றவாறு.

மூன்றும் பொருத்த என்ருராயினும் பால்காட்டுவது தனித் தனி என்று கொள்க. பகரமென்னது இறுதி என்றது பகரம் ஒன்ருகவரின் மொழிக்கு ஈருகாமையின் உயிரீறு என்பது தோற்றுதற்கு *"கானந்தகைப்ப செலவு" எனப் பகரம் அஃறிணைக்கும் உரித்தாகலின் உயர்திணைக்கே உரித்தாமாறு என்னையெனின் அஃறிணைக்கண் ஓதுகின்ற அகரம் எல்லாப்புள்ளியினும் ஏறிமுடிதலின் ஆண்டு அகர ஈருகி வந்தது. ஈண்டுப் பகர ஒற்றின் மேல் அல்லது வாராமையின் பகரம் என வேறுபட்டு நின்றது.

மார் என்பது ரகரத்துள் அடங்காதோ எனின் வினைக்கண் ஏனைய போல முற்றி நில்லாது எச்சம் போல வருதலானும் பெயர்க்கண் ஆர் ஈருகி வருமிடத்துப் பன்மை உணர்த்தாத சொற்கள் மார் ஈருகி வரவேண்டுதலானும் வேறுபடுத்தோதப்பட்டது என்க.

உதாரணம் : உண்டனர், உண்ணு நின்றனர், உண்பர், உண்ப, ஆ கொண்மார் வந்தார். இவை வினை. கரியர், நெடியர் இவை வினைக்குறிப்பு. அவர், இவர், நம்பியர், நங்கையர், தாய்மார், தந்தைமார், இவை பெயர். பகர இறுதி அஃறிணைப் பெயராயல்லது வாராது.

சூ 8 ஒன்றறி கிளவி தறட ஊர்ந்த
குன்றிய லுகரத் திறுதியாகும்

அஃறிணை ஒருமை உணரவரும் சொல் உணர்த்துதல் நுதலிற்று.

* கலி. பாலை. 2.

உரை: த, ற, டக்களை ஊர்ந்த குற்றுகரத்தினை ஈறாக உடையன ஒன்றனை அறியும் சொற்களாம் என்றவாறு

உண்டது, உண்ணு நின்றது, உண்பது, கூயிற்று, உண்டு, இவை வினை. கரிது கோடின்று, குண்டுகட்டு: இவை வினைக்குறிப்பு. அது ஒன்று, இரண்டு இவை பெயர்.

சூ 9 அ ஆ வ என வரூஉ மிறுதி
அப்பான் மூன்றே பலவறி சொல்லே
பலவறி சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: பலவற்றை உணரவரும் சொல் அ, ஆ என்னும் உயிரெழுத்தினையும், வ என்னும் உயிர்மெய் எழுத்தினையும், ஈறாக உடைய அக்கூற்று மூன்று.

உதாரணம்: உண்டன, உண்ணு நின்றன, உண்பன, உண்ணு, உண்குவ இவை வினை. கரிய, நெடிய இவை குறிப்பு. பல, சில, யா, வருவ இவை பெயர். வ என்பது அகரத்துள் அடங்காதோ எனின் அடங்காது. என்னை உண் என்னும் தொழிற்சொல் இறந்த காலம் குறித்துழி உண்கின்று, எனவும் எதிர்காலம் குறித்துழி உண்பு எனவும் நின்று அன், அள், அர், அது, அ, என்னும் பால் உணர்த்தும் எழுத்தோடு கூடிப் புணருழி அன்சாரியை மிக்கும், இயல்பாகியும் இறந்த காலத்துக்கண் உண்டனன், உண்டனள், உண்டனர், உண்டது, உண்டன, உண்ட எனவும் நிகழ்காலத்துக்கண் உண்கின்றனன், உண்கின்றனள், உண்கின்றனர், உண்கின்றது, உண்கின்றன எனவும் எதிர்காலத்துக்கண் உண்பன், உண்பள், உண்பர், உண்பது, உண்பன எனவும் வரும். உண்கு என நின்ற எதிர் காலச்சொல், பன்மை உணர்த்தும் அகரம் ஏறியவழி உண்க என வியங்கோட் பொருண்மைப்படும் ஆகலின் ஆங்கு உண்குவ என வகர உயிர்மெய் கொடுக்க வேண்டுதலின் வகரமென ஓதல் வேண்டும் என்க.

சூ 10 இருதிணை மருங்கின் ஐம்பா லறிய
ஈற்றுநின் றிசைக்கும் பதினோ ரெழுத்தும்

*தோற்றந் தாமே வினையொடு வருமே*

மேல் பால் உணர்த்தப்பட்ட எழுந்திற்கெல்லாம் உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை ; இரண்டு திணைக்கண்ணும் ஐந்து பாலும் விளங்க இறுதிக்கண் நின்று ஒலிக்கும் பதினோரெழுத்தும் தாம் தோற்றமாக வினையோடு வரும். தோற்றமாக என்பது பெரிதாக என்பது குறித்து நின்றது. எனவே பெயரோடு வருகை சிறுவரவிற்று என்று கொள்ளப்படும். ஆடூஉ, மகடூஉ, மக்கள், மரம், அவை எனப்பெயர்க்கண் பிறவாற்றானும் வரும் ஆதலின். உதாரணம் மேற்காட்டப்பட்டன.

*சூ 11 வினையிற் றோன்றும் பாலறி கிளவியும்*
*பெயரிற் றோன்றும் பாலறி கிளவியும்*
*மயங்கல் கூடா தம்மர பினவே*

வழூப்படாமல் கூறுமாறு உணர்த்திற்று.

உரை : இவ்வோத்தினுள் செப்பும், வினவும் வழுவாமல் கூறுதல் பயனாதலின், அவை வழுவாமல் கூறுங்கால், வினையிற்றோன்றும் பலரறி சொல்லும் பெயரிற்றோன்றும் பலரறி சொல்லும் தம்முள் மயங்குதல் பொருந்தா. தத்தம் மரபினை உடையவாதலான். ஆதலால் என்பது எஞ்சி நின்றது.

பெயர் என்றதனால் தன் பொருண்மையாகிய திணை பெறுதும். பாலறிசொல் என்றதனால் பால் பெறுதும். வினை என்றதனால் அதற்கு இன்றியமையாத காலமும் இடனும் பெறுதும். தம்மரபின என்றதனால் மரபு பெறுதும். மயங்கல் கூடா என்பதனால் வழூப்படுதல் குற்றம் என்பது பெறுதும்.

திரிபின்றிப் பால் உணர்த்துவது வினையாதலின் சிறப்பு நோக்கி முற்கூறினார். அன்றியும் மேல் நின்ற சூத்திரம் வினையதிகாரப்பட்டு வருதலின் அதனோடு சேரவைத்தார் எனினும் அமையும்.

உதாரணம் : அவன் நெருநல் உண்டான் என்பது இதனுள் அவன் என்னும் உயர் திணைப்பெயர். உயர்திணை வினைகொண்டு முடிதலின் திணை வழுவாதாயிற்று. ஆடூஉப்பெயர் ஆடூஉவினை கொண்டு முடிதலின்

பால் வழுவாயிற்று. படர்க்கைப் பெயரோடு படர்க்கைவினை முடிதலின் இடம் வழுவாதாயிற்று. நெருநல் என்னும் இறந்தகாலப் பெயரோடு இறந்த காலவினை முடிதலின் காலம் வழுவாதாயிற்று. உண்டற்றொழிற்கு உரியானை உண்டான் என்றமையான் மரபு வழுவாதாயிற்று. பிறவும் அன்ன.

இனி வழுவாமாறு: உயர்திணைமூன்று பாலும், அஃறிணை இரண்டு பாலொடு மயங்குதல் திணை வழுவாம். அவை தம்முள் தாம் மயங்குதல் பால்வழுவாம். தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூன்றிடமும் ஒன்றோடொன்று மயங்குதல் இடவழுவாம். இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்னும் மூன்று காலமும் தம்முள் மயங்குதல் கால வழுவாம். எல்லாப் பொருளையும் பயின்ற மரபினல் கூருதது மரபு வழுவாம்.

உதாரணம்: அவன் உண்டது, திணைவழூஉ அவன் உண்டனன், பால்வழூஉ. நீ உண்டனன், இடவழூஉ. நாளை உண்டேன் காலவழூஉ, அவன் மேய்ந்தான். மரபு வழூவு. பிறவும் அன்ன. திணை வழூஉப் பன்னிரண்டு. பால்வழூஉ எட்டு இடவழூஉ ஆறு, காலவழூஉ ஆறு, மரபு வழூஉ வரம்பில.

சூ 12 *ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி*
*ஆண்மை அறிசொற் காகிடன் இன்றே*
ஐயம் அறுத்தலை நுதலிற்று.

உரை:—மேல் உயர்திணை மருங்கில் பால் பிரிந்திசைக்கும் என்று ஓதப்பட்ட பேடி என்னும் பெயர்க்கண் நிற்கும் சொல் ஆண்மை அறிசொற்கு ஆகும் இடன் இலது என்றவாறு எனவே பெண்மை அறிசொற்கும் ஆகும் என்றவாறும்.

*உதாரணம்: ''பெண் அவாய் ஆணிழந்த பேடி அணியாளோ, கண்ணவாத் தக்க கலம்'' என வரும்.

ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி பெண்மை அறி-சொற்கு ஆகும் இடமின்று என எதிர்மறை வாய்பாட்டால் கூறினமை.

* நாலடி 256

யால் சிறுபான்மை ஆடூஉ அறிசொல்லால் வருவன உளவேல் கொள்க.

இச்சூத்திரம் ''பெண்மை சுட்டிய'' என்னும் சூத்திரத்தின் பின் வையாது ஈண்டுக்கூறியது என்னை எனின், பெயரும் வினையும் மயங்காமல் கூறுக என்றாராகலின் பேடி என்பது இவ்வாறு சொல்லத்தகும் என இறந்தது காத்து ஈண்டு ஓதப்பட்டது.

சூ 13 செப்பும் வினாவும் வழாஅ லோம்பல்

இதுவும் வழூஉப்படாமல் கூறுமாறுணர்த்திற்று.

உரை : செப்பினையும் வினாவினையும் வழுவாமல் கூறுக என்றவாறு.

உலகத்துப் பொருள் உணர்த்தும் சொல்லெல்லாம் வினாவும் செப்புமாகிய பொருள்மேல் நிகழ்தலின் அவை வழுவாமல் கூறல் வேண்டும் என்றாராயிற்று.

எனவே வழு எழுவகையாம் என்பது பெற்றாம்.

செப்பு வருமாறு அச்செப்பு நான்கு வகைப்படும். துணிந்து கூறல், கூறுஇட்டு மொழிதல், வினாவிவிடுத்தல் வாய்வாளாதிருத்தல் என்ப.

துணிந்து கூறலாவது, தோன்றியது கெடுமோ என்ற வழி, கெடும் என்றல்.

கூறிட்டு மொழிதலாவது, செத்தவன் பிறப்பானோ என்ற வழி, பற்றறத் துறந்தானோ பிறனோ என்றல்.

வினாவி விடுத்தல் என்பது, முட்டை மூத்ததோ பனை மூத்ததோ என்ற வழி, எம்முட்டைக்கு எப்பனை என்றல். வாய்வாளாமையாவது, ஆகாயப் பூ நன்றோதீதோ *என்றாற்கு உரையாடாமை. இனி அவற்றுள் வினாவழூவாவது வினாவியசொல்லால் பயனின்றி நிற்பது. அஃது ஒருவிரல் காட்டி நெடிதோ குறிதோ என்றலும், ஆகாயப் பூ நன்றோ தீதோ என்றலும்.

செப்பு வழுவாவது. துணிந்து கூறும் வழித்தோன்றியது கெடுமோ என்றாற்க்குக்கெடாதென்றலும் ஒலி செவிக்குப் புலனன்று என்றலும் என்தாய் மலடி என்றலும் உன்னி, தான் கூறிட்டு மொழிய வேண்டும் வழியும் வினாவி விடுக்கவேண்டும் வழியும் வாளாதிருக்க வேணடும் வழியும் துணிந்து கூறின் வழுவாம்.

* மணிமேகலை 235, 249

*சூ 14 வினாவும் செப்பே வினாவெதிர்வரினே*

செப்பின் கண் கிடந்ததோர் வழுவமைத்தலை நுதலிற்று.

உரை:—வினாவும் செப்பாம் நிலையைப்பெறும், வினவப்பட்ட சொல்தானே எதிர்த்து வருமாயின் என்றவாறு

உதாரணம்: சாத்தா உண்ணாயோ என வினாய வழி உண்ணேனோ என்பது உண்ணேன் உண்பல் எனச் செப்பாது உண்பன் என்னும் பொருள்படச் செப்பினமையான் வழுவமைதியாயிற்று.

*சூ 15 செப்பே வழீஇ யினும் வரைநிலை யின்றே*
*அப்பொருள் புணர்ந்த கிளவியான*

உரை:—செப்புவழி இதுவுமது இயினும் நீக்கப்படாது அச் செப்புதற்குப் பொருண்மையைப் பொருந்திய சொல்லின் கண் என்றவாறு. ஏகாரம் சிறப்புப்பற்றி வந்தது, அதிகாரப் புறனடையால் கொள்ளப்படும்.

உதாரணம்:— உண்ணாயோ சாத்தா என்றவழி நீ உண் எனவும் வயிறு குத்திற்று (குற்றிற்று) எனவும் இவ்வாறு வருவன, இவை உண்ணேன், உண்பல் என வாராது உண்ணேன்னும் பொருள்பட வருதலின் வழுவமைதியாயின.

*சூ 16 செப்பினும் வினாவினும் சினைமுதற் கிளவிக்கு*
*அப்பொரு ளாகும் உறழ்துணைப் பொருளே*

செப்பின் கண்ணும் வினாவின் கண்ணும் உறழ் பொருட்கண் வரும் வழுக்காத்தலை நுதலிற்று.

உரை:—சினை முதலாகிய பொருளுணர்த்தும் சொற்குச் செப்பின் கண்ணும் வினாவின் கண்ணும் உறழப்படும் பொருள் அப்பொருளாகும் என்றவாறு. துணை என்பதிணை முதல் என்றனால் பண்பும் தொழிலும் காலமும் இடனும் பொருளும் கொள்க. சினை பற்றி உறழ்தல் பெரும் பான்மையாகலான் முற் கூறப்பட்டது. அப்பொருள் என்றது அவ்வப் பொருட்கு அவ்வப் பொருளே உறழப்படுவது.

அவை ஒரு பொருட்கண்ணும் பிற பொருட்கண்ணும் ஒத்தன கொள்ளப்படும். அவை வினாவின் கண் வருமாறு : வலமுலையோ,

இடமுலையோ பெரிதெனத் தன் பொருட்கண் வந்தது. இவை சினை, இந்நிறமோ அந்நிறமோ நல்லது. இது பண்பு. இந்நடையோ அந்நடையோ நல்லது. இதுதொழில். இன்றோ நாளையோ வாழ்வு, இது காலம், இந்நிலமோ அந்நிலமோ விளைவது, இது இடம். இவளோ, அவளோ கற்புடையாள். இது பொருள்.

இனிச் செப்பு வருமாறு: இம்முலையின் அம்முலை பெரிதென்றாலும் ஒக்குமென்றானும் வரும். பிறவு மன்ன.

இனி அப் பொருள் அல்லாப் பிறிது பொருளொடு உறழ்தல் வருகின்ற சூத்திரத்தான் அமைக்கப்படும்.

*சூ 17 தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும்*
*பகுதிக் கிளவி வரைநிலை இலவே*

மேற்கொள்ளப்பட்ட உறழ்பொருட்கண்வரும் வழுவமைத்தல் நுதலிற்று.

உரை:—சினை முதலாகிய பொருள்களை அவ்வப் பொருளோடு உறழ்தலே அன்றி தகுதியையும் வழக்கினையும் தழுவினவாய் நடக்கும் ஒரு கூற்றுச் சொல் விலக்கும் நிலைமையில என்றவாறு

சினை முதற் கிளவியும், உறழ்பொருளும் அதிகாரத்தான் வந்தன.

தகுதியாவது இ[illegible]ற்கு இது தகுமோ எனப் பண்பினான் ஆதல் தொழிலினான் ஆதல் உற[illegible] நிற்பது. வழக்காவது ஒப்புமையின்றி உலகத்தார் பயில வழங்கப்படுவது.

அவற்றுள் தகுதி பற்றி வந்த வினா: இந்நங்கை கண் நல்லளோ. எனவருவது. இது பண்பு. இம்முகிலோ இவன் கையோ கொடுக்கவல்லது. இதுதொழில்.

செப்பு வருமாறு : கயலிற் கண் நல்ல என்றாலும் ஒக்கும் என்றானும் உரைப்பது.

இனி, வழக்குப் பற்றி வினாவருமாறு : கரிதோ, வெளி-தோ, இருப்பேனோ, போவேனோ, ஊரோ, காடோ, பகலோ, இரவோ, எனவும் தேவராய் வாழ்தல் நன்றோ, நரகத்துள் உறைதல் நன்றோ, எனவும் பிறவும் இவ்வாறு ஒன்றினொன்று பொருத்தமின்றி உலகவழக்கின் கண் வருவன கொள்க.

செப்பு வருமாறு : கரிதன்று வெளிதென்றானும் வெளிதன்று கரிதென்றானும் இவ்வாறே பிறவாற்றானும் உரைப்பன.

இவை மேற்சொல்லப்பட்ட இலக்கணத்தின் வழுவுதலின் அமைதியாயிற்று.

சூ 18 *இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை*
*வழக்கா றல்ல செய்யு ளாறே*

உலகத்துப் பொருளெல்லாம் இனச்சுட்டுடையவும் இன-சுட்டு இல்லவும் என இருவகைப்படும். அவற்றுள் இனச்சுட்டு உடை-யன உறழ்ச்சி வகையுள் அடங்குதலின் இனச்சுட்டில்லாத பொருள்மேல் செப்பு வழிஇ அமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று

உரை:—ஒரு பொருட்கு இனச்சுட்டில்லாத பண்பு கொள் பெயரைக் கொடுத்தல் வழக்கு நெறியல்ல, செய்யுள் நெறி என்றவாறு.

பொருட்கு என்னும் வேற்றுமை ஏற்ற பெயர் எஞ்சி நின்றது. அல்ல என்பது வழக்குப் பன்மை குறித்து வந்தது செய்யுள் நெறி என அமையும். வழக்கு நெறி அல்ல எனல் வேண்டாவோ எனின் நன்கு மறுத்தற்குக் கூறினார் என்க.

இனச்சுட்டல்லாத பொருளாவன : ஞாயிறு, திங்கள், தீ என்பன. அவை "1 மாக்கடல் நிவந்த செஞ்ஞாயிற்றுக் கவினை" எனவும் "2நெடுவெண் திங்களும் ஊர் கொண்டன்றே" எனவும் "வெவ்வெரிக் கொளீஇ" எனவும் வரும்.

இவை வழக்கின் கண் வரின், கருஞாயிறும் கருந்திங்க-ளும் தண்ணெரியும் உளபோலத் தோற்றும். ஆயினும் செய்யுட்கண் அமையும் என்றவாறு.

1. புறம் 4 2. அகம் 2

செம்போத்து என வழக்கின் கண் இனம் சுட்டாது வந்த தால் எனின், அப்பொருட்கு அது பெயர் எனக.

பெருவண்ணான், பெருங்கொள்ளன் என வழக்கின்கண் இனம் சுட்டாது வந்ததால் எனின், பண்பாவது தமக்குள்ளதோர் இயல்பு. ஈண்டு அப்பொருண்மையியல்பு அன்மையான் அஃது உயர்த்துச் சொல்லுதற்கண் வந்த தென்க. பண்பு கொள் பெயர் என்று விசேடித்தமையால் ஏனைப்பெயர்கள் இருவகை வழக்கினும் இனம் சுட்டாது வரப் பெறும் என்க.

*சூ 19 இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்*

உலகத்துப் பொருள் எல்லாம் இயற்கைப் பொருள், செயற்கைப் பொருள் என அடங்குதலின் அவற்றுள் இயற்கைப் பொருள் மேல் செப்பு நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- இயற்கைப் பொருள் என்பது காரணப்பொருள். அதனை இத்தன்மைத்தெனச் சொல்லுக என்றவாறு.

அவை நிலம், நீர், தீ, வளி, ஆகாயம், உயிர் என்பன. அவற்றை நிலம் வலிது, நீர் தண்ணிது, தீ வெய்து, வளி உளரும், ஆகாயம் நிற்கும், உயிர் உணரும் எனக்கூறுக.

நிலம் வலிதாயிற்று எனக்கூறலாகாது. என்னை? ஆக்கம் கொடுப்பின் அதற்கு இயல்பு பிறிதாவான் செல்லுமாகலின் வழுவாம்.

*சூ 20 செயற்கைப் பொருளை ஆக்கமொடுகூறல்*

செயற்கை பொருள்மேல் செப்புநிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : செயற்கைப் பொருளாவது, காரியப் பொருள், அதனை ஆக்கச் சொல்லொடு படுத்துக் கூறுக என்றவாறு.

செயற்கையாய்த் தன்னியல்பின் வேறுபடுவன எல்லாம் செயற்கைப் பொருள் என்று கொள்க.

உதாரணம் : மண் குடமாயிற்று, நூல் ஆடையாயிற்று,

மரம் கதவாயிற்று, எனவும் பைங்கூழ் நல்லவாயின, மயிர் நல்லவாயின, எனவும் வரும். அஃதேல் மயிர் நல்ல, பைங்கூழ் நல்ல என ஆக்கமின்றியும் வருமால் எனின், அவை அக்காலத்தியற்கை பற்றிக் கூறப்பட்டன. முன்பு நின்ற நிலைகண்டு கூறப்பட்டன அல்லவென்க. அதனானேயன்றே வருகின்ற சூத்திரம் கூறல் வேண்டியது.

சூ 21 *ஆக்கம்தானே காரண முதற்றே*

மேலதற்கோர் புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

உரை:- மேற் சொல்லப்பட்ட ஆக்கக்கிளவி காரணத்தை முதலாக உடைத்து

செயர்கைப் பொருளெல்லாம் ஆக்கம்கொடுத்துக்கூறப்படா. காரணம் உள்வழியே ஆக்கம் கொடுப்பது என்றவாறாயிற்று.

சூ 22 *ஆக்கக் கிளவி காரண மின்றியும்*
*போக்கின் றென்ப வழக்கி னுள்ளே*

மேலதற்கோர் புறநடை உணர்த்துதல் நுதலிற்று

உரை: - ஆக்கச் சொல் காரணமின்றியும் வரும் வழக்கினுள் என்றவாறு

எனவே செய்யுளகத்து வரப்பெரு என்றவாறும். போக்கின்று என்பது போகுதல் இன்று என்றவாறு. எனவே வரும் என்று பொருளாயிற்று. உம்மை இறந்தது தழீஇயிற்று.

ஆடை நன்றுயிருந்தது, மணி நன்றுயிருந்தது என நன்றுதற்குக் காரணம் குறியாது வந்தன. பைங்கூழ் நல்லவாயின என இடமும் காலமும் இனமும் சுட்டாது கண்ட காலத்து இயற்கை பற்றி வரும் வழக்குக் கொள்க.

சூ 23 *பான் மயக்குற்ற வையக் கிளவி*
*தானறி பொருள் வயிற் பன்மை கூறல்*

மேற்சொல்லப்பட்ட இருவகைப் பொருட்கண்ணும் ஐயக்கிளவி உண்ர்த்துகிடன்றாராகலின், இச்சூத்திரம் அதன் பகுதியாகியபால்ஐயம், திணை ஐயம் என்னும் இரண்டனுள்ளும் பால் ஐயம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை:—தான் அறிந்த பொருட்கண் பால் மயக்குற்ற ஐயப் பொருண்மையைப் பால் மயக்குற்ற ஐயப் பொருண்மையைப் புன்மையாற் கூறுக என்றவாறு.

தானறி பொருள் என்றமையால் திணையறிந்து பால் அறியாத வழி என்பது பெறப்பட்டது. பால் ஐயம் பெருவழக்கிற்று ஆதலின் முற்கூறப்பட்டது. செய்மைக்கண் தோன்றுவதோர் மக்கட்பிழம்பு கண்டு ஒருவன் கொல்லோ ஒருத்தி கொல்லோ என ஐயுற்றான் அதனைத் தோன்றுவான் எனவும் ஆகாது, தோன்றுவாள் எனவும் ஆகாது, ஆயிடைத்தோன்றுவார் என்க. பைங்கூழ் அழிவு கண்டான், ஒன்று கொல்லோ பல கொல்லோ செய்புக்கன என்க.

சூ 24 உருவென மொழியினும் அஃறிணை பிரிப்பினும்
இருவீற்று முரித்தே சுட்டுங்காலை

திணை ஐயத்தின்கண் சொல் நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை:—உயர்திணை, அஃறிணை என்னும் இரண்டு வேறுபாட்டினையும் சுட்டி ஐயப்படும் காலத்து உருபு எனச் சொல்லினும் உரித்து. அஃறிணை ஒருமையால் கூறுதலும் அப்பொருள் என்றவாறு.

மேல் தானறிபொருள் என்றமையானும் ஈண்டு இருவீற்றும் என்றமையானும் திணை ஐயம் என்பது பெற்றாம், ஐயம் என்பது அதிகாரத்தான் வந்தது. இருவீற்றும் உரித்து என்பதனை, உரித்திருவீற்றும் என்று மொழி மாற்றுக. அஃறினைப் பிரிப்பென்றதனல் பொதுமையிற் பிரிவது ஒருமையாதலின் ஒருமைச் சொல்லால் சொல்லினும் என்றாராகக் கொள்க.

குற்றியோ மகனோ என ஐயுற்றுழி, குற்றியோ மகனோ தோன்றுகின்ற உருபு தோன்றுகின்ற அது என்க.

உருபு என்றதனல் அப்பொருள் மயக்கும் பிழம்பு,வடிவு பிண்டம் என்பனவும் கொள்க.

சூ 25 தன்மை சுட்டலும் உரித்தென மொழிப
அன்மைக் கிளவி வேறிடத்தான

மேல் ஐயப்பட்ட பொருள் துணியப்பட்ட வழிச் சொல் நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை:—துணியப்பட்ட பொருளின் வேருகிய பொருட்கண் வரும் அன்மைக்கிளவி துணியப்பட் பொருளைச் சுட்டலும் உரித்தென்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

தன்மை என்பதனல் பொருட்கு இயல். இயல்பு என்பது பெற்றாம் பெறவே துணியப்பட்ட பொருளாயிற்று. வேறிடத்து அன்மைக்கிளவி தன்மை சுட்டலும் உரித்தெனக் கூட்டுக. உம்மை எதிர்மறை யாதலால் சுட்டாமை பெரும்பான்மை.

உதாரணம்:—குற்றியல்லன் மகன். மகன் அன்று குற்று பெண்டாட்டி அல்லன் ஆண்மகன். ஆண்மகன அல்லள் பெண்டாட்டி, ஒன்றல்ல பல. பலவன்று ஒன்று, இவை துணியப்பட்ட பொருளைச் சுட்டி வந்தன.

குற்றியன்று மகன். மகன் அல்லன் குற்றி. பெண்டாட்டியல்லன் ஆண்மகன். ஆண்மகன் அல்லன் பெண்டாட்டி ஒன்றன்று பல பலவல்லஒன்று. இவை துணியப்படாத பொருளைச் சுட்டி வந்தன

குற்றியல்லன் மகனே எனத்தேற்றே காரம் கொடுத்துழி அன்மை துணியப்பட்ட பொருளைச் சுட்டின், குற்றின் நின்றவற்றும் ஆதலால் அன்மைக் கிளவி அல்லாத பொருளைச் சுட்டுதல் ஆசிரியர் மதம் என்று கொள்க.

சூ 26 அடைசினை முதலென முறைமூன்று மயங்காமை
நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல்

ஒரு சார் மரபு வழுக்காத்தலை நுதலிற்று.

உரை:—வண்ணம் பெற்ற சினையையுடைய பெயர்சொல் முற்பட அடையும், அதன்பின் சினையும், அதன்பின் முதலுமாகி அம்முறை மயங்காமை வழக்குப்பெற்றியலும் என்றவாறு.

வண்ணச் சினைச் சொல் மயங்காமை நடைபெற்றியலும், எனவே வண்ண முதற் சொல் மயங்கியல்லது நடவாதென்றுவாரும்.

இதனாற் பெற்ற பொருள் என்னையெனின் பொருட்கு உளதாகிய பண்பும், சினையும் பொருளொடு அடுத்துக் கூறக் கருதுவனாயின் பொருள்மேல் செல்லாது சினைமேல் செல்லும் என்பது அறிவித்தற்கென்க.

உதாரணம்: செங்கால்நாரை; வண்ணம் சினைமேலேறி முதலொடு முடிந்தது. கருங்கோட்டியானை எனப்பண்பினை முதலொடு அடுத்துக்கூறக் கருதுவனாயின், கருமை யானையின் மேற்செல்லாது கோட்டின் மேற்செல்லுதலின் இம்முறை நடைபெறாதாயிற்று.

வந்தது கொண்டு வாராதது முடித்தல் என்பதனால் வடிவு முதலாய பண்பும் கொள்ளப்படும்.

உதாரணம்: சிறுகண் யானை. பிறவும் அன்ன அடை-யென்று பொதுப்படக்கூறிய அதனால் ஒரு பொருள்மேல் செல்லாதென்க.

உதாரணம்: பெருந்தலைப் புல்லார் நல்லார் என்றவழி பெருந்தலை என்பது புல்லொடு சார்ந்து வருதலின் சொல்லுவான் குறிப்புள் ஒன்றாயினும் அதன்மேல் செல்லாதாயிற்று.

(1) "கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த செவிசெந் சேவலும்" என முறை மயங்கி வந்ததால் எனின் ஆண்டுச் செஞ்செவி என்பது மொழி மாறி நின்றது என்க.

சூ 27 *ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்*
*ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்*
*வழக்கினாகிய உயர்சொற் கிளவி*
*இலக்கண மருங்கிற் சொல்லாறல்ல*

ஒரு சார் பால் வழுவும் திணை வழுவும் அமைத்தலை நுதலிற்று.

உரை: ஒருவரைச் சொல்லும் பன்மைச் சொல்லும் ஒன்றனைச் சொல்லும் பன்மைச் சொல்லும் இலக்கண மருங்கிற் சொல்நெறி அல்ல, வழக்கின் ஆகிய உயர்சொற் கிளவி என்றவாறு.

1 புறம் 283.

உயர்சொல் கிளவி : இருபெயர் ஒட்டுப் பண்புத்தொகை.

உதாரணம் : அவர் வந்தார் எனவரும் ஒருவனையும் ஒருத்தியையும் ஒன்றினையும் இவ்வாறு கூறுதல் வழுவாயினும் உயர்வு குறித்துச் சொன்னமையால் அமைதியாயிற்று.

(1)இயற்பெயர் முன்னர் ஆரைக்கிளவி பலர்க்குரி எழுத்தின் வினையொடு முடியோ என்புழி அடங்காதோ எனின், ஆண்டு நம்பி, நங்கை, சாத்தன் என்னும் பெயர்தானே பால் காட்டுதலால், அதன்மேல் ஓர் இடைச் சொல்லாயிற்று. ஈண்டுப் பன்மைச்சொல்தானே ஒருமைக்கு வருதலின் அடங்காதாயிற்றென்க, வந்தது கொண்டுவராதது முடித்தல் என்பதனால் ஒரு பசுவை எம் அன்னை வந்தாள் எனவும் பெருங்கொள்ளன், பெருவண்ணான் எனவும் வருவன கொள்க.

சூ 28 *செலவினும் வரவினும் தரவினும் கொடையினும்*
*நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும்*
*தன்மை முன்னிலை படர்க்கை என்னும்*
*அம்மூவிடத்தும் உரிய என்ப அவற்றுள்,*
*தருசொல் வருசொல் ஆயிருகிளவியும்*
*தன்மை முன்னிலை ஆயீரிடத்த*
*ஏனை யிரண்டும் ஏனையிடத்த*

ஒரு சார் வினைச்சொற்கு இலக்கணம் உணர்த்தலை நுதலிற்று.

உரை : செலவு வரவு, தரவு, கொடை என்னும் தொழிற்கண் நிலைபெறத்தோன்றும் அந்நாற்சொல்லும் தன்மை முன்னிலை படர்க்கை என்னும் அம்மூன்றிடத்தும் உரியவென்ப ஒரு சாரார் அவற்றுள் தருசொல் வருசொல், ஆயிருகிளவியும் தன்மை, முன்னிலை என்னும் இரண்டிடத்தினும் வரும். ஏனை இரண்டும் படர்க்கைக்கண் வரும்.

இந்நான்கு சொல்லும் மூன்றிடத்தும் வரும் உதாரணம் காட்டுமாறு. எனக்குச் சென்றது, எனக்குக் கொடுத்தது, நினக்குச் சென்றது, நினக்குக் கொடுத்தது அவர்க்குத்தந்தது. அவர்க்குவந்தது

1 இடை 22.

எனக்காட்டுவர்.

இவற்றுள் கொடு என்பதனை 1 கொடுவென் கிளவி படர்க்கையாயினும், தன்னைப்பிறன்போல் கூறுங்குறிப்பில் தன்னிடத்தியலும் என்மனார் புலவர்' என எடுத்து வழுவமைக்கின்றார். ஆகலானும், பிறவும் இத்துணைச் சிறப்பில ஆதலானும், இலக்கண வழக்கு மேற்காட்டப்பட்ட ஆறு காரணமுமே, ஏனைய ஆறும், ஒரு முகத்தான் வழுவமைத்த வாறாகக்கொள்க.

*சூ 29 யாது அவன் என்னும் ஆயிரு கிளவியும்*
*அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றும்*

விரை வழுக்காத்தலை நுதலிற்று.

உரை: யாது அவன் என்று சொல்லப்பட்ட இரண்டு சொல்லும் அறியாத பொருட்கண் பொருந்தத் தோன்றும் என்றவாறு.

நின்னுடு யாது? இப்பண்டியுள்ளது எவன்? எனவரும்.

ஏனைப் பால் உணர்த்தும் வினச்சொற்களெல்லாம் கூருது, இவ்விரண்டினையும் வகுத்துக் கூறியது என்னையெனின் ஆண்டு உளதோர் வழுவமைத்தற்பொருட்டென்க.

*சூ 30 அவற்றுள்*
*யாதென வரூஉம் வினவின் கிளவி*
*அறிந்த பொருள் வயின் ஐயம் தீர்தற்கு*
*தெரிந்த கிளவி ஆதலும் உரித்தே*

விரை வழு அமைத்தலை நுதலிற்று.

உரை: மேற் சொல்லப்பட்டவற்றுள் யாது என்று சொல்லப்பட்ட அறியா பொருண்மைக்கண் நிகழும் சொல், அறிந்த பொருட்கண் ஐயம் தீர்தற்பொருட்டு ஆராய்ந்த சொல் ஆகலும் உரித்து என்றவாறு. உம்மை எச்சவும்மை ஆகலான் ஐயம் அறுத்தலையன்றி அறிவொப்புக் காண்டற் பொருட்டும் வினவப்படும் என்றும் கொள்க. ஐயம் அறுத்தலாவது இச்சொற்குப் பொருள் இது என உணர்ந்தான் ஒரு தலையாகத் துணிதலாற்றுது- அஃதறிவான் ஒருவனை வினுதல். அறிவு ஒப்பக் காண்டலாவது, சொல்

---

1 எச் 49.

இலக்கணம் அறிவான் ஒருவன், அஃது அறிவான் ஒருவனை இதற்குப் பொருள் யாது என வினுதல். பிறவும் அன்ன. இவ்வாறு அறிந்த பொருளை வினுதல் வழுவாயினும் அமைக என்றவாறு.

சூ 31 இனைத்தென அறிந்த சினைமுதற்கிளவி
வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்.

ஒருசார் செப்பு வழுக் காத்தலை நுதலிற்று.

உரை: இத்துனையென வரையறுக்கப்பட்ட சினைக்கிளவியும் முதற் கிளவியும் தொழிற்படு தொகுதிக்கண் உம்மை பெறல் வேண்டும் என்ற வாறு.

என்வே தொழிற்படாத் தொகை இயல்பாகி வரப்பெறும் என்பது பெறுதும்.

உதாரணம்: தேவர் முப்பத்து மூவரும் வந்தார். நங்கை முலையிரண்டும் நல்ல, இவை தொழிற்பட்ட தொகை. "கடுவன் முதுமகன் கல்லாமூலற்கு- வதுவை வந்த வன்பறழ்க்குமரி, இருதோள்பற்ற" என்புழி உம்மை வந்ததன்ருல் எனின் ஆண்டு எஞ்சி நின்றது என்க.

சூ 32 மன்னுப் பொருளும் அன்ன வியற்றே

இது மரபு வழுக் காக்கின்றது

உரை:—பொருந்தும் பொருளும் பொருந்தாப் பொருளும் உறழ வேண்டும் இடத்தும் பொருந்தும் பொருள் கூறுமிடத்தும் உம்மை கொடுத்துச் சொல்லவேண்டும் என்றவாறு.

வேதாகமத் துணிவு ஒருவர்க்கு உணர்த்துமிடத்து "உலகும் உயிரும் பரமும் அனாதி. பதியும், பசுவும் பாசமும் அனாதி" எனவரும் உலகும் உயிரும் பரமும் பசுவும் பொருந்தும் பொருள் ஆனவாறும், பாசமும் பதியும் இவற்ருெடு பொருந்தாத பொருள் ஆனவாறும் காண்க.

"உடம்பும் உயிரும் வாடியக் கண்ணும்" எனவும் 'நோயும் இன்பமும்' எனவும் கூறியவாறும் காண்க. 'மன்னிக் கழிகின்றேன் என்ருன். மன்னுதல் பொருத்தமும் மன்னுமை பொருந்தாமை ஆனவாறு காண்க.

சூ 33 எப்பொருளாயினும் அல்ல தில்லெனின்
அப்பொருள் அல்லாப் பிறிது பொருள் கூறல்

செப்பு வழுவமைதி உணர்த்திற்று.

உரை : யாதானும் ஒரு பொருளாயினும் அல்லது என்னும் சொல்லொடு கூட்டி இல்லை எனக்குறித்தான் ஆயின், அவன் வினவிய பொருள் அல்லாத பிறிதாய பொருளைச் சொல்லுக என்றவாறும்.

எனவே அதனொடு கூட்டிச் சொல்லுக என்றவாறும். 'அப்பொருள் அல்லாப் பிறிது' என்றமையான் அதற்கு இனமாகிய பொருளையே, சொல்லப்படும்.

பயறு உளவோ வணிகரே, என்றார்க்கு உழுந்தல்லது இல்லை என்க கொல்லவன் பட்டு உளவோ என்றால் கோசிகம் அல்லது இல்லை என்க. எனவே, அவன் கருத்திற்கேற்று வினாவிய பொருளை இல்லையென்றது, பிறிது ஒன்று கூறுதல் வழுவாயினும் அப்பொருள் பயத்தலின் அமைதியாயிற்று.

சூ 34 அப்பொருள் கூறின் சுட்டிக் கூறல்

செப்பின்கண் வழுக் காத்தலை நுதலிற்று.

உரை : வினவிய பொருளையே சொல்லி அல்லது இல்லை யெனின், சுட்டிக் கூறுக என்றவாறு.

இப்பயறு அல்லது இல்லை இப்பட்டு அல்லது இல்லை என்க. எனவே அவன் கருத்திற்கு ஏற்ற பயறும் பட்டும் இல என்றவாறும்.

சூ 35 பொருளொடு புணராச் சுட்டுப்பெயராயினும்
பொருள் வேறுபடாது ஒன்றும்மே

செப்பின் வழுவமைத்தலை நுதலிற்று. மேலதற்கோர் புறனடை எனினும் அமையும்.

உரை : வினவப்பட்ட பொருளொடு புணராச் சுட்டுப் பெயரைச் சொல்லினும் பொருள் வேறுபடாது ஒன்றும் என்றவாறு.

இப்பயறல்லது இப்பட்டதல்லது இல்லை என்றது இவை யல்லது இல்லை என்னும் பொருள் வேறுபடாவாறு கண்டுகொள்க.

சூ 36 இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப்பெயர்க் கிளவியும்

*வினைக் கொருங் கியலும் காலம் தோன்றில்*
*சுட்டுப் பெயர்க்கிளவி முற்படக்கிளவார்*
*இயற்பெயர் வழிய என்மனார் புலவர்*

ஒரு பொருள்மேல் பல பெயர் வருவுழிச் செப்புவழு காத்தலை நுதலிற்று.

**உரை:—**ஒரு பொருள்மேல் வரும் இயற்பெயர்ச்சொல்லும் சுட்டுப் பெயர்ச் சொல்லும் வினை கோடற்கு ஒருங்கு இயலும் காலம் தோன்றின் சுட்டுப் பெயர்ச் சொல்லை முற்படச் சொல்லார் இயற்பெயர் வழியவாகக் கூறப்படும் என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

வழிய எனப்பன்மை கூறியது, சுட்டுப்பெயர் பலவாகலான்; இயற்பெயராவன : சாத்தன், கொற்றன், சாத்தி, கொற்றி, சுட்டுப்பெயராவன, அவன், இவன், அவள் இவள் என்பன. இயற்பெயர் என்றுராயினும் வந்தது கொண்டு வாராதது முடித்தல் என்பதனுன் ஒரு பொருட்குப் பெயராகி வரும் நிலப்பெயர் முதலாயினவும் கொள்க.

'ஒருங்கு இயலும் காலம் தோன்றின்' என்றதனுல், ஒரு பெயர் ஒரு வினையொடு முற்றி நில்லாது பல சொல்லொடு தொடருங்காலத்து, இவ்வாறு வருவதென்று கொள்க.

சாத்தன் வந்தான். அவற்குச் சோறு இடுக சாத்தி வந்தாள், அவட்குப் பூக்கொடுக்க எனவரும். பிறவும் அன்ன. சுட்டுப் பெயர் முற்கூறின் ஒரு பொருளாய்த் தோன்றுதாம்.

சூ 37 *முற்படக் கிளத்தல் செய்யுளுள் உரித்தே*

எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தலை நுதலிற்று.

**உரை:—**மேலைச் சூத்திரத்துப் பிற்படக்கூறப்படும் என்று சொல்லப்பட்ட சுட்டுப் பெயரைமுற்படக் கூறுதல் செய்யுட்கண் ஆம் என்றவாறு.

"அவன் அணங்கு நோய் செய்தான் ஆயிழாய் வேலன்
விறன் மிகுதார்ச் சேந்தன் பேர்வாழ்த்தி முகனமர்ந்த
அன்னை அவர் கடப்பந் தாரணியின் என்னை கொல்

பின்னை யதன்கண் வி...ழவு

இதனுள் சேந்தன் என்பதூஉம் அவன் என்பதூஉம் ஒரு பொருள் ஆகியவாறும் சுட்டுமுன் வந்துழியும் பொருள் வேறுபடாமையும் கண்டு கொள்க.

அஃது அற்றாக, சுட்டுப்பல ஆகலின் உரிய எனப்பன்மையிற் கூறாதது என்னையெனின் ஈண்டு அகரச்சுட்டே வருதலின் ஒருமையாகக் கூறப்பட்டது. வந்தது கொண்டு ... முடித்தல் என்பதனால் கொள்க.

'நாயுடை முதுநீர்க் கலித்த'த என்னும் அகப்பாட்டினுள் [1] கூர் எயிற்றரிவை குறுகினள், செத்தனள், கொண்டனள், நாணி நின்றோள், அணங்கருங் கடவுள் அன்றோள் என ஒரு பொருள்மேல் பலபெயர், சுட்டிக் காலம் காட்டியவாறு காண்க.

*சூ 38 சுட்டுமுத லாகிய காரணக் கிளவியும்*
*சுட்டுப் பெயர் இயற்கையிற் செறியத் தோன்றும்*

செப்புவழுக் காத்தலை நுதலிற்று.

உரை:—சுட்டெழுத்து முதலாகிய காரணச்சொல்லும் சுட்டுப்பெயர் இயற்கைப்போலப் பொருந்தத்தோன்றும் என்றவாறு; என்றது பிற்படக் கூறப்படும்.

உதாரணம்: மழை பெய்தது அதனால் யாறு பெருகும் பிறவும் அன்ன.

இது சுட்டுப் பொருள் அடங்காதோ எனின், பொருளை சுட்டாது, தொழிலைச் சுட்டுதலானும் காரணக்கிளவி கருவியாதலானும் வேறு ஓதப்பட்டது.

*சூ 39 சிறப்பின் ஆகிய பெயர்நிலைக் கிளவிக்கும்*
*இயற் பெயர்க் கிளவி முற்படக்கிளவார்*

இதுவும் அது.

உரை: மன்னர் முதலாயினோரால் பெற்ற சிறப்பினால் ஆகிய பெயர்ச்சொற்கும் உம்மையான் நிலப்பெயர் முதலாகிய பெயர்க்கும்

1. அகம் 16.

இயற்பெயர்ச் சொல்லை முற்படக் கூறார் ஆசிரியர் என்றவாறு.

சிறப்பினுன் வந்தன. ஏனுதி, வாயிலான், படைத்தலைவன், அவை ஏனுதி நல்லுதடன், வாயிலான், சாத்தன், படைத்தலைவன் தீரன் இக்காலத்து, உடையார், தேவர் என்பனவும் சிறப்பினுன் ஆகிய பெயர். அருவாளன சாத்தன், பாண்டியன் மாறன், முனிவன் அகத்தியன், ஆசிரியன் காத்தன். பிறவு மன்ன.

சூ 40 ஒரு பொருள் குறித்த வேறு பெயர்கிளவி
தொழில் வேறு கிளப்பின் ஒன்றிடன் இலவே

இதுவுமது.

உரை: ஒரு பொருள் குறித்த வேறு வேறாகிய பெயர்ச் சொல் தொழிலைப் பெயர்தோறும் கிளப்பின் ஒரு பொருளாகி ஒன்றும் இடன் இலஎன்றவாறு

எனவே, பலபெயர் அடுக்கிவரின் ஒரு வினையான் முடிதல் வேண்டும் என்றவாறாம். ஆசிரியன் பேரூர் கிழான், செயிற்றியன், இளங்கண்ணன், சாத்தன் வந்தான் எனவரும் ஆசிரியன் வந்தான். பேரூர் கிழான் வந்தான் செயிற்றியன், இளங்கண்ணன், சாத்தன் வந்தான் எனின் ஒரு பொருளாதல் தோன்றாதாம்.

''விழைந்து முதிர் கொற்றத்து விறலோன் வாழி
கடற் கடம்பெறிந்த காவலன் வாழி
விடர்ச்சிலை பொறித்த வேந்தன் வாழி
பூந்தண் பொருனைப் பொறையன் வாழி
மாந்தரன் சேரல் மன்னவன் வாழிகேள்!

என்றவழி ஒரு பொருள் குறித்த பெயர் தோறும் வினை வந்ததால் எனின் இச்சூத்திரத்தில் தொழில் வேறுகிளப்பின் என்பதற்கு ''மொழிந்த பொருளோடு ஒன்றவைத்தல் என்பதனால் வேறு வேறு வினை கிளப்பின் ஒன்றிடன் இலவெனப் பொருளுரைக்கப் பெயர் தோறும் ஒரு வினைவரின் ஒன்றும் என்பது பெற்றாம். அதனானே இவ்வாறு வருவன அமைத்துக் கொள்க. விழைந்து முதிர்கொற்றத்து விறலோன் வாழ்க,

கடற் கடம் பெறிந்த காவலன் கெடுக எனின் வழுவாம

சூ 41 தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவியென்
றெண்ணும்வழி மருங்கின் விரவுதல் வரையார்

திணை வழுவமைத்தலை நு லிற்று.

உரை: தன்மைப் பெயர்ச்சொல்லும் அஃறிணைப் பெயர்ச் சொல்லும் எண்ணுமிடத்தில் விரவுதல் நீக்கார் என்றவாறு.

உதாரணம்: ''யானும் என் எஃகமும் சாறும்'' அவனுடைய— யானைக்குஞ் சேனைக்கும் போர்' எனவரும், நீயும் நின் படைக்கலமும் சாறீர் அவனும் அவன் படைக்கலமும் சாறும், என ஏனையிடத்தும் வருமாவெனின் முன்னிலை வினை இருவினைக்கும் பொதுவாகலானும் படர்க்கை வினைக் கண் செய்யும் என்னும் முற்றுச்சொல் இரு திணைக்கும் பொதுவாய் வருதலானும் அவை ஆண்டு அடங்குமென்க

சூ 42 ஒருமை எண்ணின் பொதுப் பிரி பாற்சொல்
ஒருமைக் கல்லது எண்ணுமுறை நில்லாது

உயர்திணைப் பொருள்மேல் எண்ணுமுறை நிகழுமாறு உணர்த்திற்று.

உரை:— ஒருமை எண்ணின் பொதுமையாகிய ஒருவர் என்னும் சொல்லினின்றும் பிரிந்த ஒருவன் ஒருத்தி என்னும் சொல் அவ் வொருமைக்கல்லது எண்ணுமுறைக்கண் ஓடாது.

எனவே எண்ணுமுறைக்கண் ஆண்பாலாயினும் பெண்பாலாயினும் ஒருவர், இருவர், மூவர் என எண்ணினல்லது பால் தோன்ற எண்ணப்படாது என்றவாறாம்.

சூ 43 வியங்கோள் எண்ணுப்பெயர் திணைவிரவு
வரையார்

ஐயமறுத்தலை நுதலிற்று.

என்னை, வினையியலுள் வியங்கோள் இருதிணைக்கும் பொது என்றாராயினும், எண்ணுங்கால் தனித்தனி எண்ணல் வேண்டுமோ, விரவி எண்ணவேண்டு மோ என்ன நின்ற ஐயம் நீக்குதலின் இது திணை வழுவமைதியாம்.

உரை: வியங்கோளும், எண்ணுப் பெயர் திணை விரவு தல் நீக்கார் என்றவாறு.

உதாரணம்: ஆவும் ஆயனும் செல்க எனவரும்

சூ 44 *வேறுவினைப் பொதுச்சொல் ஒருவனை கிளவார்*

மரபு வழுக் காத்தலை நுதலிற்று.

உரை : எனவே பல வினையையுடைய பொது வினையால் கிளத் தல் வேண்டுமென்றவாறாம். அது இயம் என்பது கொட்டுவனவும் எறிவ-னவும் ஊதுவனவுமாம். அதனை இயம்கொட்டினார், எறிந்தார், ஊதினார் என்னற்க. பொதுவினையால் இயம் இயம்பினார் என்க. பிறவுமன்ன.

சூ 45 *எண்ணுங்காலை அதுவதன் மரபே*

மேலதற்கு எய்துவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : வேறு வேறு வினையுடைய பொருளைப் பொதுப் பெயரால் கூறுதலன்றி எண்ணுமிடத்தும் அதன் மரபு பொதுவினையாற் கிளத்தல் என்றவாறு

உதாரணம் : அம்பும் வேலும் தண்டும், வாளும் வழங்-கினார் என்க. எறிந்தார், எய்தார் என ஒரு வினையாற் கிளவற்க 1 "ஊன்றுவை—கறிசோறுண்டு வருந்து தொழில் அல்லது பிறிது தொழில் அறியாவாகலின்" என்றவழி உண்டு என ஒரு வினையான் வந்ததால் எனின், அது பொதுவினை என்று கொள்க. என்னை? 2 "உண்ணுநீர் வேட்டேன் என வந்தாற்கு" எனவும் 3 "பாலு முண்ணுள் பழகண் கொண்டு" எனவும் 4 "கலைப்புற அல்குல் கழுகு சூடைந்துண்டு" 5 "கற்றுண்ணுப் போழ்து" எனவும் 'உண்ணுமை வேண்டும் புலால்' எனவும் வருதலின்.

சூ 46 *இரட்டைக் கிளவி இரட்டிற் பிரிந்திசையா*

இது செய்யுள் வழுக்காத்தலை நுதலிற்று.

உரை: இரட்டித்துச் சொல்லப்படும் சொற்கள் அவ்விரட் டித்தலிற் பிரிந்து ஒலியா என்றவாறு பொருளெல்லாம். எண்ணுங்கால் தம் முன்மயங்குதல் [illegible] வழக்கு வழிப்பட்டன என்றவாறு.

1. புறம் 14. 2. கலி. குறிஞ்சி 15. 3. அகம் 48. 4. மணி 6:41-112; 5. குறள் 930; 6. குறள் 257

உதாரணம் : ஒவ்வொன்ருக வந்தன. இரண்டிரண்டா நீக்குக எனவரும். இவை ஒன்ருக வந்தன. இரண்டாக நீக்குக என்ற வழிப்பொருள் படாமையால் பிரிக்தொலியாவாயின.

சூ 47 ஒரு பெயர்ப் பொதுச்சொல் உள்பொருள் ஒழியத்
தெரிபுவேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்
மரபு வழுவமைத்தலை நுதலிற்று.

உரை:—ஒரு பெயராகிப் பல பொருட்கும் உரித்தாகிய பொதுச்சொல்லை வகுத்துக் கூறுதல் தலைமையானும் பன்மையானும் என்றவாறு.

எனவே தலைமையும் பன்மையும் இல்வழி பொதுச்சொல் லால் கிளக்க என்றவாறாம்

உதாரணம் : பார்ப்பார் வேதம் என்பது அரசுர்க்கும் வணி கர்க்கும் பொதுவாயினும் பார்ப்பார் வேதம் எனத் தலைமை பற்றி வந்தது, எயினர் நாடு என்பது பிறவும் குடி உளவாயினும் பன்மை பற்றி வந்தது. ஆமேய்ப்பான் என்பதும் அது. இளமரக்கா என்பது தலை மையும் பன்மையும் இல்வழிப் பொதுவாய் வந்தது பிறவும் அன்ன

சூ 48 உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்
பெயரினும் தொழினும் பிரிபவை எல்லாம்
மயங்கல் கூடா வழக்குவழிப் பட்டன

எண்ணின் கண் கிடந்ததோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று. வழுக்காத் ததுமாம்.

உரை : உயர்திணைக் கண்ணும் அஃறினைக் கண்ணும் பெயரானும் தொழிலானும் பொறுமையிற் பிரியும்.

பொருளெல்லாம் எண்ணுங்கால் தம்முள் மயங்குதல் கூடாத வழக்கு வழிப்பட்டன என்றவாறு.

மரபல என்றவாறு எனவே இனம் சேர எண்ணல்வேண் டும் என்றவாறாயிற்று. எண்ணுங்கால் என்பது தந்து கொணர்ந்துரைத்தல்

என்னும் தந்திர உத்தியால் வருகின்ற சூத்திரத்தினின்றும் கொணர்ந்து-ரைக்கப்பட்டது.

உதாரணம்: முனிவரும் அந்தனரும் சான்றோரும் எனவும், பாணரும் கூத்தரும் விறலியரும் எனவும் முத்தும் மணியும் பவளமும் பொன்னும் எனவும் மாவும் மருதும் புன்னையும் ஞாழலும் எனவும் எண்ணுக. இவை பெயர் எறிவாரும் எய்வாரும் வெட்டுவாரும் குத்துவாரும் எனவும் ஆடுவாரும் பாடுவாரும் நகுவாரும் எனவும் உண்பனவும் தின்பனவும் பருகுவனவும் நகுவனவும் எனவும் எண்ணுக. இவை வினை அஃதேல்,

1 ''ஆவும் ஆணியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடையூரும் பேணித்
தென்புல வாழ்நர்க்கு இருங்கடன் இறுக்கும்
பொன் போற்புதல்வற்பெரூஅ தீரும்
எம் அம்பு கடிவிடுதும் நும் மரண் சேர்மின்

எனக்காட்டி இதனுள் அடங்காதால் எனின் அவையும் உய்யத் தகுவார் இவர் என்னும் இனம் குறித்து நின்றனவென்று கொள்க. பிறவும் அன்ன.

சூ 49 பலவயினானும் எண்ணுத்திணை விரவுப்பெயர்
அஃறிணை முடிபின செய்யுளுள்ளே

திணை வழுவமைத்தல் நுதலிற்று

உரை:— எண்ணின் கண் திணை விரவிவரும் பெயர் பெரும்பான்மையும் அஃறிணை முடிபின செய்யுளுள்

எனவே, சிறுபான்மை உயர்திணை யான் முடியவும் பெறு-மென்று கொள்க.

1 கோலவஞ்சி வாழும் இடிதமீஇ
ஆல் வீழ்பு போலும் அமைச்சனும்—வேலின்
கடைமணி போல் திண்ணியான் காப்புமிம் மூன்றும்
படை வேந்தன் பற்று விடல்''

இது விரவி எண்ணி அஃறிணையான் முடிந்தது.

1. புறம் 9.

2 "அங்கண் விசும்பின் அகனிலாப் பாரிக்கும் திங்களும் சான்றோரும் ஒப்பர்" எனவும்,

3 "பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார்
மூத்தார் இளையார் பசுப்பெண்டிர் என்றிவர் கட்கு
ஆற்ற வழிவிலங்கினரே பிறப்பிடைக்கட்
போற்றி எனப்படுவார்.

எனவும் இவை உயர்திணையான் முடிந்தன. யானையும் குதிரையும் வீரரும் போர்க்களத்துப் பட்டன. அரசனும் படையும் பட்டன எனவும் வழக்கின் கண்ணும் வருமால் எனின் 'மொழிந்த பொருளோடொன்ற வைத்தல்' என்னும் தந்திர உத்தியால் இச்சூத்திரத்திற்குப் பலவகையினானும் அஃறிணை முடிபின செய்யுளுள் என்றமையால் சிலவயினான் வழங்கினுள்ளும் விரவி வந்து தலைமையும் பன்மையும் பற்றி வந்த அஃறிணையான் முடியவும் பெறு மென்று கொள்க.

*சூ 50 வினைவேறுபடூஉம் பலபொருள் ஒருசொல்*
*வினை வேறுபடா அப்பலபொருள் ஒருசொல்என்று*
*ஆயிரு வகைய பலபொருள் ஒருசொல்*

பல பொருள் ஒருசொல் பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை:— பல பொருள் உணரவரும் சொல்லாவன பல பொருட்கும் தனித்தனிப் பெயராகி வருவதுஉம் பலபொருள் ஒரு சொல்லாம். அவற்றுள் வினை வேறுபடூஉம் பலபொருள் ஒரு சொல்லாவன: மா வேங்கை எனவும் மக்கள் பெற்றம் எனவும் எனவும் வருவன. வினை வேறுபடாப் பல பொருள் ஒரு சொல்லாவன: சேவல், பெடை என்பன அவற்றிற்கு உதாரணம் வருகின்ற சூத்திரத்தால் காட்டுதும்

*சூ 51 அவற்றுள் வினைவேறுபடூஉம் பலபொருள் ஒருசொல்*
*வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும்*

2. நாலடி. 151. 3. ஆசா 64.

தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே

வினை வேறுபடும் பலபொருள் ஒரு சொல் பொருள் உணர்த்துமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை:— மேற் கூறப்பட்டவற்றுள் வினைவேறுபடும் பல பொருள் ஒரு சொல் பொருள் தெரியும் காலத்து வேறுபட்ட வினையி-னானும் இனத்தினானும், சார்பினானும் தெரியத் தோன்றும் என்றவாறு

உதாரணம் மாகாய்த்தது, வேங்கை பூத்தது என்றவழி மரம் என்பது அறியப்பட்டது மா ஒடிற்று, வேங்கை பாய்ந்தது என்ற வழி விலங்கு என்பது அறியப்பட்டது. இவை தனித்தனிப் பொருள் உணர்த்தின. இவ்வூர் மக்களெல்லாம் போர்க்குப் போயினார் என்றவழி ஆண்பால் உணரப்பட்டது. இவ்வூர் மக்களெல்லாம் தைந்நீராடினார் என்ற வழிப் பெண்பால் உணரப்பட்டது. இவ்வூர்ப் பெற்றமெல்லாம் அறம்கறக்கும் என்றவழிப் பெண்பால் உணரப்பட்டது. இவ்வூர்ப் பெற்றமெல்லாம் உழவு ஒழிந்தன என்றவழி ஆண்பால் உணரப்பட்டது. இவை பொதுப் பொருள் உணர்த்தின. இவை வினையினாற் பொருள் விளக்கின. மாவும் மருதும் அவை என்றவழி மாமரம் என்பது அறியப்பட்டது. மாவும் புள்ளும் என்றவழி விலங்கென்பது அறியப்பட்டது. இவை இனம் இப்பொழிலகத்து நூறுமரவுள என்றவழி விலங்கென்பது அறியப்பட்டது இவை சார்பு. பொதுமை உணர்த்-தும் பலபொருள் ஒரு சொல் இனமும் சார்பும் பற்றி வருவன வந்தவழிக் கண்டு கொள்க.

சூ 52 ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்

மேலதற்கோர் புறனடை உணாத்துதல் நுதலிற்று.

உரை:—வினை வேறுபடும் பல பொருள் ஒரு சொல் வேற்று வினைகொண்டு முடிதலேயன்றி இருபொருட்கும் பொருந்தின ஒரு வினை கொண்டு முடியின் பிறிதொரு சொல்லொடு ஒன்றிப் பொருள் தோன்றும். பிறிதொரு சொல் என்பது எஞ்சி நின்றது

உதாரணம்: மாவீழ்ந்தது என்றவழி இன்ன மாவென்பது அறியலாகாமையின் யானை முறித்தலால் வீழ்ந்தது என்றவழி விலங்கு என் பதூஉம் உணர்த்தியவாறு கண்டு கொள்க

சூ 53 வினைவேறுபடாப் பலபொருள் ஒருசொல்
நினையும் காலைக் கிளந்தாங்கியலும்

இதுவினை வேறுபடாப் பலபொருள் ஒருசொல் பொருள் உணர்த்துமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : வினைவேறுபடாத பலபொருள் ஒருசொல் பொருள் உணருங்கால் எடுத்துக்கூறல் வேண்டும் என்றவாறு.

உதாரணம் : சேவல், பெடை என்பன வினையான் வேறுபடாமையால் அன்னச்சேவல், குயிற்சேவல், அன்னப்பெடை, குயிற்பெடை என எடுத்துக்கூறப் பொருள் விளங்கினவாறு கண்டு கொள்க.

சூ 54 குறித்தோன் கூற்றம் தெரித்துமொழி கிளவி

மேலதற்கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று

உரை :- தெரிந்து வேறுபடுக்கவரும் சொல்லைக் கிளந்துரைத்தலேயன்றி குறித்தோன் கூற்றமும் ஆம் என்றவாறு உம்மும் ஆமும் எஞ்சி நின்றன.

உதாரணம் : 1 ''நிவந்தோங்குயர் கொடிச் சேவலோய்'' என்றவழிச் சொல்லுவான் குறிப்பு மாயவனை நோக்கலின் கருடனாயிற்று. 2 ''சேவலங் கொடியோன் காப்ப'' என்றவழி சொல்லுவான் குறிப்பு முருகவேளை நோக்குதலின் கோழியாயிற்று. பிறவும் அன்ன.

சூ 55 குடிமை ஆண்மை இளமை மூப்பே
அடிமை வன்மை விருந்தே குழுவே
பெண்மை அரசே மகவே குழவி
தன்மை திரிபெயர் உறுப்பின் கிளவி
காதல் சிறப்பே செறற்சொல் விறற்சொல் என்று
ஆவறு மூன்றும் உளப்படத் தொகைஇ
அன்ன பிறவும் அவற்றொடு சிவணி

1. பரி 3-18 2. குறுந் 1.

*முன்னத்தின் உணரும் கிளவி யெல்லாம்*
*உயர்திணை மருங்கின் நிலையின வாயினும்*
*அஃறிணை மருங்கிற் கிளந்தாங் கியலும்*

திணை வழுவமைதி உணர்த்துதல் நுதலிற்று.

உரை : குடிமை முதலாக எண்ணப்பட்டனவும் அத்தன்மைய பிறவும் அவற்றொடு பொருந்திக் குறிப்பினால் உணருங்கிளவி யெல்லாம் உயர் திணை மருங்கில் நின்றனவாயினும் அஃறிணையிடத்துச் சொலான் வழங்கப்படும் என்றவாறு.

உயர்திணை மருங்கின் நிலையினவாயினும் என்ற உம்மையான், இவையெல்லாம் பண்பு குறித்தவழி அஃறிணையாம் என்பதூஉம் பொருள் குறித்தவழி உயர்திணையாம் என்பதும் கூறியவாறாயிற்று. குடிமையாவது குடியின் தன்மை. அது அக்குடியிற் பிறந்தாரைக் குறித்து நின்றது. இக்குடி வாழ்ந்தது, இக்குடிகெட்டது என்ப.

குடிமை என்பது குடி என வருமோ எனின்

1 ''மடிமை குடிமைக்கண் தங்கின்தான்
ஒன்னார்க்கு, அடிமை புகுத்திவிடும்,

என்றவழிக்குடி எனப்பொருளாகியவாறு கண்டு கொள்க.

ஆண்மை என்பது ஆணாகிய தன்மை அத்தன்மையைக் குறித்து ஒர் ஆண் வந்தது என்ப.

இளமை என்பது இளையாரைக் குறித்து. நிற்கும் இவ்வவை இளமையின்று என இளையோரைக்குறித்து நிற்கும் இவ்வவை இளமையின்று என இளையாரை இலது என்னும் பொருள் படவந்தது,

அடிமைஎன்பது அடிமைத்தொழில் செய்வார் மேற்று. அவனதடிமை வந்தது என அப்பொருள் குறித்து நின்றது.

வன்மை என்பது வலியாகிய தன்மை அவனது வலி போயிற்றென அவற்குத் துணையாயினாரைக்குறித்து நின்றது

விருந்து என்பது புதுமை விருந்து வந்தது எனப்புதியர்

1. குறள், 608.

வந்தார் என்பது குறித்து நின்றது.

குழூஉ என்பது திரள். குழூஉப்பிரிந்தது, அவை எழுந்தது, படை திரண்டது என்ப, குழூவியமாந்தரைக் குறித்து. பெண்மை என்பது பெண்ணாகிய தன்மை. ஒருபெண் வந்தது என்ப.

அரசு என்பது அரசத் தன்மை. அரசிருந்தது என்ப, அரசன் என்பதைக் குறித்து.

மக என்பது மகன். மகள் என்னும் முறைப்பெயர் இரண்டற்கும் பொதுவாகி நிற்பது. மகக்கிடந்தது என்ப.

குழவி என்பது அப்பொருளின் இளமை குறித்து நிற்கும். குழவி அழுத்து என்ப.

தன்மை திரிபெயர் என்பது தன் இயல்பிற்றிரிந்த பொருள் பெயர். அது மருள் என்பது. அதனை மருள் வந்தது என்ப.

உறுப்பின் கிளவி என்பது, உறுப்பினுற் கூறப்படும் சொல். அஃதாவது குருடு, முடம் என்பன. குருடு வந்தது, முடம் வந்தது, என்ப.

காதல் என்பது காதல் பற்றி நிகழும்சொல். காதற்சொல் சிறப்புச் சொல் என ஒரு சொல் வருவிக்க. என் பாவை வந்தது என் யானை வந்தது என்ப. தன்மக்களை 1 ''ஈங்கிதோர் நல்கூர்ந்தார் செல்வமகள்'' என்றவழி இது என்பது காதல் பற்றி வந்தது. சிறப்பு என்பது சிறப்பைப்பற்றி வரும் சொல். கண்போலச் சிறந்ததனை என் கண் வந்தது என்ப.

செறற் செறல் என்பது செறலினாற் கூறும் சொல் என்பகை வந்தது, திருவிலி வந்தது என்ப.

''ஏ ஏ இஃதொத்தன்'' என்றவழி இஃதென்பதும் அது

விறற் சொல் என்பது, வீரியத்தாற் கூறும் சொல் விறல்வந்தது, சிங்கம் வந்தது, புலிவந்தது என்ப. அவ்வீரியம் குறித்து

அன்னபிறவும் என்றதனால், குடும்பம் வாழ்ந்தது, வேந்து சென்றது, ஆள்வந்தது, அமைச்சுவந்தது, தூதுவந்தது, ஒற்று வந்தது, நட்பு நன்று என்பன கொள்க.

1. கலி. 56 2. கலி. 62

அவற்றொடு சிவணி முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம் என்றதனால் உலகுவாழ்ந்தது, நாடு வந்தது, ஊர்வந்தது என்பது அவ்விடத்தில் உள்ள மாந்தரைக் குறித்தது. பிறவும் அந்நிகரனவெல்லாம் கொள்க. இவை எல்லாம் ஒரு ஆகுபெயர் அன்றோ எனின் ஆகுபெயராயின் தன்பொருட்கு உரிய பாலான் முடியும் இவை அன்னவன்றி வேறுபட்டு முடிதலின் குறிப்பு மொழி ஆயின.

சூ 56 *காலம் உலகம் உயிரே உடம்பே*
*பால்வரை தெய்வம் வினையே பூதம்*
*ஞாயிறு திங்கள் சொல்லென வரூஉம்*
*ஆயீரைந்தொடு பிறவுமன்ன*
*ஆவயின் வரூஉம் கிளவியெல்லாம்*
*பால்பிரிந் திசையா உயர்திணை மேன*

உயர்திணைப் பொருட்கண் எஞ்சியது உணர்த்துதல் நுதலிற்று.

உரை:— காலம் முதலாகச் சொல்லப்பட்டனவும் அத்தன்மையை பிறவுமாகிய பொருட்கண் வரும் சொல்லெல்லாம் உயர்திணையிடத்தின. ஆண்டுப் பால்பிரிந்திசையா என்றவாறு,

காலம் என்பது முன்னும் பின்னும் நடுவும் ஆகி என்றும் உள்ளதோர் பொருள், உலகம் என்பது மேலும் கீழும் நடுவுமாகி எல்லாவுயிரும் தோற்றுதற்கிடமாகிய பொருள். உயிர் என்பது சீவன் உடம்பு என்பது மனம், புத்தி, ஆங்காரமும் பூத தன்மாத்திரையுமாகி வினையினற் கட்டுப்பட்டு எல்லாப்பிறப்பிற்கும் உள்ளாகி நிற்பதோர் நுண்ணிய உடம்பு. இதனை மூலப்பிரகிருதி எனினும் ஆம். பால்வரை தெய்வம் என்பது ஆணும் பெண்ணும் அலியும் ஆகிய நிலைமையை வரைந்து நிற்கும் பரம்பொருள். வினை என்பது ஊழ். பூதம் என்பது நிலம். நீர், தீ, வளி, ஆகாயம். ஆகிய ஐம்பெரும் பூதம். ஞாயிறு என்பது தீத்திரளாய் உலகு விளக்குவது, திங்கள் என்பது நீர்த்திரளாய் உயிற்கு அருள் செய்வது.

சொல் என்பது எழுத்தினுன் இயன்று பொருள் உணர்வது. அச்சொல்லினுன் இயன்ற மந்திரம், விடம் முதலாயின தீர்த்தலின்

தெய்வம் ஆயிற்று. இந்நூல் செய்தான் வைதிக முனிவன் ஆகலின் சொல் என்பது வேதம் என்று கொள்ளப்படும். பிறவும் என்றதனால் வியாழன், வெள்ளி, முதலாயின கோள்மீனும், பரணி, கார்த்திகை முதலாயின நாள்மீனும் தாரகையும் பூதம், பேய் எனப் பால் உணர நில்லாத தெய்வப் பொருண்மையும் கொள்ளப்படும். உதாரணம் முன்னர்க்காட்டுதும்.

சூ 57 நின்றாங் கிசைத்தல் இவணியல் பின்றே

மேலதற் கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று

உரை: மேல் உயர்திணைக்கண் பால்பிரிந்திசையா என்று ஓதப்பட்டன எல்லாம் அத்திணை உணர நின்றன வேனும் அவ்வாறு உயர்திணை உணர நின்று ஒலித்தல் இவ்விடத்து வழக்கின்று என்றவாறு. இவ்விடம் என்றது உயர்திணையை.

சூ 58 இசைத்தலும் உரிய வேறிடத்தான

மேற் கூறப்பட்ட சொற்கள் பாலுணர வருமாறு உணர்த்துதல் நுதலிற்று. வழுவமைதியும் ஆம்.

வேறிடம் என்றது அஃறிணையை.

உரை:— மேல் பால் பிரிந்திசையா என ஓதப்பட்ட சொற்கள் அஃறிணையாய் இசைத்தலும் உரிய என்றவாறு.

உம்மை எச்சவும்மை ஆகலான் அஃறிணைக்குரிய சொல்லான் அன்றி இருதிணைக்கும் பொதுவாகிய சொல்லானும் இசைத்தலும் உரிய என்றவாறு

உதாரணம்: காலம் வந்தது, வரும் உலகு கிடந்தது, உயிர் போயிற்று உடம்பு விட்டது, தெய்வம் தந்தது, வினை விளைந்தது பூதம் செறிந்தது. ஞாயிறு எழுந்தது, திங்கள் எழுந்தது சொல்பயன் தந்தது, வியாழன் எழுந்தது, வெள்ளி பட்டது, பரணிதோன்றிற்று பூதம் புடைத்தது பேய் பிடித்தது பிறவும் அன்ன.

சூ 59 எடுத்த மொழியினம் செப்பலும் உரித்தே

இது செப்பின்கண் கிடந்தோர் குறிப்பு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: எடுத்துச் சொல்லப்பட்ட சொல் தனக்கு இனமாகிய

சுமந்தான், வீழ்ந்தான் என்ற வழி சுமவாதவன் வீழ்ந்திலன் என்னும் பொருள் படுதலேயன்றிச் சுமக்கப் பட்டதும் வீழ்ந்ததெனச் செப்பியவாறும் கண்டு கொள்க, பிறவும் அன்ன.

ஆ 60 *கண்ணும் தோளும் முலையும் பிறவும்*
*பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி*
*பன்மை கூறுங்கடப்பா டிலவே*
*தம்வினைக் கியலும் எழுத்தலங்கடையே*

ஒருசார் பாலறி சொற்கண் கிடந்ததோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை:—கண்ணும் தோளும் முலையும் அத்தன்மைய பிறவும் ஆகிய பன்மை சுட்டிய சினை உணரவரும் சொல் தம்வினைக்கேற்ற எழுத்தான் முற்றுப்பெருதவழிப் பன்மை உணர்த்தும் மரபில என்றவாறு.

எனவே, பன்மை ஈற்றான் வாராக் கால் ஒருமையீற்றான் வரப்பெறூஉம் என்பதும் அவ்வழி அவ்விரு பொருட்கண்ணும் கிடப்பதொரு பொதுமையைக்குறிக்கும் என்பதூஉம், கொள்ளப்படும் கண் நொந்தது, முலைஎழுந்தது, தோள் தசைத்தது, என்றவழி பண்மை உணர்த்திற்றிலவாயினும் அச்சாதி யொருமையை உணர்த்தியவாறு கண்டு கொள்க.

1 ''இருநோக் கிவளுண்கண் உள்ளது''

என்ற வழி, நோக்காகிய ஒருமை குறித்து வந்தது. ஒப்பக்கூறல் என்னும் தந்திர, உத்தியால், சினைப் பொருளையன்றி, முதற் பொருளும் சாதி ஒருமைபற்றி வருவனவும் அமைத்துக் கொள்க.

2 ''உள்ளிய தெல்லாம் உடனெய்தும் உள்ளத்தான்
உள்ளான் வெகுளி யெனின்''

இதனுள் உள்ளிய வெல்லாம் எனறபாலது நினைக்கப்படுதல் ஆகிய ஒருமை குறித்து வந்தது. அஃதேல் கண்ணல்லன் என்பது எவ்வாறு வந்ததெனின் கண்ணது நன்மையுடையன் என்னும் பொருள்பட வந்தது.

---

1. குறள். 1091. 2. குறள். 319.

கண் நோவப்பட்டான் எனச் செயப்படுபொருள் குறித்து நின்றது. இவை வினையியலுட் காணப்படும்.

முதலாவது கிளவியாக்கம் முற்றும்

இவ்வோத்தினுள் சூத்திரம் உட்பட்ட உரையினது அளவு கிரந்த வகையான் ஐந்நூற்று நாற்பது.

# (2) வேற்றுமையியல்

சூ 1 *வேற்றுமை தாமே ஏழெ ன மொழிப*
*விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே*

இஃது என்ன பெயர்த்தோ எனின் வேற்றுமை இயல் என்னும் பெயர்த்து.

பொருள்களை வேறுபடுத்தினமையால் பெற்ற பெயர். என்னை வேறுபடுத்தியவாறு எனின் ஒரு பொருளை ஒருகால் வினை முதலாக்கியும் ஒரு கால் செயப்படுபொருளாக்கியும் ஒருகால் கருவியக்கி-யும் ஒருகால் ஏற்பது ஆக்கியும் ஒரு கால் நீங்க நிற்பது ஆக்கியும் ஒருகால் உடையது ஒருகால் இடம் ஆக்கியும் இவ்வாறு வேறுபடுத்தது என்க. மேல் அவ்வழித்தொடர் கூறி இனி வேற்றுமைத் தொடர் கூறு-கின்றார். ஆதலின் அதன்பின் கூறப்பட்டது.

இவ்வோத்தினுள் தலைச்சூத்திரம் என் நுதலிற்றோ எனின் வேற்றுமை இனைத்தென வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

உரை:—வேற்றுமை என்பனதாம் ஏழென்று சொல்லுப ஒரு சாரார். விளி கொள்வதன்கண் நிகழும் விளியோடு எட்டாம் என்றவாறு. ஏகாரம் தேற்றம். விளி கொள்வது என்றது பெயரை. ஏழென்று சொல்லுவார் விளிவேற்றுமையை, எழுவாயுள் அடக்குவர்.

சூ 2 *அவைதாம், பெயர் ஐ, ஒடு, கு*
*இன், அது, கண், விளி என்னு மீற்ற*

வேற்றுமைச் சொற்கு ஈற்றெழுத்து வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

உரை: — மேற்சொல்லப்பட்ட வேற்றுமைகள் தாம் பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண், விளி, என்று சொல்லப்பட்ட கூறுகளை உடைய என்றவாறு.

விளியீறாவது விழிக்கண் வரும் எழுத்துக்கள். பிறவும் வேற்றுமை ஈறு உளவாயினும் 'சிறப்புடைப் பொருளைத்தானினிது கிளத்தல்' எனபதனால் இவை எடுத்து ஓதப்பட்டன. எடுத்தோதாதன மூன்றாவ தண்கண் ஆன், ஆல், ஒடு, ஆறாவதண் கண் அது. ஏழாவதன்கண் இடப் பொருண்மை உணர்த்தும் சொற்கள்.

உதாரணம்: சாத்தன், சாத்தனை, சாத்தனொடு, சாத்தற்கு, சாத்தனின், சாத்தனது, சாத்தன்கண், சாத்தா எனவரும்.

ஐ. முதலாயின மற்றொரு பெயர்க்கு ஈறாகி வருதலின், பெயரீறு என்பதும், மற்றொரு பெயர்க்கு, ஈறாகிவரல் வேண்டும் எனின், அஃதன்று கருத்து. பெயர்தானே ஈறாகியும் பிற எழுத்தோடு கூடி ஈறாகியும் வருமென்று கொள்ளப்படும். இவ்வேற்றுமைகளை இவ்வீற்று வேறுபாட்டா-னே பெயர் வேற்றுமை, ஐகார வேற்றுமை, ஒடுவேற்றுமை குவ்வேற்றுமை, இன்வேற்றுமை, அதுவேற்றுமை, கண்வேற்றுமை, விளி வேற்றுமை எனவும் குறியிட்டு வழங்குப, அஃதுயாண்டுப் பெறுதும் எனின் ஐ எனப்-பெயரிய வேற்றுமைக்கிளவி, ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி என்புழியும் பிறாண்டும் பெறுதும். 1

சூ 3 *அவற்றுள்*

*எழுவாய் வேற்றுமை பெயர் தோன்று நிலையே*

மேல், வேற்றுமை எட்டு என்பதும், அவற்றுக்கண் வரும் ஈறும் கூறினார் அல்லது, அவற்றது பெயரும் முறையும் கூறிற்றிலர் அன்றே, அவை கூறுவார், முற்பட, முதல் வேற்றுமையாவது இது என் பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை: —மேற்சொல்லபட்டவற்றுள் முதல் வேற்றுமையாவது பெயர் தோன்றும் நிலை என்றவாறு.

1. சொல் 68. சொல் 70.

அஃதேல், பெயர் என அமையும் தோன்றும் நிலை என்றதனால் பயன் என்னை யெனின் பெயர் கண்டுழியெல்லாம் வேற்றுமை என்று கொள்ளற்க, என்பது அறிவித்தற்கெனக் கொள்க.

அஃதுயாதோ எனின் ஆயன் சாத்தன் வந்தான் என்றவழி ஆயன் என்பது சாத்தற்கு அடையாகி நிற்றலானும் வருதற்றொழில் சாத்தனொடு முடிதலானும் இருபெயரும் ஒரு பொருட்கண் வருதலின் இரண்டினையும் வேற்றுமை எனப்படாது, ஆகலானும் இறுதி நின்றதே வேற்றுமை எனப்படுவது என்று கொள்க. இதனை எழுவாய் வேற்றுமையடுக்கென்றார் உளரால் எனின் ஆயன் சாத்தனை வெட்டினான் என்றவழி இறுதி நின்றபெயர் உருபேற்று இரண்டாம் வேற்றுமையாயிற்று.

ஆண்டு உருபு ஏலாத ஆயன் முதல் வேற்றுமை ஆதல் வேண்டும், அவ்வாறாக வெட்டினான் என்பது ஒற்றுமை பட்டு முடியாது ஆகலான், அது பொருளன்று என்க. அஃதற்றாக பெயரை முதல் வேற்றுமை என்னாது, எட்டுவேற்றுமை யுள்ளும் யாதானும் ஒன்றை முதல் வேற்றுமை எனினும், அமையும் எனின், ஒருவன் ஒன்றை ஒன்றானே இயற்றி ஒருவற்குக் கொடுப்ப, அவன் அதனை அவனினின்றும் தனது ஆக்கி ஓரிடத்து வைத்தான் கொற்றா என்றவழி, செய்கின்றான், முதல் வேற்றுமையாகி, இம்முறையே கிடத்தலின் அமையாது என்க.

அஃதேல் யாற்றினது கரைக்கண் நின்ற மரத்தை அறச்சாலை இயற்றுதற்கு ஊரினின்றும் வந்து மழுவினானே வெட்டினான் சாத்தன் என்றவழி, எழுவாயாகிய பெயர், ஏழாவதுமாய் நின்றதால் எனின், சொல்லுவான் குறிப்பினால் முதல்வேற்றுமை ஆயிற்று என்பது கருத்து.

யாதானும் ஒரு தொழிலும் செய்வான் உள்வழி அல்லது நிகழாமையின், அது செய்து முடிக்கும் கால், செய்யத்தகுவது இது எனக் குறிக்க வேண்டுதலின் செயப்படு பொருள் இரண்டாவது ஆயிற்று. அவ்வாறு அப்பொருளைச் செய்து முடிக்குங்கால் அதற்காங் கருவி தேடுமாகலின் அக்கருவி மூன்றாவதாயிற்று.

அவ்வாறு செய்து முடித்த பொருளைத்தான் பயன் கோடலேயன்றி, பிறர்க்குங் கொடுக்கும் ஆதலின், அதனை ஏற்று நிற்பது

நான்காவது ஆயிற்று. அவ்வாறு கொடுப்புழி, அவன் கையினின்றும் அப்பொருள் நீங்கி நிற்பது ஐந்தாவது ஆயிற்று. அவ்வாறு நீங்கின பொருளைத் தனதென்று கிழமை செய்தலின் அக்கிழமை ஆறாவது ஆயிற்று.

டுக் கூறப்பட்ட எல்லாவற்றிற்கும் இடமும் காலமும் பொதுவாகி நிற்றலின், அவை ஏழாவது ஆயின. இவையிற்றோடு ஒத்த இயல்பிற்று அன்றி எதிர்முகம் ஆக்குதற் பொருட்டு ஆகலின், விளி என்பது எல்லாவற்றினும் பிற்கூறப்பட்டது. அஃதேல், ஆறாவதாகிய கிழமை, கொண்டான் கண்ணாதலேயன்றி, செய்தான்கண் இயையாதோ எனின் தோற்றுவித்தாற்கு. கிழமை சொல்லாமலும் பெறும், அதனைக் கொண்டாற்கே கிழமை கூறல் வேண்டுவது என்க.

சூ 4 பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
வினைநிலை உரைத்தல் வினாவிற் கேற்றல்
பண்புகொள வருதல் பெயர் கொளவருதல்என்று
அன்றியனைத்தும் பெயர்ப்பயனிலையே

எழுவாய் வேற்றுமைக்கு முடிவு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: பொருண்மை சுட்டல் என்பது. முடிக்கும் சொல் எழுவாயாகி நின்ற பொருள் தன்னையே சுட்டி, அதன் தொழில் முதலாயின சுட்டாது நிற்கும் நிலைமை என்றவாறு.

உதாரணம்: சாத்தன் உளன் எனவரும். வியங்கொள வருதலாவது, தொழிலைப் பெயர்ப் பொருண்மை கொள்ளுமாறு வரும் ஏவற்சொல்.

உதாரணம்: சாத்தன் செல்க.

வினைநிலை உரைத்தலாவது, அப்பொருளின் தொழிலின் நிலைமையை உணர்த்த வரும் சொல்.

உதாரணம்: சாத்தன் சென்றான்.

வினாவிற்கேற்றலாவது, அப்பெயர்ப் பொருண்மையை வினாவுதற்கு ஏற்புடையசொல்.

உதாரணம்: சாத்தன் யாவன்? சாத்தன் யாண்டையன்?

சாத்தன் எத்தன்மையன்; என்பன. பண்புகொள வருதலாவது, அப்பெயர் பொருண்மை பண்பு கொள்ளுமாறு வரும்சொல்.

உதாரணம் சாத்தன் கரியன், நெடியன் என்பன. பெயர் கொளவருதலாவது, அப்பெயர் பொருண்மை உணரப்பிறிதோர் காரணத் தான் வந்து முற்பெயரோடு ஒட்டுப்படாது நிற்பது.

உதாரணம்: சாத்தன் வணிகன், முடவன் என்பன. என்று அன்றி அனைத்தும் பெயர்ப்பயனிலையே என்பது, என்று சொல்லப்பட்ட அவ்வனைத்தும் பெயர்க்குப் பயனிலையாம் என்றவாறு.

பயனிலை என்பது : பெயர்வாளாது நிற்குமாயின் செப்பின் கண் பயனின்றாம். ஆதலான், அதனை முடிக்கும் சொல் பயனிலை என்றா-யிற்று. அஃதேல் இவையெல்லாம் பெயர்ப் பொருண்மையைச் சுட்டி நிற்றலின், பொருண்மை சுட்டல் என அடங்கும்எனின், அடங்குமாயினும் பொருண்மை சுட்டல் பொருண்மை மாத்திரத்தைக் குறித்தலானும் வியங்-கொள வருதல் அப்பொருண்மை புடை பெயர்தற்கு நிமித்தம் ஆகி வருதலானும் வினைநிலை உரைத்தல் அப்பொருளின் புடைபெயர்ச்சி ஆகலானும்வினவிற்-கேற்றல் அவ்வாறன்றி வினவப்படும் நிலைமையதாகி நிற்றலானும் பண்புகொள வருதல் அப்பொருட்கண் உள்ளதோர் குணத்தைக் குறித்து நிற்றலானும் பெயர்கொள வருதல் அப்பொருண்மை முழுதும் உணரப் பிறிதோர் வாய்-பாடாக வருதலானும், வகுத்துக் கூறினர் என்க.

சாத்தன் தலைவன் ஆயினன், இரும்பு, பொன், ஆயிற்று என்பன எவ்வாறு வந்தன எனின் அவையும் பொருளின் புடை பெயர்ச்சி ஆகலானும் ஒன்று ஒன்றாகித் திரிதலாகிய வினையான் வருதலானும் வினை நிலை உரைத்தலுள் அடங்கும். அஃதேல் தலைவன் பொன் என்னும் பெயரை எழுவாய் என்றுமோ பயனிலை என்றுமோ எனின், இரண்டும் அல்ல தலைவன் ஆதல் பொன் ஆதல் எனத்திரிபு குறித்து நின்றன, பெயர் குறித்து நின்றன [illegible] என்க.

அன்றி அனைத்தும் பெயர் முடிபு என்னாது பயனிலை என்றதனால் பயனிலை பெயர்க்கு முன்னிற்றலே அன்றிப் பின்னிற்றலும் ஆம் என்று கொள்க.

உதாரணம் : உளன் சாத்தன், வந்தான் சாத்தன் யாண்டையான் சாத்தன், கரியன் சாத்தன், வாணிகன் சாத்தன், எனவரும்.

ஈண்டுக் காட்டப்பட்ட உதாரணத்துள் வினைபற்றி வருவன வெல்லாம், முற்றுச்சொல் எனவே முடிந்தசொல் என்பது பெறுதும். அது பின்னும் மற்றொரு சொல்லை அவாவி நிற்கும் என்றல் பொருந்தாமை யானும்,

''மற்றுச்சொல் நோக்கா மரபின் அனைத்தும்
முற்றி நிற்பது முற்றியல் மொழியே''

என அகத்தியனார் ஓதுதலானும் மொழிமாறுதல் இலக்கணமாக எச்ச இயலுள் ஓதுகின்றமையாலும் அது சொல்லறியாதார் உரை என்க.

சூ 5 *பெயரின் ஆகிய தொகையுமார் உளவே*
*அவ்வும் உரிய அப்பா லான*

எய்தியதன் மேல் சிறப்பு விதி வகுத்தலை நுதலிற்று.

உரை:—பெயரான் ஆகிய தொகைச் சொல்லும் உள அவையும் எழுவாயாகிப் பயனிலை கோடற்கு உரிய என்றவாறு.

ஏற்புழிக் கோடல் என்பதனால் பல பொருள் குறித்த பெயரே கொள்ளப்படும். உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை.

உதாரணம் : யானை, குதிரை உள. செல்க, வந்தன, கரிய, யாண்டைய, பல—எனவரும்.

அஃதேல், பலபொருள் குறித்து வருதல் வேண்டுமென்றது என்னை? ஒரு பொருட்கண் வரும் பெயரும் தொகை ஆகாதோ எனின் தொகையாம் ஆயினும் இறுதிக்கண் நின்ற பெயர் பயனிலை கொண்டும் ஏனைய பெயர் பயனிலை ஏலாதும் நிற்கும். இவை இரண்டும் பெயர் மேலும் பயனிலை ஒத்துவருதலின் வேறு ஓதப்பட்டன.

சூ 6 *எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி*
*அவ்வியல் நிலையல் செவ்விதென்ப*

இது எழுவாய் வேற்றுமைக்கு உரியதோர் புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

உரை:—மூன்றிடத்துப் பெயரும் வெளிபடத் தோன்றி,

பயனில்லைப்பட நிற்றல் செவ்விது என்றவாறு.

எனவே வெளிப்படத்தோன்றாது பயனிலை கோடல் செவ்விது அன்று என்றவாறாம்.

அவையாவன:—

சோறு உண்ணாயோ சாத்தா என்றவழி 'உண்பல்' என்பது; செப்பின்கண் 'யான் உண்பல்' என எழுவாயும் பயனிலையுமாக நிற்கற்பாலது. உண்பல் என்னும் பயனிலை வெளிப்பட யான் என்னும் பெயர் தோன்றாது நிற்பினும் அப்பொருள்பட நிற்றலின் அத்தொடர் வழு எனப்படாமையால் செவ்விதன்று ஆயிற்று. இது இத்தொடர்ச்சிக்கண் வழு அமைத்தவாறு, இது தன்மை.

'யான் யாது செய்வல்' என்றானை இது செய் என்பது. இதன்கண் நீ, என்னும் பெயர் வெளிப்படாது நின்றது. இது முன்னிலை 'அவன் யார்' என்றார்க்குப், 'படைக்கை மறவன்' என்றவழி 'அவன்' என்னும் பெயர் தோன்றாது நின்றது. இது படர்க்கை

அஃதேல் இவை பெயரெச்சம் என்று 1 எச்சவியலுள் கூறுகின்றதனுள் அடங்காதோ எனின் அடங்குமாயின் எழுவாயும் பயனிலையுமாகி நிற்குங்கால் பெயர் தோன்றாது நிற்பின் வழுவாம் என்பதனால் ஈண்டுக் கூறல் வேண்டும் என்க.

இன்னும் இச்சூத்திரத்திற்குப் பொருள் வெளிப்படத் தோன்றாத பெயர் திரிபு உடைய என்றவாறும்.

அவையாவன :— இரும்பு பொன் ஆயிற்று, குயவன் குடத்தை வனைந்தான் என்றவழி எழுவாயக்கும் பயனிலைக்கும் இடைக்கிடந்த பொன், குடம் என்பன ஆயிற்று என்பதனோடும் வேற்றுமை உருபினோடும் திரிந்தவாறு கண்டு கொள்க

அஃதேற்றாக, வனைந்தான் என்பது குயவனோடு முடிக, இடைக்கிடந்த குடத்தை ... ற்கு முடிபு யாதோ எனின் அது 'குடத்தை வனைந்தான்' என ஒருசொல் நீர்மைப்பட்டு, 'குயவன்' என்பதற்கு பய-

1. எச் 37.

னிலையாகி நிற்பின் அல்லது, வேறுமுடிபு உரைக்கப்படாதென்க. ஆயின் எழுவாயும் பயனிலையும் என எல்லாச் சொல்லும் அடங்கும். வேற்றுமை எட்டு எனல் வேண்டா எனின் குயவன் வனைந்தான் என்றவழி வனை யப்பட்டதும் அதற்காம் கருவியும் அதனாற் பயனும் பிறவும் தோன்று மாதலின், அப்பொருள்களே வேற்றுமையாகி இடைக் கிடக்கின்றன என்க. இவை எல்லாம் இடைக்கிடப்பன ஆகலின் செய்கின்றானை முன் வைக் கப்பட்டது.

சூ 7 கூறிய முறையின் உருபுநிலை திரியாது
ஈறுபெயர்க் காகும் இயற்கைய என்ப

பெயர்ச் சொற்கண் உருபு நிற்கும் நிலை உணர்த்துதல் நுதலிற்று.

உரை:—சொல்லப்பட்ட உருபு முறையானே நின்ற நிலை யைத் திரியாது பெயர்க்கு ஈறாகும் இயல்பினை உடைய என்றவாறு.

முறையானே என்றது அடைவே ஒன்றொன்றாக என்ற வாறும். நிலையைத் திரியாது என்றது உருபேற்று நிற்கும் பெயரைத் திரியாது அதன் கண் இயல்பாகி நிற்கும் என்றவாறு. இச்சூத்திரம் கூற வேண்டா. மேலைச் சூத்திரத்துப், பெயர் ஐ, ஒடு, கு, இன், அது, கண் விளி என்னும் ஈற்ற என்பதனால் பெறுதும் எனில் அதுகருதியன்று கூறியது. வடமொழிக்கண் எழுவாயாகிப் பெயரின் மேலே உருபு நிற்கும் என்பது அறிவித்தற்கெனக் கொள்க. உதாரணம் மேற்காட்டப்பட்டன, வருகின்ற சூத்திரத்தின் கண்ணும் விளங்கும்.

சூ 8 பெயர்நிலைக் கிளவி காலம் தோன்ரு
தொழில்நிலை ஒட்டும் ஒன்றலங்கடையே

மேற்பல சூத்திரத்தானும் 'பெயர்' என்று எடுத்தோதிப் போந்தார். அது, இத்தன்மையைதென அதன் இலக்கணம் கூறுதல் நுதலிற்று.

உரை:— பெயர்நிலைமையுடைய சொல், காலம் தோன்ற தொழில் நிலையோடு ஒட்டி நிற்கும் பெயரும் ஒருவகையல்லன காலம் தோன்றா என்றவாறு.

காலம் தோன்றா என்றது மத்திமதீபமாகி நின்றது. உம்மை இறந்தது தழீஇயிற்று. பெயர்க்கு இலக்கணம் பயனிலை கோடலும் உருபு எற்றலும்

காலம் தோன்றுமையும் ஆம். அவற்றுள் பயனிலை கோடலும் உரு-பேற்றலும் முற்பட்ட சூத்திரத்தால் கூறலின் காலம் தோன்றாமை கூறப்பட்டது

பெயராவன: தனிப்பெயர், ஒட்டுப்பெயர் என இருவகைப்படும். அவற்றுள் தனிப்பெயர் பொருள்மேல் வருவனவும் தொழில் மேல் வருவனவும் என இருவகைப்படும். ஒட்டுப் பெயர் தெரிநிலைவினை ஒட்டுப் பெயரும் குறிப்புவினை ஒட்டுப்பெயரும் என இருவகைப்படும். அவற்றுள் பொருள் மேல் வரும் தனிப்பெயர், சாத்தன், கொற்றன், யானை, குதிரை, மா, தெங்கு என்பன. தொழில்மேல் வரும் தனிப்பெயர், உண்டல், தின்றல், கொடுத்தல், எடுத்தல் என்பன. தெரிநிலைவினை ஒட்டுப்பெயராவன, தொழிற் பெயரோடு ஒட்டி ஒரு பொருட்குப் பெயராகி வருவன அவை உண்டான், தின்றான், கொடுத்தான், எடுத்தான் என்பன, இவை வினைக்-கருத்துள்வழி வினைச் சொல்லாம். பெயர்க்கருத்துள்வழி பெயராம். குறிப்புவினை ஒட்டுப் பெயராவன, மற்றொரு பெயரொடு ஒட்டி ஒரு பொருட்குப் பெயராகிவருவன. அவை குழலன், கோட்டன், கச்சினன், கழலினன் என்பன. இவையும் வினைக்கருத்துள்வழி வினைக்குறிப்பாம். பெ-யர்க்கருத்துள்வழி பெயராம்.

இவற்றுள் தெரிநிலைவினைப்பெயரல்லாதன காலம் தோன்றா. இப்பெயர்கள், சாத்தனை' உண்டலை, உண்டானை குழலனை என உருபேற்கும்.

சூ ௦ இரண்டாகுவதே,
ஐ எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
எவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்பு
அவ்விரு முதலிற் றோன்று மதுவே

நிறுத்த முறையானே, இரண்டாம் வேற்றுமை உணர்த்து தல் நுதலிற்று.

உரை:—இரண்டாம் வேற்றுமையாவது ஐ எனக் குறித்த வேற்றுமைச்சொல், அஃது யாதானும் ஒரு பெயர்வரினும் வினையும் வினைக்குறிப்புமாகிய அவ்விரண்டு முதற்கண்ணும் தோன்றும் என்றவாறு

ஐகாரவேற்றுமை இரண்டாவதென்னும் குறியும் பெற்றது. வினை என்பது செயல். வினைக் குறிப்பென்பது அவ்வினையினாற் குறிக்கப்பட்ட பொருள். அஃதாவது செய்யப்படு பொருள், முதல் என்பதனை வடநூலாசிரியர் காரகம் என்ப. அஃது தொழிலை உண்டாக்குவது. அது பல் வகைத்து. செய்வானும், செயலும், செயப்படுபொருளும் கருவியும், கொள்வானும், பயனும், காலமும், இடமும், என்ப.

''வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலம் கருவி என்றா
இன்னதற் கிதுபய னாக என்னும்
அன்னமரபின் இரண்டொடுந்தொகைஇ
ஆயெட் டென்ப தொழில்முத னிலையே''

என எட்டென்றாராதலின், அவற்றுள் இது செயப்படுபொருள் மேலும் செயல்மேலும் வரும். குடத்தை வனைந்தான் என்பது செயப்படுபொருள் மேல் வந்தது. வனைதலைச் செய்தான் என்பது செயல்மேல் வந்தது. தொழில் முதனிலை எட்டென்றமையால் காரகம் பொருள்மேல் வரும் வேற்றுமையெல்லாம் வினையான் முடியும் என்று கொள்க.

சூ 10 காப்பின் ஒப்பின் ஊர்தியின் இழையின்
ஒப்பில் புகழில் பழியில் என்று
பெறலின் இழவின் காதலின் வெகுளியில்
செறலின் உவத்தலின் கற்பின் என்று
அறுத்தலின் குறைத்தலின் தொகுத்தலின் பிரித்தலின்
நிறுத்தலின் அளவின் எண்ணின் என்று
ஆக்கலின் சார்தலின் செலவின் கன்றலின்
நோக்கலின் அஞ்சலின் சிதைப்பின் என்று
அன்ன பிறவும் அம்முதற் பொருள
என்ன கிளவியும் அதன்பால என்மனார்

இரண்டாம் வேற்றுமைப் பொருள் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : காப்பு முதலாகச் சிதைப்பு ஈறாக ஓதப்பட்டன. வற்றினும், அத்தன்மைய பிறவினும் வரும் சொல்லும் செயப்படு பொருளாகி வரும் எல்லாச்சொல்லும் இரண்டாம்வேற்றுமைப் பாலன என்றவாறு.

காப்பு என்பது காவற்றொழிலையும் காக்கப்படும் பொருளையும் உணர்த்தும். ஏனைய தொழிலும் பொருளும் உணர்த்துமாறு அறிந்து கொள்க அன்னபிறவினும் என இன் செய்யுள் விகாரத்தால் தொக்கது. இவை எல்லாம் வகுத்துக் கூறவேண்டா. வினைக்குறிப்பென அடங்குமெனின், அடங்கும் எனினும் செயப்படுபொருள் காரியகாரணம் தோன்றி நிற்பனவும் தோன்றாது நிற்பனவும் என இருவகைப்படும். அவற்கு வேறு ஓதினார் என்க.

ஆடையை நெய்தான், குடத்தை வனைந்தான். இவை காரணகாரியம் தோன்ற நின்றன. ஊரைக்காத்தான் என்பது தோன்றாது நின்றது. ஈண்டு ஓதினவெல்லாம் தொழிற்சொல் ஆதலின் இவற்றை முடிக்கும் சொல்லும் இவையடியாகப் பிறந்த சொல் என்க.

ஊரைக் காக்கும் என்பது காக்கப்படும் பொருள். காவலைக் காக்கும் என்பது காவற்றொழில் மேல் வந்தது. தந்தையை ஒக்கும். தேரை ஊரும். இழை என்பது அணிகலன். ஆடகத்தைப் பூணும். அன்றியும் நூலை இழைக்கும். கிளியை ஒப்பும். கொடுப்பாரைப் புகழும். கொடாதாரைப் பழிக்கும். புதல்வனைப் பெறும். பொருளை இழக்கும். அகத்தைக் காதலிக்கும். பகைவரை வெகுளூர். செற்றாரைச் செறும். நட்டாரை உவக்கும். நூலைக் கற்கும், வினையை அறுக்கும். ஆசையைக் குறைக்கும். பலவற்றைத் தொகுக்கும். சிலவற்றைப் பிரிக்கும். பொன்னை நிறுக்கும். அரிசியை அளக்கும். அடைக்காயை எண்ணும். அறத்தை ஆக்கும். தூணைச் சாரும். நெறியைச் செல்லும். குதிரைக் கன்றும். கணையை நோக்கும். கள்வரை அஞ்சும். அறிவைச் சிதைக்கும்.

அன்னபிறவும் என்றதனால், இசையைப்பாடும், பகைவரைப் பணிக்கும் எனவும் குழையை உடையன், வலியை உடையன், கல்வியை உடையன். காவலை உடையன், என ஆறும் வேற்றுமைப் பொருள் மொழி மாற்றாகி வருவனவும் கொள்க. பிறவும் அன்ன.

'அம்முதற்பொருள என்ன கிளவியும், என்றதனால் செயப்படுபொருளேயன்றி அதற்குக் காரணமாகிய பொருள்மேலும் பொருளினது உறுப்பின்மேலும் பொருள் வருவனவும் கொள்க. மண்ணை வனைந்தான், நூலைநெய்தான், இவை காரணம். விளம்பை நெய்தான், உறுப்பு. சுவரை எழுதினான், இடம். பிறவும் அன்ன.

சூ 11 மூன்றா குவதே,
ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக்கிளவி
வினைமுதல் கருவி அனைமுதற் றதுவே

மூன்றும் வேற்றுமையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மூன்றும் வேற்றுமையாவது ஒடுவெனப் பெயர் பெற்ற வேற்றுமைச்சொல். அது வினை முதலும் கருவியுமாகி அவ்விரண்டு காரகத்தையும் உடைத்து என்றவாறு.

ஈண்டு முதல் என்பது காரகம், கருத்தாவின் கண்ணும் கருவியின் கண்ணும் வரும் என்றவாறு. கொடியொடு தொடக்குண்டான், இதுவினைமுதல். 'ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்' இது கருவி.

சூ 12 அதனி னியறல் அதற்றகு கிளவி
அதன்வினைப் படுதல் அதனி னாதல்
அதனிற் கோடல் அதனொடு மயங்கல்
அதனொ டியைந்த ஒருவினைக் கிளவி
அதனொ டியைந்த வேறுவினைக் கிளவி
அதனொ டியைந்த வொப்ப லொப்புரை
இன்னா னேது ஈங்கென வருஉம்
அன்ன பிறவும் அதன்பால என்மனார்.

இதுவும் மூன்றும் வேற்றுமைக்கு உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- அதனின் இயறல் முதலாக ஒப்பல், ஒப்புரை ஈறாக எடுத்தோதப்பட்ட சொல்லினான் வரும் பொருண்மையும் இன், ஆன்,

எது என இவ்விடத்துவரும், ஆத்தன்மைய பிற சொற்களும் மூன்றும் வேற்றுமைப் பாலன.

அதனின் இயறலாவது: இயலப்படுவதற்குக் காரணமாகிய பொருள்மேல் உதாரண வாய்பாட்டான் வந்தது. மண்ணினன் இயன்ற குடம், அரிசியானாகிய சோறு.

அதற்றகுகிளவியாவது: அதனால் தகுதியுடைத்தாயிற்றென்னும் பொருண்மை தோன்ற வருவது. கண்ணான் நல்லன், குணத்தான் நல்லன், நிறத்தான் நல்லன், என உறுப்பும் பண்பும் பற்றி வருவன.

அதன்வினைப்படுதலாவது, ஒன்றன் தொழில் மேல் வருவது. புலிபாய்தலாற் பட்டான், ஓட்டாற் கடிநு குதிரை என்பன.

அதனினாலாவது: ஆக்கத்திற்கு ஏதுவாகி வருவது. வாணிகத்தின் ஆயினன், எருப் பெய்து இளங்களை கட்டமையாற் பைங்கூழ் நல்லவாயின.

அதனிற்கோடலாவது: ஒன்றனை ஒன்றைக் கோடல், காணத்தாற் கொண்ட அரிசி.

அதனொடு மயங்கலாவது: ஒன்றோடொன்று விரவிவருதல். பாலொடு கலந்த நீர். அதனொடு இயைந்த ஒருவினைக் கிளவியாவது: ஒருவினையான் இருபொருள் முடிவது. படையொடு வந்தான் அரசன்.

அதனொடு இயைந்த வேறுவினைக் கிளவியாவது: வேறு வினையை உடையன. இரண்டு சொல் ஒருவினையொடு தொடர்வது. காவோடறக் குளம் தொட்டான்.

அதனோடியைந்த ஒப்பலொப்புரையாவது: உவமையன்றி இதுவும் அதுவும் ஒக்கும் என அளவினானும் நிறையினானும் எண்ணினானும் வருவன. இதனோடு ஒக்கும் இது. இக்கூற்றோடொக்கும் இக்கூறு. இன்னென்பது இன் என்னும் சொல். ஆன் என்பது ஆன் என்னும் சொல். எது என்பது எது என்னும் சொல்.

அன்னபிறவாவன: காரணம், நிமித்தம், துணை மாறு

என்பன. இவையும் மூன்றும் வேற்றுமைப் பொருளுணர்த்தும் உருபுகளும் பொருளுணர்த்தும் சொற்களுமாம் என்றவாறு. புகையுண்மையின் நெருப்புண்மையறிக. சுக்ரிவன் துணையாக இலங்கை கொண்டான்.

1 ''அனையை யாகல் மாறே
மன்னுயி ரெல்லாம் நின்னஞ் சும்மே''

இன்னும் அன்னபிறவும் என்றதனால் ஒடு, ஆல் எனவரும் உருபும் கொள்க.

2 ''என்னே டிருப்பினும் இருக்க இளங்கொடி
தன்னோ டெடுப்பினும் தகைக்குநர் இல்லென்று''
3 ''கணிகொண் டலர்ந்த நறவேங்கையோடும்
கமழ்கின்ற காந்த ளிதழால்
அணிகொண்ட'' என்புழி ஒடு வந்தது.

சூ 13 ''நான்கு ஆகுவதே,
குஎனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
எப்பொ ருளாயினும் கொள்ளு மதுவே''

நான்காம் வேற்றுமையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :— நான்காம் வேற்றுமையாவது, கு எனப்பெயர் பெற்ற வேற்றுமைச்சொல். அது யாதானும் ஒரு பொருளாயினும் ஏற்று நிற்கும் நிலைமைத்து என்றவாறு. எனவே ஏற்கும் பொருண்மைக்கண் வரும்.

அந்தணர்க்குக் கொடுத்தான் எனவரும்.

சூ 14 அதற்குவினை உடைமையி னதற்குடம் படுதலின்
அதற்குப் படுபொருளின் அதுவாகு கிளவியின்
அதற்குயாப் புடைமையின் அதற்பொருட்டாகலின்
நட்பிற் பகையிற் காதலிற் சிறப்பினென்று
அப்பொருட் கிளவியும் அதன்பால என்மனார்

இதுவும் நான்காம் வேற்றுமைக்கண் வரும்பொருள் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

---

1. புறம் 20. 2. மணி. சிறைவிடு 35-6. 3. குள. அரசி. 197.

உரை :- அதற்கு வினையுடைமை முதலாக சிறப்பீருகச் சொல்லப்பட்டவற்றின் கண் அப்பொருள்பட வரும் சொல்லும் உம்மையால் அந்நிகரன பிறபொருட்கண் வரும் சொல்லும் நான்காம் வேற்றுமைப்பாலன என்றவாறு. உம்மை எச்சவும்மை.

அதற்கு வினையுடைமையின் என்பது மேற்சொல்லப்பட்ட கொடைப் பொருண்மையேயன்றி உருபேற்கும் பொருட்டு வினையாதலுடைமை கூறும்வழியும் நான்காம் வேற்றுமைப் பாலினவாம் என்றவாறு. உதாரணம்: அவர்க்குப் போக்குண்டு. அவர்க்கு வரவுண்டு. இவை வினை, கரும்பிற்கு உழுதான் என்பதுமது. அதற்கு உடம்படுதல் என்பது, உடம்பாடு கூறும் வழியும் நான்காவதாம் என்றவாறு.

உதாரணம் : இதற்கு நிறம் கருமை. இதற்கு வடிவு வட்டம். இதற்கு அளவு நெடுமை. இதற்குச் சுவை கார்ப்பு. இச்சொற்குப் பொருள் இது. இவ்வாடைக்கு விலை இது எனவும் இவ்வாறு வருவன-வும் கொள்க. இன்னும் அதற்குப் படுபொருள் என்றதனால் உடைப் பொருளும் அவ்விடத்திற்கு ஆம் பொருளும் காலத்திற்கு ஆம் பொருளுமாகி வருவனவும் கொள்க. அவற்குச் சோறுண்டு. ஈழத்திற்கேற்றின பண்டம், காலத்திற்கு வைத்த விதை எனவரும்.

அதுவாகுகிளவி-ஒன்றொன்றாகத் திரிந்து வரும் பொருட்கு வருவது. கடிசூத்திரத்துக்குப் பொன், கும்மாயத்திற்குப் பயறு. அதற்கு யாப்புடைமையாவது உருபேற்கும் பொருட்கு வலியாதலுடைமை.

1 "யாக்கையை யாப்புடைத்தாய்ப் பெற்றவர் தாம் பெற்ற, யாக்கை" என்றவழி வலி எனப்பொருளாயிற்று. உதாரணம் போர்க்கு வலி குதிரை, நினக்கு வலிவாள் எனவரும்.

அதற்பொருட்டாகலின் என்பது, ஒரு பொருட்டாக என்பது படவருதல். உதாரணம்: கூழிற்குக் குற்றேவல் செய்யும் கூலிக்கொலிக்கும், நட்பு—அவற்குத் துணை, அவற்கு நட்பு எனவரும். பகைஅ—வற்குப் பகை காதல்-மகற்குக் காதலன். சிறப்பென்பது இன்றியமையாமை பற்றிவரும்.

1. நாலடி. 28.

உதாரணம் :- "யாமுக்குச் சிறந்தனமாதல் அறிந்தனிராயின்" எனவும் வரும். உம்மையாற் கொள்ளப்படுவன ; இவ்வூர்க் கவ்வூர் காதம் நாளைக்கு வரும், இவர்க்குத் தாம் இது. இவர்க்கு நன்மை பயக்கும். அவற்குப் பிறந்த மகன். பிறவும் இந்நிகரனவெல்லாம் கொள்க.

சூ 15 *ஐந்தாகுவதே,*
*இன்னெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி*
*இதனின் இற்றிது என் மதுவே*

ஐந்தாம் வேற்றுமை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- ஐந்தாம் வேற்றுமையாவது இன் என்று பெயர் கொடுத்தோதப்பட்ட வேற்றுவைச் சொல். அஃது இப்பொருளின் இத்-தன்மைத்து இப்பொருள் என உணர்த்தும் என்றவாறு எனவே இவ்வாய் பாட்டான் வரும் பொருண்மையெல்லாம் ஐந்தாவதாம் என்றவாறு.

அவையாவன : நீங்க நிற்பதூஉம் பொருவும் ஏதுவும் என்பன. அவற்றுள் நீங்க நிற்பது பொருள் நீங்கி நிற்பதூஉம் இடம் நீங்கி நிற்பதூஉம் என இருவகைப்படும். பொருவும் மிகுதலும், குறைதலும் ஒத்-தலும் என மூன்றுவகைப்படும். அவற்றுள் பொருவும் ஏதுவும் வருகின்ற சூத்திரத்தால் கூறுதலானும், 'பல்பொருட்கேற்பின் நல்லது கோடல்' என்-பதனாலும் இச்சூத்திரத்திரம் நீங்க நிற்பது குறித்தென்பது கொள்ளப்படும்.

உதாரணம் : வரையினின்றும் விழாநின்றது அருவி.

சூ 16 *வண்ணம் வடிவே அளவே சுவையே*
*தண்மை வெண்மை அச்சம் என்று*
*நன்மை தீமை சிறுமை பெருமை*
*வன்மை மென்மை கடுமை என்று*
*புதுமை பழமை ஆக்கம் என்று*
*முதுமை இளமை சிறத்தல் இழித்தல்*
*இன்மை உடைமை நாற்றம் தீர்தல்*
*பன்மை சின்மை பற்று விடுதல்என்

*றன்ன பிறவும் அதன்பால என்மனார்*

இதுவும் ஐந்தாம் வேற்றுமைப் பொருள் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : வண்ணம் முதலாகப் பற்றுவிடுதல் ஈறாக ஓதப் பட்டனவும், அத்தன்மைய பிறவும் ஐந்தாம் வேற்றுமைப் பாலன என்றவாறு.

யாதானும் ஒன்றைப் பொருவிக் கூறும்வழி பண்பினானுதல் தொழிலினானுதல், பொருளினானுதல் கூறல்வேண்டுதலின் அவையெல்லாம் எடுத்தோதப்பட்டன.

உதாரணம் : இதனிற்கரிது, இதனின் வட்டம், இதனின் நெடிது, இதனிற் கைக்கும், இதனிற்றண்ணிது, இதனின் வெய்து, இதனின் அஞ்சும். இதனின் நன்று, இதனிற்றீது, இதனிற்பெரிது. இதனின் வரிது இதனின்மெலிது, இதனிற்கடிது, இதனின்முதிது, இதனின்இளைது, இதனிற் சிறந்தது, இதனின்இழிந்தது, இதனிற்புதிது, இதனிற்பழைது, இதனின் ஆக்கம், இவனின்இலன், இவனின்உடையன். இதனின்நாறும், இதனிற்றீரும், இவரிற்பலரிவர், இவற்றிற் சில ஏறும், இதனிற் பற்றுவிடும்.

அன்னபிறவும் என்றதனால், இவனிற் காக்கும் இவனிற் பண்ணும் இவனிற் பாடும், என வருவன கொள்க.

இவற்றுட் பெரிதென்பது மிகுதிகுறித்து நின்றது. சிறிது என்பது குறைவு குறித்து நின்றது. ஏனையவும் இவ்வாறு நோக்கிக்கொள்க. இவையெல்லாம் ஒப்புக்குறித்துழி உவமையாம். ஏதுக்குறித்துழிக் கரியாயிற்று, வட்டமாயிற்று என உதாரணம் காட்ட உருபேற்றபொருளெல்லாம் ஏதுவாம் என்றவாறு.

சூ 17 *ஆறாகுவதே,*
*அதுவெனப் பெயரிய வேற்றுமைக்கிளவி*
*தன்னினும் பிறிதினும் இதனதிதுவெனும்*
*அன்ன கிளவிக் கிழமைத் ததுவே*

ஆறாம் வேற்றுமையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- ஆறாம் வேற்றுமையாவது, அதுவெனப் பெயர்

பெற்ற வேற்றுமைச் சொல். அது தன்னினும் பிறிதினும் இதனது இது எனவரும் பெற்றிப்பட்ட பொருட்கிழமையை உடைத்து என்றவாறு.

தன் என்றது உடையானை, பிறிதென்றது உடைப்பொருளை. ஈண்டுக் கிளவி என்பது பொருள். கிளக்கப்படுவது கிளவியாயிற்று. கிழமை என்பது உரிமை. தன்னோடும் பொருளோடும் உள்ள உரிமை உணரவரும் ஆறுவதென்றவாறு. அதுவென்பது ஒருமை உணர்த்தும் சொல்லாகலின் 'வந்தது கண்டு வராது முடித்தல், என்பதனால் பன்மையை உணர்த்தும் அகர உருபும் கொள்க.

உதாரணம் :- சாத்தனது குழை, சாத்தன குழைகள், உலகத்துக் குழையுடையாரும் பலர். குழையும் பல. ஆயினும் இக்குழை இவனதென்னும் உரிமை தோன்ற வந்தவாறு கண்டுகொள்க.

சூ 18 இயற்கையின் உடைமையின் முறைமையிற்
கிழமையிற்
செயற்கையின் முதுமையின் வினையின் என்று
கருவியிற் றுணையிற் கலத்தின் முதலின்
ஒருவழி உறுப்பிற் குழுவின் என்று
தெரிந்துமொழிச் செய்தியின் நிலையின்
வாழ்ச்சியிற்
திரிந்து வேறுபடூஉம் பிறவுமன்ன
கூறிய மருங்கிற் றோன்றும் கிளவி
ஆறன் பால என்மனார் புலவர்

இது ஆறும் வேற்றுமைப்பொருள் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- இயற்கை முதலாக வாழ்ச்சி ஈறாக எண்ணப் பட்ட கிழமையினும் திரிந்து வேறுபடூஉம் பிறவற்றினும் அத்தன்மையவாகி மேற்சொல்லப்பட்ட இதனது இது எனும் பொருள் தோன்றும் சொல் எல்லாம் ஆறும் வேற்றுமைப் பாலன என்றவாறு.

மேலைச் சூத்திரத்தான், உடையானும் உடைப்பொருளு-

மாகிய கிழமை எடுத்தோதினர் இச்சூத்திரத்தான், அதனின் வேறுபட்டு வருவன எடுத்தோதினர் என்று கொள்க.

இயற்கை என்பது இயல்பாகிய கிழமை. அஃதாவது, பொருட்கு இயல்பாகிய பண்பு. நிலத்ததுவலி, நீரதுதண்மை, தீயதுவெம்மை, எனவரும். உடைமை என்பது உடைப்பொருளின் பாகுபாடு உணரநில்லாது பொதுமை உணர நிற்பது. அப்பொழுது கிழமையினும் வரும் என்றவாறு. சாத்தனது உடைமை எனவரும். சாத்தனது குழை என்றதனோடு இதனிடை வேற்றுமை என்னையெனின் சாத்தனது உடைமை குழை எனவும் வந்து குறிப்பு வினைப்பொருளொடு முடிதலின் வேறு ஓதப்பட்டது. வினைக்குறிப்பு ஓதுகின்ற வழி, 1 'அதுச்சொல் வேற்றுமை உடைமையானும்' என்று ஓதினர் ஆகலின், ஈண்டுக் குழை என நிற்றலையன்றிக் குழையை உடையன் எனவும் வருதலின் ஈண்டு வேறுபடுத்து ஓதல்வேண்டுமென்று உணர்க. முறைமை என்பது உடையானும் உடைப்பொருளுமன்றி முறைமையாகிய கிழமையான் வருவது. ஆவினது கன்று. அஃதாவது இவற்கு இவள் உரியள் என்னும் பொருள்பட வருவது. முறைமை சாரவைத்தனால் கிழத்தியார் என்று கொள்ளப்படும்.

அரசனது உரிமை செயற்கையாவது, செயற்கையான் வருவது. சாத்தனது கல்வி, சாத்தனது கோலம், முதுமை என்பது பரிணமம் குறித்து நிற்கும்.

சாத்தனது முதுமை. 'வந்தது கண்டு வராதது முடித்தல்' என்பதனால் இளமையும் கொள்க. சாத்தனது இளமை. வினை என்பது தொழில் உணரவருவது. சாத்தனது வரவு. கருவி என்பது உடைமை குறியாது, இதற்கு இது கருவி என்னும் பொருள்பட வருவது. யானையது தோட்டி, வனைகலத்தது திகிரி, துணையென்பது நட்பின் மேல் வரும். சாத்தனது துணை இது. வந்தது கண்டு வராதது முடித்தல் என்பதனால் பகையும் கொள்க. சாத்தனது பகை. மாறுபாடும் இனம் ஆகுமோ எனின் மாறுபாடும் அப்பொருள் குறித்தலின் இனமாம். கலம் என்பது பரலது

1. வினையியல் 16.

கலம் நிலத்தது விலைக்கலம். முதலென்பது சினையோடு அடுத்து முதல் உணர வருவது. கொடியது முதல். ஒருவழி உறுப்பு என்பது முதலோடு சினையடுத்து வருவது. சண்பகத்துக் கோடு குழாமென்பது பலபொருள் தொகுதி. படையது குழாம். நெல்லது குப்பை. தெரிந்து மொழிச் செய்தியாவது, தெரிந்த மொழியினது செயல் கூறல். பாட்டது கருத்து, பாட்டதுபொருள், நிலை என்பது, அவரவர் நின்ற நிலை என்பது அவரவர் நின்றநிலை குறித்து வருவது.

சாத்தனது இல்வாழ்க்கை சாத்தனது தவம், வாழ்ச்சி என்பது இடம் பற்றி வரும். யானையது காடு, காட்டது யானை, திரிந்து வேறுபடுவன, எண்ணது சாந்து. கோட்டது நூறு. கூறிய மருங்கிற்றோன்று-வன, சாத்தனது தோப்பு, பொருளது கேடு, ஆவினது பால், கரும்பினது சாறு என இந்நிகரனவெல்லாம் கொள்க. இன்னும் கூறிய மருங்கிற்-றோன்றும் கிளவி என்பதனால் உருபின் பொருள்பட வரும் உடைய என்னும் சொல்லும் கொள்க.

சூ 19 ஏழாகுவது,
கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைசெய் இடத்தின் நிலத்தின் காலத்தின்
அனைவகைக் குறிப்பிற்றோன்றும் அதுவே

ஏழாம் வேற்றுமை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- ஏழாம் வேற்றுமையாவது கண் எனப் பெயர் பெற்ற வேற்றுமைச் சொல். அது வினை நிகழுமிடத்து நிலத்தினும் காலத்-தினும் அவ்விருவகைக் குறிப்பினும் தோன்றும் என்றவாறு.

எனவே, தொழில் நிகழாதவழி, நிலமும், காலமும் ஏழாம் வேற்றுமை ஆகா என்றவாறும்.

உதாரணம் :- அரங்கின்கண் வினைந்தான். மாடத்தின்கண் இருந்தான். இவை நிலம் காலைக்கண் வனைந்தான். மாலைக்கண் வனைந்-தான் இவை காலம். போரின்கண் வந்தான் என்றவழி இடம் குறித்தானாயின் பொரா நின்ற காலத்து வந்தான் எனவும் நிலமும் காலமும் குறித்துக்

கொள்ளக் கிடந்தது. ஆலின் கீழ்க்கிடந்ததுஆ. ஆலின்கண் இருந்தது குரங்கு, என்ற வழிக்கீழ்க்கிடந்ததுஆ, மேலிருந்தது குரங்கு. இவ்வாறு வரும் இட வேறுபாடும் குறித்துக்கொள்ளப்படும். பிறவும் அன்ன. இவை பொருண்மைக்கண் உருபு புலப்படாமல் இடவேறுபாடு காட்டுவன. சிலகண்டவற்றை எடுத்தோதுகின்றார், வருகின்ற சூத்திரத்தான.

சூ 20 *கண்கால் புறம் அகம் உள்உழை கீழ்மேல்*
*பின்சார் அயல்புடை தேவகை எனாஅ*
*முன் இடை கடைதலை வலம் இடம் எனாஅ*
*அன்ன பிறவும் அதன்பால என்மனார்*

இது ஏழாம் வேற்றுமைப் பொருள் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- கண்முதலாக இடம் சுருக ஓதப்பட்டனவும் அத்தன்மைய பிறவும் ஏழாம் வேற்றுமைப்பால என்றவாறு.

இவையெல்லாம் பெயரைச் சார்ந்து தனித்தனிவயில் பெயராகி உருபேற்கும். பெயரைச் சாராது இடமும் காலமும் ஆகிய பொதுமை உணர வரினும் உருபு மாத்திரமாகி நிற்கும். இடவேறுபாடு உணரவயின் உருபு புலப்படாது, பொருள் உணரவரும்.

உதாரணம் : அகத்தை, அகத்தொடு, புறத்தை, புறத்தொடு, என்ப தனித்து உருபேற்றன. அரங்கினுள் அகழ்ந்தான், மரத்துழை இருந்தான் என்பன உருபாகி நின்றன. இனி இடம் வேறுபாடு காட்டுமாறு: கண் என்பது இடம். அரசர்கட் சென்றான், நெறிக்கட் சென்றான் என்றாற்போல...... அரசன் ஆதாரம் ஆகலின்றி அவனிடத்துச் சென்றான் என உருபு புலப்படாமல் 'இடம' என்பதோர் பொருள் உணர்த்தியவாறு கண்டுகொள்க. கால், ஊர்க்கால் நிவந்த பொதும்பர். ஊரை...... ஆகிய பொருள்மேல் வந்தது. புறம்-சுவர்ப்புறத்துப்பாவை. பாவைக்கு ஆதாரமாகின்றது சுவராயினும் அச்சுவரகத்துப் பாவையின்மையின் புறமென ஒரு பொருள் தோன்ற நின்றது. அகம்-எயிலகத்துப்புக்கான். புறம் உண்டாகலின் அகம் என ஒரு பொருள் தோன்ற நின்றது. உள், சிலையுட் பொருள். சிலைப்புறத்துப் பொருள் இன்மையின் உள் என ஒரு பொருள் தோன்ற

நின்றது. உழை, அரசனுழை இருந்தான் அரசன் அருகென ஒரு பொருள் தோன்றி நின்றது. கீழ்மாடத்தின் கீழ் இருந்தான். மேல் அன்மை காட்டிற்று. மேல்மாடத்தின் மேலிருந்தான், அன்மைகாட்டிற்று. பின்-அரசன்பின் இருந்தான். முன், அன்மைகாட்டிற்று. சார்—காட்டுச்சார் ஓடும் குறுமுயால், காட்டைச் சார்ந்த இடம் என்பது தோன்றிற்று. அயல்—மனே. அயல் இருந்தான். மனே அல்லாத பிற இடம் தோன்ற வந்தது. புடை ன்எபது பக்கம். எயிற்புடை நின்றான். எயிலின்கண் ஒரு பக்கம் என்பது தோன்றிற்று. தேவகை என்பது திசைக்கூறு. அரங்கின் வடக்கிருந்தான். தெற்கிருந்தான் என்றவழி வடக்கு தெற்கென ஒரு பொருள் தோன்றி நின்றது. முன். அரசன் முன் இருந்தான், பின், அன்மைகாட்டிற்று. இடை, கடை, தலே என்பன கலத்தின் கடை, நின்றான். கலத்தின் தலே நின்றான், என மரக்கலத்தின் இடவேறுபாடு காட்டின. வலம், இடம் என்பன அரசன் வலத்திருந்தான் அமைச்சன். அரசன் இடத்திருந்தான் சேனுபதி, என வலம் இடம் எனச் சில பொருள் தோன்றி நின்றன.

அன்னபிறவும் என்றதனுல், இல்வயின், வழி, மாட்டு, தேம், மருங்கு, பால்......ய முதல் என வருவனவெல்லாம் கூறிய நெறியினுல், வேறுபாடு உணர்த்துனவும் உருபு மாத்திரமாகி நிற்பனவும் பெயராகி நிற்பனவும் அறிந்து கொள்க.

சூ 21 *வேற்றுமைப் பொருளே விரிக்கும் காலே*
*ஈற்றின் இயலும் தொகைவயிற் பிரிந்து*
*பல்லாறுகப் பொருள் புணர்ந் திசைக்கும்*
*எல்லாச் சொல்லும் உரிய என்ப*

**அறுவகை வேற்றுமைக்கும் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.**

உரை:- வேற்றுமைக்கு உரிய பொருளே விரியக்கூறுங்கால், முதற்பெயர் இறுதிக்கண் இயலும் தொகைச் சொல்லின்கண்-தொகையாம் தன்மையிற் பிரிந்து பல நெறியாகப் பொருளேப் புணர்ந்து ஒலிக்கும் எல்லாச்சொல்லும் உரிய என்று சொல்வர் ஆசியர் என்றவாறு.

தொகுத்தல் என்பது செறிதல். முதற்பெயரோடு செறிவது

தொகை என்று பெயர் ஆயிற்று

இவையாவன :- படைக்கை, குழைக் காது, தாய் மூவர், குதிரைத் தேர், கருப்பு வேலி, வரை யருவி, பாண்டியநாடு, குன்றக் கூகை என்பன.

இவற்றுள் இறுதிப் பெயர் முதற்பெயரோடு ஒன்றி நிற்றலின் தொகை என்றார். இவை விரிய நின்ற காலத்து இவற்றைப் புணர்ந்து ஒலிக்கும் சொல்லாவன : படைக்கை என்றவழி, படையைப் பிடித்த கை, எடுத்த கை, ஏந்திய கை எனவும் குழைக்காது என்றவழி குழையை உடைய காது செறித்த காது, இட்ட காது, அணித்வகாது, எனவும் தாய்மூவர் என்றவழித் தாயோடு கூடி மூவர், கூடியமூவர் எனவும் குதிரைத்தேர் என்றவழி குதிரையாற் பூட்டப்பட்ட தேர், பூணப்பட்டதேர், ஓட்டப்பட்டதேர், எனவும் கரும்புவேலி என்றவழி கரும்பிற்கு ஏமமாகிய வேலி, வலியாகிய வேலி, எனவும், வரையருவி என்றவழி வரையினின்றும் வீழாநின்ற அருவி, ஒழுகாநின்ற அருவி எனவும் பாண்டியனது நாடு உடைய நாடு, எறிந்த நாடு, கொண்டநாடு, எனவும் குன்றக்கூகை என்றவழி குன்றத்துக்கண் வாழாநின்ற கூகை, இராநின்ற கூகை எனவும், இவ்வாறு வருவன. இவையெல்லாம் எடுத்தோதின் வரம்பில ஆகலின் எல்லாச் சொல்லும் உரிய எனப் புறனடை ஓதல் வேண்டிற்று.

இவற்றுள் ஆறும் வேற்றுமை உருபு புலப்பட்டவழிப் பெயரோடு முடிந்தும் புலப்படாதவழிச் சிறுபான்மை வினைக்குறிப்போடும் வினையோடும் முடிந்தும் ஏனை வேற்றுமைகள் எல்லாம் வினையோடும் வினைக்குறிப்போடும் முடிந்தும் வருதலான் பெயரச் சொல்லும் வினைச்சொல்லும் ஆகிய எல்லாச் சொல்லும் வேற்றுமைக்கு முடிபாம் என்று கொள்க. அவ்வழி வினையும் வினைக்குறிப்பும் ஆகிய சொற்கள் இறுதி நின்ற பெயரோடும் முடிபுழிப் பெயரெச்சமாகியும் தனிவரின் முற்றாகியும் வரும் என்று கொள்க. இச்சூத்திரத்தானே வேற்றுமைக்கு முடிபு கூறினாரும் ஆம்.

வேற்றுமை ஒத்து முடிந்தது. இவ்வோத்தினுள் சூத்திரம் உட்பட உரையினது அளவு கிரந்த வகையால் முந்நூற்று முப்பது.

# (3) வேற்றுமை மயங்கியல்

சூ 1 கருமம் அல்லாச் சார்பென் கிளவிக்
குரிமையும் உடைத்தே கண்ணென் வேற்றுமை

இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின் வேற்றுமை மயங்கியல் என்னும் பெயர்த்து. ஒன்றற்கு உரிய உருபு ஒன்றனோடு மயங்குதலும் ஒன்றற்கு உரிய பொருள் ஒன்றனோடு மயங்குதலும் கூறினமையால் பெற்ற பெயர்

இதனுள் இச்சூத்திரம் என் நுதலிற்றோ எனின்,

இரண்டாவது ஏழாவதனொடு மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று. கருமம் என்பது வடமொழிச் சிதைவு. செயப்படு பொருளை அவர் கருமம் என்று வழங்குப.

செயப்படுபொருள் அல்லாத சார்பு என்னும் சொற்கு ஏழாம் வேற்றுமை உரிமையாதலும் உரித்து என்றவாறு. உம்மை எதிர் மறையாதலால் இரண்டாம் வேற்றுமை உரித்தாதல் பெரும்பான்மை.

உதாரணம் : மனையைச் சார்ந்தான், மனைக்கட்சார்ந்தான் எனவரும். தூணைச் சார்ந்தான் என்றாற்போலச் சாரப்பட்ட பொருள் தோன்றுது இடம் தோன்றுவதற்கும் பொருள் தோன்றுவதற்கும் உரித்தாவதாயிற்று. ஒரு பொருள் இரண்டு உருபிற்கும் உரித்தாகி வருதலின் உருபு மயக்கம் ஆயிற்று.

2 சினை நிலைக் கிளவிக்கு ஐயும் கண்ணும்
வினை நிலை ஒக்கும் என்மனார் புலவர்

இதுவும் அது.

உரை :- சினைப்பொருண்மைக்கண் நிற்கும் பெயர்க்கும் இரண்டாவதும் ஏழாவதும் வினைநிலைக்கண் ஒத்த இயல்பின என்றவாறு.

உதாரணம் :- கண்ணைக் குத்தினன், கண்ணும் குத்தினன் எனவரும். கண் என்பது குத்தப்படும் பொருளுமாகிக் குத்துதற்கு இடமும் ஆகி வருதலின் இரண்டும் ஒத்த இயல்பின ஆயின.

இடம் ஆயினவாறு என்னை எனின் கண்ணின் கண்ணும் குத்தப்படுவது ஓர் இடம் ஆதலின் என்க. வினைநிலை ஒக்கும் என்றார். ஆயினும் ஒக்கும் வினையே கொள்ளப்படும்.

சூ 3 கன்றலும் செலவும் ஒன்றுமார் வினையே

இதுவும் அது.

உரை : கன்றலும் செலவும் ஆகிய வினைப் பொருண்மை மேல் சொல்லப்பட்ட இரண்டாவதனோடும், ஏழாவதனோடும் ஒன்றித் தோன்-றும் என்றவாறு.

இரண்டும் ஏழும் என்பது மேலைச் சூத்திரத்தினின்றும் தந்து-ரைக்கப்பட்டது.

உதாரணம்: சூதினைக் கன்றினான், சூதின்கண் கன்றினான், நெறியைச் சென்றான், நெறிக்கண் சென்றான், அவை பொருளுமாகி இடமு-மாகி நிற்றலின் இரண்டிற்கும் உரியனவாயின.

சூ 4 முதற்சினைக் கிளவிக் கதுவென் வேற்றுமை
முதற்கண் வரினே சினைக்கை வருமே
முதல்முன் ஐவரின் கண்ணென் வேற்றுமை
சினைமுன் வருதல் தெள்ளி தென்ப

இதுவும் இரண்டாவதும் ஏழாவதும் ஒரு பொருட்கண் நிகழ்வதோர் வேறு பாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- முதலும் சினையும் சேரவரும் சொற்கு முதற்கண் அதுவரின் சினைக்கு ஐ வரும் முதற்கண் ஐ வரின் சினைக்கண் கண் வருதல் தெளியப்பட்டது என்று சொல்வர் புலவர் என்றவாறு. மயக்கம் அன்று என்றவாறும்.

உதாரணம் :- யானையது கோட்டைக் குறைத்தான், யானையைக் கோட்டின்கண் குறைத்தான் எனவரும்.

'கண் என் வேற்றுமை சினைமுன் வருதல் தெள்ளிது. எனவே தெள்ளிதன்றிச் சிறுபான்மை ஐ வருதலும் கொள்ளப்படும்.

உதாரணம் :- யானையைக் கோட்டைக் குறைத்தான்.

சூ 5 முதலும் சினையும் பொருள் வேறுபடா
துவலும் காலைச் சொற்குறிப் பினவே

முதல்சினைக் கிளவி ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

முதல்சினை என்பன பொருளால் நியமம் இல. அவற்றைச் சொல்லுமிடத்துச் சொல் குறிப்பினால் அறியப்படும் என்றவாறு.

என்றது, ஒருகாற் சினையாகி வந்ததுதானே ஒருகால் முதலும் ஆகிவரும் என்றவாறு.

கோட்டது நுனியைக் குறைத்தான். கோட்டை நுனியைக் குறைத்தான் எனவரும்.

சூ 6 *பிண்டப் பெயரும் ஆயியல் திரியா*
*பண்டியல் மருங்கின் மரீஇய மரபே*

பிண்டப் பெயருக்கு உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- பிண்டப் பெயராவது திரட்சியானாகிய பெயர். அதுவும்-திரட்சியும் திரண்ட பொருளும் பொருளான் வேறுபடா. அவை-யிற்றைச் சொல்லும் திறம் பண்டு வழங்கின பக்கத்து...... மரபினவாம் என்றவாறு. எனவே, மேற்சொல்லியவாறு போலச் சொல்லுவான் குறித்த வழியோடும் என்றவாறு.

உதாரணம் :- படையது குழாத்தைக் கெடுத்தான். நெல்-லது குப்பையைச் சிதறினான். குப்பையைத் தலைக்கட் சிதறினான். குப்பையைத் தலையைச் சிதறினான் எனவரும். குழாத்தைத் தலைக்கட்கெடுத்தான் எனவும் படையைக் குழாத்தின்கட் கெடுத்தான் எனவும் நெல்லைக் குப்பையின்கட் சிதறினான் எனவும் வரின், பொருள் ஒற்றுமைப் பட்டுத் தோன்றாமையின் மரீஇய மரபு அன்றாயிற்று. பிறவும் அன்ன.

சூ 7 *ஒரு வினை ஒடுச்சொல் உயர்பின் வழித்தே*

மூன்றாம் வேற்றுமை உடனிகழ்ச்சிக்கு உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று

உரை :- இருபொருட்கண் ஒருதலை பற்றிவரும் ஒடுச்சொல் அவ்விரு பொருளின் வழியை உடைத்து என்றவாறு.

வழி என்றது அப்பொருளின் வழியாகிய பொருள் என்று கொள்க. உயர்வு என்பதைச் சிறப்பென்று கொள்க. கொள்ளவே, அத்-தொழிற்குச் சிறவாத பொருட்கண் வரும் என்றவாறும்.

உதாரணம் :- அமைச்சரோடு இருந்தான் அரசன் இருந்தான் என்னும் தொழிற்குச் சிறந்தான அரசன் ஆதலின் சிறவாத அமைச்சர் மேல் ஒடு வந்தது. அரசனோடு இருந்தார் அமைச்சர் என்றவழி இருந்தார் என்னும் தொழிற்குச் சிறந்தார் அமைச்சர் ஆதலின் ஒடு அரசர் மேல் வந்தது. இஃது உடனிகழ்ச்சி ஆகலான் அத்தொழிற்கு இருவரும் சிறந்தார் அமைச்சர், அவரை மந்திரம் இருமின் என்றார் என்றவழி, அச்சுட்டு ஈரிடத்தும் செல்லாமையானும், தொழில் முடியும் பெயரே சிறப்புடையதெனவும் கொள்க இனிச்சிறப்புடைய பொருள்மேல் ஒடு வருமெனப் பொருள் உரைத்தார் உளர் 1 ஆயினும் இப்பொருள் பாணினியாக்கும் ஒக்கும்.

ஆ 8 மூன்றனும் ஐந்தனும் தோன்றக் கூறிய
ஆக்கமொடு புணர்ந்த ஏதுக் கிளவி
நோக்கோ ரனைய என்மனார் புலவர்

மூன்றாவதற்கும் ஐந்தாவதற்கும் உரியதோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மூன்றாவதன் கண்ணும் ஐந்தாவதன் கண்ணும் விளங்க எடுத்தோதப்பட்ட ஆக்கம் என்னும் சொல்லோடு தொடர்பு பட்ட ஏதுக்கிளவி இருவகை வேற்றுமைக்கும் நோக்கு ஒரு தன்மைய என்றவாறு.

உதாரணம் :- வாணிகத்தான் ஆயினான், வாணிகத்தின் ஆயினான் என இருவாற்றானும் வரும்

ஆக்கமொடு புணர்ந்த ஏதுக்கிளவி என விதந்தோதிய அதனான், ஏனை ஏதுக்கள் நோக்கு ஒவ்வாத நிலைமைய என்பது பெறுதும். ''அமைத்தனாற்றக்கான் அரசன்'' என்றவழித் திரிபின்றி ஏதுப்படுதலேயன்றி அமைத்தனைப் போல என்றுதல், அமைத்தனிற்காட்டில் என்றுதல், பொருள் உரைக்கவும் படுமாதலால், ஆக்கமொடு புணர்ந்த ஏதுவே ஒப்பமுடிவது. ஏனை ஏதுக்கள் திரிபுடைய என்பது அறிவித்தற்கு இச்சூத்திரங் கூறப்பட்டது.

1. இளம்பூரண.

சூ 9 இரண்டன் மருங்கின் நோக்கல் நோக்கமவ்
விரண்டன் மருங்கின் ஏதுவுமாகும்

இரண்டாவதனோடு மூன்றாவதும் ஐந்தாவதும் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- இரண்டாம் வேற்றுமைக்கண் ஓதப்பட்ட... பொருண்மையின் நோக்குதல் அல்லாத நோக்கம், மூன்றாவதினும் ஐந்தாவதினும் ஓதப்பட்ட ஏதுவினும் ஆம் என்றவாறு.

''அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறம்நோக்கிப்
புன்சொல் உரைப்பான் பொறை''

என்றவழி அறத்தை நோக்கி என விரித்தலேயன்றி அறத்தான் நோக்கி ஆற்றுங்கொல் அறத்தின் நோக்கி ஆற்றும் கொல் என விரிப்பினும் ஆம் என்றவாறு. புன்சொல் உரைப்பானை நிலம் பொறுக்கின்ற பொறையாகிய த மத்தைக் குறித்தோ அத்தருமம் தனக்கியல் பாதலின் அஃதேதுவாகவோ என இருவாற்றானும் விரிப்பினும் அமைந்தவாறு கண்டு கொள்க.

சூ 10 தடுமாறு தொழிற்பெயர்க் கிரண்டும் மூன்றும்
கடிநிலை யிலவே பொருள்வயி னான

உரை :- இரண்டு பொருள் தடுமாறி வரும் தொழிலை உடைய பெயர்க்கு இரண்டாவதும் மூன்றாவதும் வருதல் நீக்கப்படா பொருள் கொள்ளுமிடத்து என்றவாறு.

அஃதாவது, 'புலிகொல்யானை' என்பது, இதற்குப் பொருள் உரைக்குங்கால் புலியைக் கொன்றயானை எனவும், புலியாற்கொல்லப்பட்ட யானை எனவும் இவ்வாறு இருவகை வேற்றுமைக்கும் உரித்தாகலின் மயக்கம் ஆயிற்று பொருள் துணியுமாறு வருகின்ற சூத்திரத்துக் கூறுப.

சூ 11 ஈற்றுப் பெயர் முன்னர் மெய்யறி பனுவலின்
வேற்றுமை தெரிப உணரு மோரே

மேலதற்கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

---

குறள் புறம்கூறாமை 9.

உரை :- இறுதிக்கண் நின்ற பெயர் முன்னர்ப் பொருள் அறியவரும் முறையினால் வேறுபாடறிய அதன் இயல்பு உணரவேண்டுவார்.

உதாரணம் :- புலிகொல்யானை ஓடுகின்றது. புலிகொல் யானைக்கோடு வந்தது என்றவழி கொலையுண்ட பொருள் விளங்கியவாறு கண்டுகொள்க.

சூ 12 ஓம்படைக் கிளவிக் கையும் மானும்
தாம்பிரி விலவே தொகைவரு காலை

இரண்டாவதும் மூன்றாவதும் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று

உரை :- ஓம்படுத்துச் சொல்லுவதற்கண் வரும் சொற்கண் உருபு தொகையாகி வருங்காலத்து இரண்டாவதும் மூன்றாவதும் நீங்குதல் இல என்றவாறு. இரண்டாவதன் பொருளும் மூன்றாவதன் பொருளும் படும் என்றவாறு.

உதாரணம் :- 'அறம்போற்றி வாழ்மின்' என்றவழி அறத்தைப்போற்றி வாழ்மின் எனப் போற்றப்படுவது அறம் என்னும் பொருளும் பட்டது. அறத்தாற்போற்றி வாழ்மின் எனப்போற்றப்படுவார் தாம் என்னும் பொருளும் பட்டது.

சூ 13 குத்தொக வரூஉம் கொடையெதிர் கிளவி
அப்பொரு ளாறற் குரித்து மாகும்

நான்காவதோடு ஆறாவது மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- நான்காம் உருபு தொக எதிர்காலம் பற்றிவரும் கொடைப்பொருண்மை ஆறாவது விரித்தற்கு உரித்தும் ஆகும் என்றவாறு.

உதாரணம் :- 'தேவர்பலி' என்பது தேவர்க்கு நேர்க்கின பலி என விரிதலேயன்றித் தேவரது பலி எனவும் விரியும்.

சூ 14 அச்சக் கிளவிக் கைந்தும் இரண்டும்
எச்சம் இலவே பொருள் வயினான

ஐந்தாவதும் இரண்டாவதும் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- அச்சம் என்னும் பொருண்மைக்கு ஐந்தாவதும் இரண்டாவதும் பொருட்பக்கத்தான் ஒழிபில என்றவாறு. எனவே

சொற்பக்கத்தான் ஏனை வேற்றுமையும் ஒழிபில என்றவாறு.

உதாரணம் :- கள்ளர்ரை அஞ்சும் என்பது செயப்படு பொருள் குறித்து நின்றது. கள்ளரின் அஞ்சும் என்பது பொருஉப் பொருளும், ஏதுவும் குறித்து நின்றது. இனி அஞ்சும், கள்ளர்மாட்டு அஞ்சும் எனவரின் அவை ஏதுக்குறித்து நிற்றலின் பொருள் வகையான் ஏதுவாகியடங்கின.

*சூ 15 அதுவென் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்*
*அதுவென் உருபுகெடக் குகரம் வருமே*

ஆறுவது நான்காவதனோடு மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- உயர்திணைத் தொகைப் பொருண்மேல் வரும். அதுவென் வேற்றுமை அது என் உருபுகெடக் குகரம் வரும் என்றவாறு.

உதாரணம் :- நம்பி மகன் என்பதனைக் கிழமைப்பொருள் பட விரிப்புழி, நம்பிக்கு மகன் என விரியும் நம்பியது மகன் என வழுவாம்.

*சூ 16 ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமைக்கு*
*ஏழுமாகும் உறைநிலத் தான*

ஆறுவதனோடு ஏழாவது மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- ஆறும் வேற்றுமைக்கண் வாழ்ச்சிக்கிழமைக்கு ஏழாவதும் ஆம். பொருள் உறையும் நிலத்துக்கண் என்றவாறு.

எனவே உறையும் பொருட்கண் வாராது என்றவாறும்.

உறை பொருண்மேல் வந்தது-யானையதுகாடு, உறையும் நிலத்துக்கண் வந்தது. காட்டது யானை. அது காட்டுள் யானை எனவரும்.

*சூ 17 அன்ன பிறவும் தொன்னெறி பிழையாது*
*உருபினும் பொருளினும் மெய்தடுமாறி*
*இருவயி னிலையும் வேற்றுமை எல்லாம்*
*திரிபிட னிலவே தெரியு மோர்க்கே*

வேற்றுமை மயக்கத்திற்குப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேற்சொல்லப்பட்டன போல்வன பிறவும் ஆகித் தொன்னெறியிற்றப்பாது உருபானும் பொருளானும் இயல் தடுமாறி இரண்டிடத்தும் நிலைபெறும் வேற்றுமைச் சொல்லெல்லாம் ஆராய்ந்து உணர்வார்க்குப் பொருள் திரியும் இடன் இல என்றவாறு.

என்றது, பரந்துபட்ட சொல்லெல்லாம் எடுத்து ஓதப்படாமையின், ஈண்டு எடுத்து ஓதப்பட்ட நிகரனவாகி உயர்ந்தோர் வழக்கினும் சான்றோர் செய்யுளினும் வரூஉம் வேற்றுமை மயக்கம் எல்லாம் இதுவே ஒத்தாகப் பொருள் உரைத்துக்கொள்க என்றவாறுயிற்று

உதாரணம் :- 'நோயின் நீங்கினன்' என்பது நோயை நீங்கினன் எனவும் சாத்தனை வெகுண்டான் என்பது சாத்தனொடு வெகுண்டான் எனவும் ஆம்.

இத்துணையும் ஒரு வேற்றுமைக்குரிய பொருள் மற்றொரு வேற்றுமைக் கண்ணும் மயங்கல் கூறப்பட்டது.

சூ 18 *உருபு தொடர்ந் தடுக்கிய வேற்றுமைக்கிளவி*
*ஒருசொல் நடைய பொருள் செல்மருங்கே*

ஓர் உருபு பல தொடர்ந்தடுக்கிய வழி வரும் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

ஒரு சொல் பல அடுக்கி வரும் வழி, பெயரடுக்கு, வேற்றுமை யடுக்கு, முற்றுச்சொல் அடுக்கு, பெயரெச்ச அடுக்கு, வினையெச்ச அடுக்கு, இடைச்சொல் அடுக்கு, உரிச்சொல் அடுக்கு, எனப்பலவகைப்படும். அவற்றுள் வேற்றுமை அடுக்காவது ஒருருபு அடுக்கி வருதலும் பல உருபு அடுக்கி வருதலும் என இருவகைப்படும். அவற்றுள் ஒருருபு அடுக்கி வருதல் ஒரு பொருள்மேல் அடுக்கி வருதலும் பல பொருள்மேல் அடுக்கி வருதலும் என இருவகைப்படும். அவ்விருவகையும் இச்சூத்திரத்தால் கூறப்படும்.

உரை :- உருபு தொடர்ந்தடுக்கிய வேற்றுமைச் சொல், ஒரு சொல், நடையவாம் முடிக்கும் பொருண்மை செல்வுழி என்றவாறு.

ஓர் உருபு ஒருவினையாலல் முடியாது பல உருபு ஒருவினையால் முடியும் என்றதனல் வழுவமைதி கூறியவாறும் ஆம்.

தேம்பைந்தார் மானைத் தென்னர் பெருமானை
வேந்தனை வேந்தர்மண் கொண்டானை யாம் சிறிதும்
அங்கோல் வளைகவர்ந்தான் என்னலும் ஆகுமோ
செங்கோல் சிறுமை உற.

இதனுள் ஐகார உருபு பல அடுக்கி ஒரு பொருட்கண் வந்து வினைகவர்ந்தான் என்னலும் ஆகுமோ என்பதனோடு முடிந்தவாறு கண்டுகொ ்க.

கொல்லிப் பொருப்பனால் கொங்கர் பெருமானால்
வில்லிற் பகைகடிந்த வேந்தனால் அல்லியந்தார்க்
கோதையால் வையம் குளிர்தூங்க என்கொலோ
பேதையார் எய்துவது பேது

இதுவும் மூன்றாவது அடுக்கி வந்து குளிர்தூங்க என்பதனோடு முடிந்தது.

1 வாராய் நீ புறமாறி வருந்திய மேனியாட்கு
ஆரிருட்டுணையாகி, அசைவளி அலைக்குமே கோடல்வீ
கமழ்தண்டா துதிர்ந்துக ஊழுற்ற
இதழ்சோரும் குலைபோல விறை நீவு வளையாட்கு

இதனுள் நான்காவதுடன் அடுக்கி வந்து அலைக்கும் என்பதனோடு முடிந்தது.

வீரப் புலியானின் வெல்போர் வளவனின்
கோரப் பரியுறந்தைக் கோமானின்-ஆரலங்கல்
மற்படுதோள் செம்பியனின் மல்லன் மணிநேரி
வெற்பனிற் றீர்ந்துளவோ வேந்து

இதனுள் ஐந்தாவது பல அடுக்கிவந்து தீர்ந்து என்பதனோடு முடிந்தது.

பெற்றி திரிந்து பெருவளம் கூறினும்
மற்றுயிர்கள் நோயால் வருந்தினும்—கொற்றக்
குடையான் நீதிபுரி கோலான் கண்ஆழிப்
படையான்கண் நிற்கும் பழி

இதனுள் ஏழாவது பல அடுக்கி வந்து நிற்கும் என்பதனோடு முடிந்தது.
இவை ஒரு பொருள் மேல் ஒருருபு அடுக்கி வந்தன.

---
1. கலி. செய் 4.

உழவை, வாணிகத்தைச் செய்யும் எனவும் சோற்றுத் தண்ணீரால் வயிறு நிறைக்கும் எனவும் அந்தணர்க்குச் சான்றோருக்கு...... எனவும், நிலத்தினும் வானினும் பெரிது எனவும், நல்லாற்றது, தீயாற்றது என்றுது கொள்ளும் எனவும் அரங்கிலே அறையிலே நடிக்கும் எனவும் இவ்வாறு வருவன பல பெயர்க்கண் ஒருருபு வந்து ஒரு சொல்லான் முடிவுப் பெற்றன.

1 துணிநீரால் தூய்மதி நாளால் அணிபெற
ஈன்றவள் திதலைபோல் ஈர்பெய்யும் தளிரொடும்
ஆன்றவர் அடக்கம்போல் அலர்செல்லாச் சினையொடு
வல்லவர் யாழ்போல வண்டார்க்கும் புதலொடும்
நல்லவர் நுடக்கம்போல் நயம்வந்த கொம்பொடும்
உணர்ந்தவர் ஈகைபோல் இணருழ்த்த மரத்தொடும்
புணர்ந்தவர் முயக்கம்போல் புரிவுற்ற கொடியொடும்
நயந்தார்க்கோர் நல்லைமன் இளவேனில்

என்பதனுள் ஆலும் ஒடும் பல அடுக்கிவந்து நல்லை என்பதனோடு முடிந்தன.

ஆ 19 இறுதியும் இடையும் எல்லா உருபும்
நெறிபடு பொருள்வயின் நிலவுதல் வரையார்

பல உருபு தொடர்ந்து அடுக்கிவருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- முதற்கண் நின்ற வேற்றுமை உருபே [illegible] முடிதலன்றி, இறுதிக்கண்ணும் இடையின் கண்ணும் எல்லா உருபும் [illegible] வந்து முடிக்கும் பொருண்மைக்கண்ணே நிலைபெறுதல் நீக்கார் என்றவாறு. நெறிபடு பொருள் என்பது முதலும் இடையும் இறுதியும் நின்ற பலவகை உருபிற்கும் ஏற்புடைப் பொருள்.

உதாரணம் :- குயவன் குடத்தைத் திரிகையால் அரங்கின் [illegible] எனவும், சாத்தனது ஆடையை வலியினால் காட்டின்கண் பறித்தான் எனவும் இறுதியும் இடையும் முதலும் நின்ற உருபெல்லாம் ஒரு வினையால் முடிந்தவாறு கண்டுகொள்க.

1. கலி. பாலை 32

சூ 20 பிறிதுபிறிது ஏற்றலும் உருபு தொக வருதலும்
நெறிபட வழங்கிய வழிமருங் கென்ப

இது பல உருபும் தொடர்ந்தடுக்கியவழி வரும் வேறுபாடும் உருபு தொகு-மாறும் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- இறுதியும் இடையும் நின்ற எல்லா உருபும் முடிக்கும் வினை ஒன்றனோடு முடிகலேயன்றி வேறுவினையேற்று ஒரு வினை-யோடு முடிதலும் அவ்வுருபுகள் தொக்குநின்று முடிக்கும் சொல்லோடு முடிதலும் நெறிபட வழங்கிய பக்கத்தன என்று சொல்லுவர் என்றவாறு. இறுதியும் இடையும் என்பது மேலைச்சூத்திரத்தினின்றும் தந்துரைக்கப்பட்டது. நெறிபட வழங்கிய பக்கம் என்ற பெயரான், ஏற்கும் வினையே கொள்ளப் படும். பிறிது பிறிதேற்றல் கூறவேண்டா. வேற்றுமை உருபு வினையோடு. முடியும் என்பதனாற் பெறுதுமெனின் மேல் நின்ற அதிகாரம் பல உருபடுக்கிய வழி ஒரு வினையான் முடியும் என்றமையால் தனித்தனி வினைகொண்டு முடியவும் பெறுமோ என நின்ற ஐயம் தீர்த்தற்குக் கூறல் வேண்டுமென்க. ஈண்டு உருபு தொகுதல் கூறியதென்னை? வேற்றுமைத் தொகை என எச்சவியலுள் கூறுகின்றாராதலின் எனின், தொகைச் சொல்லாவது இறுதிப் பெயரோடு தொக்கு ஒரு சொல் நீர்மைப்பட்டு நிற்பது. இஃதன்னதன்றித் தொகாநிலைத் தொடர்ச்சிக்கண் உருபு மாத்திரம் தொக்குநிற்கும் என்று கொள்க.

உதாரணம் :-

காதலியைக் கொண்டு கவுந்தியொடு கூடி
மாதரிக்குக் காட்டி மனையி னகன்றுபோய்
கோதி லிறைவனது கூடற்கண் கோவலன்சென்
றேத முறுதல் வினை

இதனுள் பல உருபு பலவினையான் வந்தன ஒரு வினையான் முற்றுப்பெற்றன.

உருபு தொகவருமாறு : நிலத்தைக் கடந்தான், வாளால் வெட்டினான், கொலைக்கு உடம்பட்டான், வரையினின்றும் பாய்ந்தான். சாத்தனது பொத்தகம், மாடத்துக்கண் இருந்தான் என்பன நிலம் கடந்தான், வாள் வெட்டினான், கொலையுடம்பட்டான், வரை பாய்ந்தான்,

சாத்தன் பொத்தகம், மாடத்திருந்தான் என உருபு தொக்க வழியும் ஒட்டுப்படாது நின்று தொகாநிலைத் தொடர்ச்சியாகிப் பொருள்பட்டவாறு கண்டு கொள்க.

தொகைச் சொல்லும் உருபுத் தொகைச் சொல்லும் வேறுபாடில......மோசை வேற்றுமையான் வேறுபாடறிந்து கொள்க. பிறிது பிறிதேற்றல் என்பதனை ஆறனுருபு ஏனையுருபேற்கும் எனப் பொருளுரைத்துச் சாத்தனை, சாத்தனதனொடு என உதாரணம் காட்டுபவாலெனின் அவ்வாறு வரும் அது என்பது உருபுநிலை ஒழிந்து பொருளாய் நிற்றலானும் சாத்தனதனைக் கொணர்ந்தான் என்றவழி இடைநின்ற அது என்பது உருபாயின் சாத்தனைக் கொணர்ந்தான் என்னும் பொருள்படல் வேண்டும். அவ்வாறு பொருள்படாது உடைப்பொருளையே காட்டுதலானும் அஃறிணை ஒருமை அது என்னும் பெயர்க் காதலானும் சாத்தன் பொத்தகத்தைக் கொணர்ந்தான் என்றாற்போல் வந்தல்லது உருபு, உருபிலேற்றல் என்றல் அமையாதென்க.

ஆ 21 *ஐயும் கண்ணும் அல்லாப் பொருள்வயின்*
*மெய்யுருபு தொகா இறுதியான*

உருபேற்ற சொல்லும் முடிக்கும் சொல்லும் மாறி நிற்கவும் பெறும் என்பது பெற்றாம். என்னை. அவை இறுதியிற்றொகா என்றமையின்.

அவை மொழி மாறி நிற்குமாறு கடந்தான் நிலத்தை, வெட்டினான் வாளால், கொடுத்தான் சாத்தற்கு. நீங்கினான் ஊரின். ஆடை சாத்தனது, இருந்தான் குன்றத்துக்கண் என்பன. இவற்றுள் உருபு தொக வந்தன. அடைந்தான் நிலம், இருந்தான் குன்றத்து, என்னை? இவை உருபு தொக்க வழியும் தம் பொருண்மை விளக்கின. ஏனையவும் இவ்வாறு வருமெனக் கருதின் அவை தம் பொருள்படாமையிற் றொகா என்றார். வெட்டினான் வாள், கொடுத்தான் சாத்தன், நீங்கினான் ஊர், ஆடை சாத்தன் என்றவழித் தம் பொருள் படாமை கண்டு கொள்க.

ஆ 22 *யாதன் உருபிற் கூறிற்றாயினும்*
*பொருள் செல்மருங்கின் வேற்றுமை சாரும்*

வேற்றுமை உருபு தம்முள் மயங்குதல் இன்றிப் பிற உருபொடு மயங்கும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- யாதொன்றன் உருபிற் கூறினும் பொருள் செல்லும் வழி வேற்றுமையும் செல்லும் என்றவாறு

யாதனுருபு என்பது வேற்றுமையல்லாத உருபு. உருபு எனினும் வடிவு எனினும் ஒக்கும். 1 'அம்மு வுருபின் தோன்றலாறே' என வடிவிற்குப் பெயராகிப் பிறாண்டும் வந்தது.

2 வானின் றுலகம் வழங்கி வருதலால்
தானமிழ்தம் என்றுணரற் பாற்று

எனவும் மருந்துண்டு நோய் தீர்ந்தது எனவும் வருவுழி உலகம் வழங்கி வருதற்கு மழை ஏதுவாகலானும் நோய் தீர்தற்கு மருந்து ஏதுவாகலானும் இவற்றிற்குப் பொருள் உரைக்குங்கால் மழை நிலைநிற்றலான் உலக நடை தப்பாது வருதலான் எனவும் மருந்துண்டலால் நோய் தீர்ந்து எனவும் உரைக்க வேண்டுதலின் இவை வேற்றுமை உருபான் வந்திலவாயினும், பொருள் முகத்தான் வேற்றுமையாதலின் இவை இவ்வாறு வரப்பெறும் என்று வழுவமைத்தவாறும்.

*சூ 23 எதிர்மறுத்து மொழியினும் தத்தம் மரபிற்*
*பொருள்நிலை திரியா வேற்றுமைச் சொல்லே*

எல்லா வேற்றுமைக்கும் உரியதோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- வேற்றுமைச் சொல் தமக்குரிய பொருள் நிலைமையை எதிர்மறித்து மொழியினும் திரியா என்றவாறு.

உதாரணம் :- குடத்தை வனையான், சாத்தனொடு கூடான், அந்தணர்க்குக் கொடான், ஊரின் நீங்கான், சாத்தனதன்று ஆடை, குன்றத்துக்கண் இரான் எனவரும். குடத்தை வனையான் என்றவழிச் செயப்படுபொருள் தோன்றிற்றின்றாயினும் இவ்வாறு சொல்லப்பெறும் என வழுவமைத்தவாறு.

*சூ 24 கு ஐ ஆன் என வரூஉ மிறுதி*
*அவ்வொடு சிவணும் செய்யு ளுள்ளே*

1. சொல் பெயர் 6. 2. குறள் வான் 1.

வேற்றுமை உருபினுள் சிலவற்றிற்கு உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- கு, ஐ, ஆன் என்று சொல்லப்பட்ட தொடர்மொழி இறுதிக்கண் வரும் உருபு அவ்வொடு சிவணும் செய்யுளகத்து என்றவாறு.

உதாரணம் :- வருகின்ற சூத்திரத்துட் காட்டுதும்.

சூ 25 *அ எனப் பிறத்தல் அஃறிணை மருங்கிற்*
*குவ்வும் ஐயும் இல்லென மொழிப*

எய்தியது ஒரு மருங்கு விலக்குதல் நுதலிற்று.

உரை :- அஃறிணைப் பொருட்கண் குவ்வும் ஐயும் அகரத்தொடு சிவணா என்றவாறு.

எனவே உயர்திணைக்கண் மூன்றுருபும் சிவணும் என்பதாம். அஃறிணைக்கண் ஓருருபு சிவணும் என்பதூஉம் கூறியவாறும்.

உதாரணம் : 1 'கடிநிலையின்றே ஆசிரியற்க, புள்ளினன புலவரினை' என வந்தன. ஐகாரம் அகரத்தொடு சிவணுமாறு வந்தவழிக் கண்டுகொள்க. பரிபாடலகத்து—'நின்னைக்கும் புகழ் நிலவை நீழன் நேரியன்' என்பன அகரத்தொடு சிவணி வந்தன எனினும் அமையும். இவை அஃறிணைப் பொருள் அன்றோ எனின் தெய்வப்பொருண்மையான் உயர்திணையாம்.

சூ 26 *இதனிது விற் றென்னும் கிளவியும்*
*அதனைக் கொள்ளும் பொருள்வயினானும்*
*அதனாற் செயற்படற் கொத்த கிளவியும்*
*முறைக்கொண் டெழுந்த பெயர்ச்சொற்கிளவியும்*
*பால்வரை கிளவியும் பண்பின் ஆக்கமும்*
*காலத்தின் அறியும் வேற்றுமைக் கிளவியும்*
*பற்றுவிடு கிளவியும் தீர்ந்துமொழி கிளவியும்*
*அன்ன பிறவும் நான்க துருபின்*
*தொன்னெறி மரபின தோன்றலாறே*

ஒருருபு பல பொருட்கண் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

1. தொல் புள்ளி 9ஃ.

உரை :- இதனது, இது, இற்று என்பது முதலாகச் சொல்லப்பட்டனவும் அத்தன்மைய பிறவும் நான்கன் உருபில் பண்டையோர் வழக்காகிய மரபினவாகித் தோன்றுதல் நெறி என்றவாறு.

இதனது இது இற்று என்பது, யானையதுகோடு வெள்ளிது என்பது யானைக்குக்கோடு வெள்ளிது எனவரும்.

அதனைக் கொள்ளும் பொருள் வயினானும் என்பது ஒன்றைக்-கொள்ளும் பொருட்கண்ணும் வரும் என்றவாறு. ஆன் இடைச்சொல் காணந்திற்குக் கொண்ட அரிசி எனவும் வரும்.

அதனாற் செயப்படற்கொத்த கிளவி என்பது அவனாற், செய்யப்படும் என்னும் பொருண்மைக்குப் பொருந்திய சொல் என்றவாறு

அவண் முடியும் என்பது அவற்கு முடியும் எனவரும்.

முறைக் கொண்டெழுந்த பெயர்ச்சொற்கிளவி என்பது முறையைக் கொண்டெழுந்த பெயர்ச்சொற் பொருண்மை. ஆவினது கன்று என்பது. ஆவிற்குக் கன்று எனவரும்.

பால்வரை கிளவி என்பது இடம் வரைந்த சொல். கருவூரின் கிழக்கு என்பது கருவூர்க்குக் கிழக்கு எனவரும்.

பண்பின் ஆக்கம் என்பது......இதனின் நெடிது என்பது இதற்கு நெடிது எனவரும்.

காலத்தின் அறியும் வேற்றுமைக்கிளவி என்பது காலத்-தான் உணருஞ்சொல் என்றவாறு. காலைக்கண் வரும், என்பது காலைக்கு வரும் எனவரும்.

பற்றுவிடு கிளவி என்பது இதனிற் பற்றுவிடும் என்னும் ஏதுப்பொருண்மைக்கண் 'இதற்குப் பற்றுவிடும்' எனவரும்.

'தீர்ந்து மொழி கிளவி' என்பது மருந்தில் தீர்ந்தது என்பது மருந்திற்குத் தீர்ந்தது எனவரும். அன்னபிறவும் என்பதனால், 'கிளையறி நாணற் கிழங்கு மணற் கீன்ற' என ஏழாவதன் இடப் பொருண்மைக்கண்

1. அகம் 221.

நான்காவது வந்தது. பிறவும் இந்நிகரனவெல்லாம் வந்தவழி அனுமித்துக் கொள்க.

சூ 27 ஏனை உருபும் அன்ன மரபின
மான மிலவே சொல்முறை யான

நான்காவது ஒழிந்த உருபுகள் ஏனை உருபிற்கும் உரிய பொருளொடு மயங்கும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- நான்காவது ஒழிந்த உருபுகளும் ஏனைப் பொரு-ளோடு மயங்கும் மரபினை உடைய. அவை சொல் லிலக்கணத்தாற் குற்றமில என்றவாறு.

உதாரணம் :-

1 கோட்டுப் பூச்சூடினும் காயும் ஒருத்தியைக்
காட்டிய சூடினீர் என்று

இதனுள் ஒருத்திக்கு எனற்பாலது ஒருத்தியை என இரண்டாவதனோடும் மயங்கி வந்தது. "அறல் காயப் பொழுதோடெம் அணிநுதல் வேறுகி" என்றவழிப் பொழுதின்கண் எனற்பாலது பொழுதோடென மூன்றாவது ஏழாவதனோடு மயங்கிற்று. பிறவும் அன்ன.

சூ 28 வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலம் கருவி என்று
இன்னதற் கிதுபயன் ஆக என்னும்
அன்ன மரபின் இரண்டொடுந் தொகைஇ
ஆயெட் டென்ப தொழில்முதல் நிலையே

எழுவகை வேற்றுமையினும் காரக வேற்றுமை வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- வினையும் கருத்தாவும் செயப்படுபொருளும் இடமும் காலமும் கருவியும் என்று சொல்லப்பட்டவற்றோடு கொள்வதூஉம், பயனும் ஆகிய அவ்விரண்டொடும் தொகைஇ அவ்வெட்டென்று சொல்லுவர் தொழிற் காரகம் என்றவாறு.

1. குறள் 132-3

நெய்தான் என்றவழி நெய்யப்பட்ட பொருளும் நெய்-தாகிய தொழிலும் நெய்தற்குக் கருவியும், நெய்தற்குக் காலமும் நெய்தற்கு இடமும் நெய்யும் கருத்தாவும் அதனைக் கொள்வானும் அதனற் பயனும் உள்ளவழி அல்லது நெய்தல் தொழிலால் செய்யப்பட்ட பொருள் உளதாகாமையின், அவற்றை முதனிலை என்றார். அவற்றுள் பயனும் கொள்வதூம் ஏனையவற்ரேடு ஒத்த சிறப்பின்மையின் இரண்டென வகுத்துக் கூறினர் இவற்றுள் தொழிலும் செயப்படு பொருளும் இரண்டாவதாயின. ஆடையை நெய்தான், நெய்தலை நெய்தான் கல்வியும் கருத்தாவும் மூன்ரு-வதாயின சாலியனல் நெய்யப்பட்டது, கொற்பினல் நெய்யப்பட்டது. கொள்வதும் பயனும் நான்காவதாயின.

அந்தணர்க்கு நெய்தான், கூலிக்கு நெய்தான், இடமும் காலமும் ஏழாவது ஆயின. கட்டடத்துக்கண் நெய்தான், காலைக்கண் நெய்தான், இவற்றுள் கருத்தா முதல்வேற்றுமையும் ஆம் சாலியன் நெய் தான். அஃதேல் ஐந்தாவதாகிய நீங்க நிற்றல் காரகம் அன்ரே எனின் காரகம் என்பது தொழில் முதனிலையாகலிற் காரகம் அன்றென்பது போலும் கருத்து. நீங்க நிற்றல் முதனிலை ஆகாவாறு என்னை எனின் ஆடையை நெய்து முடித்தான். படமரத்தினின்றும் வாங்குதல் நீக்கம் ஆகலின் அத்தொழில் முடிந்தபின் நிகழின் அல்லது தொழிற்குறிப்பு அன்மையால் கானகம் அன்ருயிற்று ஆறாவது அவ்வாடையைக் கிழமை செய்தான் மாட்டே நிகழ்தலின், அதுவும் காரகம் அன்ருயிற்று முதற்காரணம் கருவியின் அடங்கும் நூலால் நெய்தான்.

ஆ 29 அவைதாம்

வழங்கியல் மருங்கின் குன்றுவ குன்றும்

மேலதற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று

உரை : மேற்சொல்லப்பட்ட எண் வகைப் பொருளினும் வழங்கிய நெறிக்கண் குறைவன குறையும் என்றவாறு. தொழில் கண்டுழி எல்லாம் இவை எட்டும் வருதல் நியமமின்று என்றவாரும்.

உதாரணம் :- ஆடையை நெய்தான் தனக்கு என்ற

வழிக்கொள்வான் பிறன் ஒருவன் இன்மையின் பொருண்மை குறைந்து நின்றது உலகினைப் படைத்தான் என்றவழிக் கொள்வானும் பயனும் இன்றி வந்தது பிறவும் அன்ன.

சூ 30 முதலிற் கூறும் சினையறி கிளவியும்
சினையிற் கூறும் முதலறி கிளவியும்
பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரும்
இயன்றது மொழிதலும் இருபெயரொட்டும்
வினைமுத லுரைக்கும் கிளவியொடு தொகைக்கு
அனைய மரபினவே ஆகுபெயர்க்கிளவி

ஆகுபெயர்க்கு இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று. வேற்றுமைப் பொருள் மயக்கம் உணர்த்திற்று எனினும் அமையும்.

ஆகுபெயர் என்பது யாதோ எனின் யாதானும் ஒரு பொருத்தத்தினால் ஒன்றன் பெயர் ஒன்றதாக வருவது.

உரை :- முதலிற்கூறும் சினையறி கிளவி முதலாக எண்ணப் பட்டனவும் வினைமுதல் உரைக்கும் கிளவியொடு கூட அத்தன்மையவாகிய மரபினையுடையவும் ஆகுபெயர்ச் சொல்லாம் என்றவாறு

மரபினவும் என்னும் உம்மை எஞ்சி நின்றது ஏகாரம் எண்ணுக் குறித்து நின்றது. ஆம் என்பது எஞ்சி நின்றது

உதாரணம் : 'முதலிற்கூறும் சினையறி கிளவி' என்பது சினைப்பொருளை முதலாற் கூறும் பெயர்ச்சொல். கடு என்பது கடுவினது காயைக் கடு என வழங்குதலின் ஆகுபெயராயிற்று.

சினையிற்கூறும் முதலறிகிளவியாவது முதற்பொருளைச் சினை-யாற்கூறும் பெயர்ச்சொல். பூ நட்டார் என்பது நடப்படுவது பூவினது முதலாதலின் அம்முதலைப் பூ என்று வழங்குதலின் ஆகு பெயராயிற்று. 1 ''நகையச்சாக நல்லமிர்து கலந்த – நடுநிலை திறம்பிய நயமிலொருகை'' என்பதும் அது.

'பிறந்தவழிக் கூறலென்பது'' இடத்து நிகழ் பொருளை

1. பரி. பக். 16

இடத்தாற்கூறுதல். வேளாகாணி என்பது வேளாகாணியிற் பிறந்த ஆடையை அப்பெயரான் வழங்குதலின் ஆகுபெயராயிற்று. யாழ்கேட்டான் என்பதும் அது. யாழிற் பிறந்த ஓசையையும் யாழ் என்றமையால்.

பண்புகொள் பெயராவது, பண்பின் பெயரால் பண்புடை-யதனைக் கூறுதல். நீலம் என்றவழி அந்நிறத்தை உடைய மணியை நீலம் என்பதாகலின் ஆகுபெயராயிற்று.

இயன்றது மொழிதலாவது இயன்றதனால் மொழிதல் என விரியும். அது காரியப் பொருளைக் காரணத்தால் மொழிதல். பொன்பூண்டான் என்றவழிப் பொன்னினான் ஆகிய அணிகலத்தைப் பொன் என்று வழங்கு-தலின் ஆகுபெயராயிற்று. தன் மெய்காட்டி இஃதோர் அம்பு, இஃதோர் வேல், என்றவழி அவைபட்ட வடுவை அவற்றிற்குக் காரணமாகிய கருவிப் பெயரான் வழங்குவனவும் அமையும். இன்னும் இயன்றது மொழிதல் என்பதன்கண் இரண்டாவதை விரித்து இயன்றதனை மொழிதல் எனலாம் அது காரணப் பொருளைக் காரியத்தாற் கூறுதல். நெல்லாதல், காணமாதல் ஒருவன் கொடுப்பக் கொண்டவன் இற்றைக்குச் சோறு பெற்றேன் என்னும் அவ்வழிச்சோற்றுக்குக் காரணமாகிய நெல்லும் காணமும் சோறு என ஆகு பெயராயின.

இருபெயரொட்டு என்பது இரண்டு பெயர் தொக்கு ஒரு சொன்னீர்மைப்பட்டு மற்றொரு பொருள் தரு பெயராகி, வருவது. அது துடியிடை என்பவாகலின் ஆகுபெயராயிற்று. இஃது உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை அன்றோ எனின் ஒட்டுப்பட்ட பொருளோடு ஒற்றுமைப்பட்ட உருபு. அன்மொழித் தொகையாவது அப் பொருளின் வேறுபட்டுவரும். அன்னதாதல் அன்மொழி என்றதனானும் விளங்கும். அதனானேயன்றே 1 ''பண்பு தொகவரூஉம் கிளவியானும்-உம்மை தொக்க பெயர்வயினானும்-ஈற்று நின்றியலும் அன்மொழித் தொகையே'' என ஓதுவாராயிற்று.

'வினைமுதலுரைக்கும் கிளவி' என்பது வினையும் முதலும் உரைக்கும் கிளவி என உம்மைத் தொகையாகக் கொள்ளப்படும். கொள்ளவே,

1. தொல். எச். 21

வினையால் உரைக்கும் கிளவியும் வினைமுதல் உரைக்கும் கிளவியும் ஆகு-பெயராம் என்றவாறும். வினையால் உரைக்கப்பட்டன. எழுத்துசொல், என்பன எழுதப்பட்டதனையும் சொல்லப்பட்டதனையும் அப்பெயரான் வழங்கு-தலின், ஆகுபெயராயிற்று. என்காலவிலே கட்டான் என்பதும் அதுவினை முதலான் உரைக்கப்பட்டன செய்தானல் செயப்படு பொருட்குப் பெயராகி வருவன. சாலியனல் நெய்யப்பட்ட ஆடையை சாலியன் என்பது. தொல் காப்பியம் யாதோ எனின், அஃது ஈறு திரிந்து நின்றவதனுல், செய்யப் பட்டது என்னும் பொருளை விளக்குதலின் ஆகுபெயராகாது காரணப் பெயராம்.

'அனைய மரபின' என்ற அதனல் ஈண்டு ஓதப்பட்டன-வற்றுள் அடையடுத்து வருவனவும் கொள்க. தாழ்குழல் என்றவழி அதனை-யுடையாட்குப் பெயராகி வருதலின் ஆகுபெயராயிற்று. இது வினைத்தொகைப் புறந்துப் பிறந்த அன்மொழித் தொகையன்றோ எனின், ஆண்டு எடுத்து ஓதாமையினனும் பொருள் ஒற்றுமைப்படுதலானும் ஆகாது என்க.

சூ 31 அவைதாம்
*தத்தம் பொருள்வயின் தம்மொடுசிவணும்*
*ஒப்பில் வழியால் பிறிது பொருள் சுட்டலும்*
*அப்பன் பினவே நுவலுங்காலை*
*வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்*

இதுவும் ஒருவாற்ருன் ஆகுபெயர்க்கு உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று. விரிந்து தொகுத்தலை நுதலிற்று எனினும் அமையும்.

உரை :- மேற்சொல்லப்பட்ட ஆகுபெயர்தாம் தத்தம் பொருள வயிற்சிவணலும், தம்மொடு சிவணலும் பொருத்தமில்லாத நெறியின்கட் சுட்டலும் பிறிதின கிழமைப் பொருளைச் சுட்டலும் ஆகிய அவ்வியல்பினை உடைய அவ்வாறு சொல்லுங்காலத்து வேற்றுமைப் பொருட்கண் பாது காத்தல் வேண்டும்

சிவணல் என்பதனை இரண்டிடத்துங் கூட்டுக. தத்தம் பொருள் வயிற்சிவணல் என்பது முதற்பொருள் சினைப்பொருளைச் சிவணுதல்.

அவை கடு, பொன் என்பன. 'தம்மோடு சிவணல்' ஆவது சினைப்பொருள் முதற்பொருளைச் சிவணுதல். அவை பூ, நீலம், சோறு, துடியிடை, தாழ்குழல் என்பன. ஒப்பில் வழிக்கண் சுட்டியது வேளாகாணி. பிறிது பொருள் சுட்டியது, சாலியன் வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும் என்பது ஆகுபெயர் என்பது வேண்டியவாறு சொல்லப்படாது. வேற்றுமைப் பொருட் கண்ணே வரப்பெறுவது என்றவாறு.

அவை அப்பொருட்கண் வந்தவாறு முதலிற்கூறும் சினையறி கிளவியும் சினையிற்கூறும் முதலறிகிளவியும் பண்பு கொள்பெயரும் இரு பெயர் ஒட்டும் ஆறும் வேற்றுமைப் பொருள் மயக்கம் பிறந்தவழிக்கூறல் ஏழாம் வேற்றுமைப் பொருண் மயக்கம் இயன்றது மொழிதலும் வினைமுதல் உரைக்கும் கிளவியும் மூன்றும் வேற்றுமைப் பொருண் மயக்கம்.

*சூ 32 அளவும் நிறையும் அவற்றொடு கொள்வழி*
*உள்வென மொழிப உணர்த்திசினோரே*

இதுவும் ஆகுபெயராமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- அளவுப்பெயரும் நிறைப்பெயரும் மேற்சொல்லப் பட்ட ஆகுபெயரோடு கொள்ளுமிடமும் உளவென்று சொல்லுவர் உணர்ந்தோர் என்றவாறு.

கொள்வழி உள என்றதனால் தம்பெயர் விளங்கும் எண்ணுக் குறிப்பின்றி அளக்கப்பட்ட பொருள் மேலும், நிறுக்கப்பட்ட பொருள் மேலும் கருவிமேலும் வரின், அவையும் வேற்றுமைப் பொருள் ஆகுபெயராம் என்று கொள்க. எண்ணுமுறையான் உழக்கு, நாழி, என்னும் அளவினைக் கொள்ளும் பாண்டத்தினையும் அளக்கப்படும் பொருளினையும் உழக்கு நாழி என்ப, கால், கழந்த என்னும் நின்றமையும். அதன் அளவாகிய கல்லையும் பொன்னையும், கால், கழந்த என்ப. இருநிலம், ஒருமர, இம்முக்கால் என்பனவும், அளவுப்பகுதிய, அஃதேல், இவ்வெருது ஒன்று என எண்ணப்பட்ட பொருள் மேல் எண்ணிப்பெயர் வருவது ஆகுபெயர் ஆகாதோ எனின், அளவும் நிறையும் போலாது, எண்ணப்பட்ட பொருளை எண்ணுப்பிரிந்து நில்லாமையான் அதுவும் அப்பொருட்கு ஒரு காரணத்தால் பெற்ற பெயர்

எனின் அல்லது ஆகுபெயர் எனப்படாதென்று கொள்க. அளவும் நிறையும் பிரிந்து நின்றவாறு என்னையெனின் இப்பொன்கால், இப்பொன் கழஞ்சு என்றவழி அவை ஓர் உருவாகியும் பல உருவாகியும் வரின் அல்லது கால், கழஞ்சு, என்னும் நிகரப்பொருண்மை புலப்படாது நிற்றலிற் பிரிந்து நின்றன.

ஆ 33 *கிளந்த வல்ல வேறுபிற தோன்றினும்*
*கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே*

ஆகுபெயர்க்குப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று

உரை :- எடுத்து ஓதப்பட்ட வாய்பாட்டான் அன்று வேறு வருவனவுளவும் எடுத்தோதிய நெறியினன் ஆகுபெயர் ஆமாறு அறிந்து கொள்க.

அவையாவன : பாவை, திரு, என வடிவுபற்றியும், பசு, கழுதை எனகுணம் பற்றியும் புலி, சிங்கம் எனத்தொழில் பற்றியும் ஒன்றன் பெயர் ஒன்றற்கு ஆகிவருவனவும் ஆகுபெயர் என்றே கொள்ளப்படும்

1 ''எயின்முகம் சிதையத் தோட்டி ஏவலிற்—
தோட்டி தந்த தொடி மருப்பியானை''

என்றவழித் தோட்டியையுடையானைத் தோட்டி என ஆகுபெயர் ஆயிற்று.

இவை ஆகுபெயர் ஆகுங்கால் பாவை வந்தாள், சிங்கம் வந்தான், எனத்தத்தம் பொருண்மை வாய்பாடான் முடியும்.

2 ''கவழக் களப்பியன் மால்யானை சிற்றுனி
தவழத்தா னில்லாததுபோல்—பவழக்
கடிகை இடைமுத்தம் காண்டொறு நில்லா
தொடிகை இடைமுத்தம் தொக்கு''

என்பது தொடி என ஆகுபெயராயிற்று.

வேற்றுமை மயங்கியல் முடிந்தது இவ்வோத்தினுள் சூத்திர முப்பட உரைவிரது. அளவு கிரந்த வகையான் முந்நூறு.

1. பதிற். 28 2. திணைமாலை நூற். 42.

# (4) விளிமரபு

சூ 1 *விளியெனப் படுப கொள்ளும் பெயரொடு*
*தெளியத் தோன்றும் இயற்கைய என்ப*

இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின் விளிமரபு என்னும் பெயர்த்து. நிறுத்த முறையானே எழுவகை வேற்றுமையம் அவ்வாறு மயக்கமும் உணர்த்தியதன்பின் எட்டாவதாகிய விளி, இலக்கணம் உணர்த்தினமையால் பெற்றபெயர்.

இதன் முதற்சூத்திரம் என்னுதலிற்றோ எனின் விளி இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- விளி என்று சொல்லப்படுவன தம்மை ஏற்கும் பெயரோடு விளங்கத் தோன்றும் இயற்கையினை உடைய என்று சொல்லு-வார் என்றவாறு.

ஏனைவேற்றுமை போல உருபு பிரிந்து வாரா. பெரும்-பான்மையும் பெயரோடு ஒற்றுமைப்பட்டு வருமென்பதூஉம் 'கொள்ளும் பெயரோடு' என்றமையால் கொள்ளாப் பெயரும் உள என்பதும் பெறுதும். விளி என்றதனால் அவ்வேற்றுமை விளித்தற் பொருண்மைக்கண் வரும் என்று கொள்க.

சூ2 *"அவ்வே*
*இவ்வென வறிதற்கு மெய்பெறக்*
*கிளப்ப"*

எய்தியதன்மேல் சிறப்புவிதி வகுத்தலை நுதலிற்று.

உரை :- சொல்லப்பட்ட விளிவேற்றுமை தாம் இவையென அறிதற்கு உருபு பெறவும் கிளப்ப ஆசிரியர் என்றவாறு.

உம்மை எஞ்சி நின்றது. இவ்விரண்டு சூத்திரத்தானும் சொல்லியது விளிவேற்றுமை வருவழி அதனை ஏற்கும் பெயர் இயல்பாகியும் திரிந்து குறைந்தும் மிக்கும் வரும் என்றவாறு.

சூ 3 *அவற்றுள்,*
*இ, உ, ஐ, ஓ வென்னும் இறுதி*
*அப்பால் நான்கே உயர்திணை மருங்கின்*
*மெய்ப் பொருள் சுட்டிய விளிகொள் பெயரே*

உயர்திணைப் பெயருள் உயிரீருகி விளியேற்கும் பெயரை வகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

உரை: உயர்திணை இடத்துள்ள பொருளைச் சுட்டிய விளியேற்கும் பெயர் இ. உ, ஐ, ஓ என்னும் ஈற்றினை உடைய அக்கூற்று நான்கு என்றவாறு.

உயர்திணை மருங்கினுள்ள பொருள் சுட்டய என்றமையால் உயர்திணைப் பெயரென வகுத்தோதப்படுவனவும் விரிவுப்பெயருள் உயர்திணை குறித்தனவும் கொள்ளப்படும்.

சூ 4 *அவற்றுள்*
*இ, ஈ, யாகும் ஐ, ஆ யாகும்*

இகர ஐகார ஈற்றுப் பெயர் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை:- இகரம் ஈகாரமாய்த் திரிந்தும் ஐகாரம் ஆய் எனத் திரிந்தும் விளி ஏற்கும் என்றவாறு.

உதாரணம்:- நம்பி, சாத்தி என்பன நம்பீ, சாத்தீ என விளியேற்கும். நங்கை, நங்காய் எனவும் தந்தை, தந்தாய் எனவும் வரும்.

சூ 5 *ஓவும் உவ்வும் ஏயொடு சிவணும்*
*உகரந் தானே குற்றிய லுகரம்*

உகர ஓகாரப் பெயர் விளியேற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை:- ஓகாரம், உகரமும், ஏகாரப்பெற்று விளியேற்கும் ஆண்டுக் குற்றியலிகரமே ஈருகும் என்றவாறு.

உதாரணம்:- சேர, சேரவே வேந்து, வேந்தே எனவரும் பிறவுமன்ன.

சூ 6 ஏனை உயிரே உயர்திணை மருங்கில்
தாம் விளி கொள்ளா என்மனார் புலவர்

ஐயம் தீர்த்தல் நுதலிற்று.

உரை :- மேற்சொல்லப்பட்ட உயிரல்லாத உயிர்கள் உயர்திணையிடத்துவரின் விளி ஏலா என்றவாறு.

உதாரணம் :- அவையாவன ஆடூஉ, மகடூஉ, நீ என்பன

சூ 7 அளபெடை மிகூஉ மிகர விறுபெயர்
இயற்கைய வாகும் செயற்கைய என்ப

இகர ஈற்றுக்கண் வருவதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- தோழீஇ என்பது விளிக்கண்ணும் அவ்வாறே வரும். செயற்கை என்றதனால் விளிக்கண் வரும் ஓசை வேறுபாடு அறிந்து கொள்க.

சூ 8 முறைப்பெயர் மருங்கின் ஐகயணிறுதி
ஆவொடு வருதற் குரியவு முளவே

ஐகார வீற்று முறைப்பெயர்க்கண் வரும் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- முறைப் பெயர்க்கண் வரும் ஐகார ஈறு, ஆய் ஆகி வருதலன்றி ஆவோடு வருதற்கு உரியபெயரும் உள என்றவாறு.

உதாரணம் : அன்னை, அன்னாய் என வருதலேயன்றி அன்னா எனவும் (வரும்) உம்மை இறந்ததுதழீஇயிற்று.

சூ 9 அண்ணமச் சொல்லே யியற்கையாகும்

இத்திணைக்கண் வரும் எல்லா வீற்றுப்பெயரும் அண்மைக்கண் விளி ஏற்கு-மாறு உணர்த்துதல் நுதலிற்று.

இச்சூத்திரம் முன்னும் பின்னும் நோக்கி நிற்றலின். சிங்கநோக் காகிக்கிடந்ததென்று கொள்க.

உரை :- மேற்சொல்லப்பட்ட உயிரீற்றுப் பெயரும் இனி ஓதுகின்ற புள்ளியீற்றுப் பெயரும் (அஃறிணை)ப்பெயரும் அண்மைக்கண்

இயல்பாகி விளியேற்கும் என்றவாறு. னகரவீறு சிறப்புவிதி பெறுதலின், அஃதொழிந்த ஏனைய கொள்ளப்படும்.

உதாரணம்: நம்பிவாழி, நங்கைவாழி, வேந்துவாழி, கோவாழி, மாதர்கூறு, அண்ணல்கூறு......தும்பிகூறு. அன்னம்கூறு, கானல் கூறு எனவரும் பிறவும் அன்ன ''ஆவுமானியற் பார்ப்பனமாக்களும்'' என்பதும் அண்மைவிளி, பிறவும் அன்ன.

சூ 10 *னரலள என்னும் அந்நான்கென்ப*
*புள்ளியிறுதி விளிகொள் பெயரே*

உரை:- உயர்திணைப் பெயருள் புள்ளியீருகி விளி கொள்ளும் பெயர் ன, ர, ல, ள என்னும் ஈற்றினை உடைய அந்நான்கென்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

உயர்திணை என்பது அதிகாரத்தான் வந்தது. ன, ர, ல, ள என்பன ஆகுபெயராய் அவ்வீற்றிணை உடைய பெயர்க்குப் பெயராயின.

உதாரணம்:- தத்தம் சிறப்புச் சூத்திரத்துட் காட்டுதும்.

சூ 11 *ஏனைப் புள்ளி யீறுவிளி கொள்ளா*
ஐயமறுத்தலே நுதலிற்று.

உரை:- உயர்திணைப் பொருட்கண் மேற்சொல்லப்பட்ட நான்கீற்றுப் பெயரும் ஒழிய ஏனையீற்றுப் பெயர்கள் விளி ஏலா என்றவாறு.

உதாரணம்:- அவை, யான், யாப், நாம், எல்லோரும், எல்லீரும், எல்லாம், தாம் என்பன.

சூ 12 *அவற்றுள்*
*அன்னென் இறுதி ஆவாகும்மே*

நிறுத்த முறையானே னகர ஈறு விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை:- மேற்சொல்லப்பட்டவற்றுள் அன் என்னும் ஈற்றினை உடைய பெயர் ஆ என விளி ஏற்கும் என்றவாறு.

ஈறென்றது ஈற்றினை உடைய பெயரை.

உதாரணம்:- சோழன், சோழா, வெற்பன், வெற்பா, சாத்தன், சாத்தா எனவரும்.

*சூ 13 அண்மைச் சொல்லிற்ககரமாகும்*

எய்தியது விலக்கி மேலதற்கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- அன் என்னும் ஈறு அண்மைக்கண் அகரமாகி விளியேற்கும் என்றவாறு.

அன் என்பது அதிகாரத்தான் வந்தது.

உதாரணம் :- சோழ, சாத்த, வெற்ப எனவரும்.

*சூ 14 ஆனென் இறுதியியற் கையாகும்*

இதுவும் னகர வீற்றுக்கண் வருவதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- உயர்திணைப் பொருள் உணர்த்தும் னகார வீற்றுப் பொருள் ஆன் என்னும் ஈற்றுப்பெயர் இயல்பாகி விளியேற்கும் என்றவாறு.

உதாரணம் : சேரமான், மலையமான் என்பன விளிக்கண்ணும் அவ்வாறே வரும்.

*சூ 15 தொழிற்கூறும் ஆனென் இறுதி*
*ஆயாகும்மே விளிவயினான*

ஆனீற்றுக்கண் வருவதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- தொழிலாற் கூறப்படும் ஆன் ஈற்றுப் பெயர் என வரும் விளித்தற்கண்ணும் என்றவாறு.

உதாரணம் :- உண்டான், வந்தான் என்னும் தொழிற்பெயர் உண்டாய், வந்தாய் என விளி ஏற்கும். தொழில் என்றதனால் குறிப்பு வினைப்பெயரும் கொள்க. உடையான் கழலான் என்பன உடையாய், கழலாய், எனவரும். மீண்டும் விளிவயினான என விதந்தோதினமையால், தொழிலால் வரும் சொல் முன்னிலையாகிய வழியும் உண்டாய் எனவரும். அதன்று இது, என்பதூஉம், அதனோடு இதனிடை ஓசை வேறுபாடு உளது என்பதூம் அறிவித்தற்கு எனக்கொள்க.

*சூ 16 பண்பு கொள் பெயரும் அதனோரற்றே*

ஆனீற்றுப் பெயருள் பண்புப்பெயர்க்கு உரியதோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- பண்பினுல் பெற்ற ஆன் ஈற்றுப் பெயரும் ஆய் என விளி ஏற்கும் என்றவாறு.

உதாரணம் : கரியான், கொடியான், என்பன கரியாய், கொடியாய் எனவரும். கரியான் எனவும் விளியேற்கும்மால் எனின், அவ்வாறு வருவது பண்பு குறியாது, அப்பொருட்கு இடுகுறியாகி வந்ததென்க.

சூ 17 அளபெடைப் பெயரே அளபெடையியல

னகர ஈற்றுள் அளபெடைப் பெயர் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று

உரை :- னகார இறுதி அளபெடைப் பெயராயின் இயல்பாகி விளி ஏற்கும் என்றவாறு.

உதாரணம் :- கிழாஅன், கோஒன என்பன விளிக்கண்ணும் அவ்வாறே வரும்.

சூ 18 முறைப் பெயர்க்கிளவி ஏயொடு வருமே

னகார ஈற்றுள் முறைப்பெயர் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- னகார ஈற்றுள் முறைமை குறித்த பெயர் ஏகாரத்தோடு விளி ஏற்கும்.

உதாரணம் :- மகன் என்பது மகனே எனவரும். ஒப்பின் முடித்தல் என்பதனுல் முறைமை சுட்டாத மகன் என்னும் பெயரும் ஏயொடு சிவணும் என்று கொள்க.

1 ''பார்ப்பன மகனே, பார்ப்பன மகனே'' எனவரும்.

2 ''சான்ருளர் ஈன்ற தகாஅத் தகாஅ
மகாஅ—ஈன்ருட்கொருபெண் இவள்''

என ஆகாரமாகியும் வரும் வந்தது கண்டு வராதது முடித்தல் என்பதனுல் பிறபெயர்க்கண்ணும் ஏ, ஓடு வருதல் கொள்ளப்படும்.

'கூந்தன்மாவூர்ந்து குடமாடிக் கோவலனைப்
பூந்தொடியைப் புல்லியஞான்றுண்டால் யாங்கொளித்தாய்
தென்னவனே தேர்வேந்தே தேறுநீர்க்கூடலார்

1. குறுந். 156 2. பரி. 8.

மன்னவனே மார்பின் மறு'' எனவும் கோவே எனவும்வரும்.

இவை 'செய்யுள் மருங்குனம்' என்னும் அதிகாரப் புறனடையான் கொள்ளினும் அமையும்.

சூ 19 தானென் பெயரும் சுட்டுமுதற் பெயரும்
யானென் பெயரும் வினாவின் பெயரும்
அன்றி யனைத்தும் விளிகோல் இலவே

னகார ஈற்றுப்பெயர் விளி ஏலாதன உணர்த்துதல் நுதலிற்று.

உரை: தான், அவன், இவன், உவன், அத்தன்மையன், அத்தன்மையான், அன்னன், அனையான், யான், யாவன் எனவருவன விளி ஏலா என்றவாறு.

சூ 20 ஆரும் அருவும் ஈரொடு சிவணும்

நிறுத்த முறையானே உயர்திணைக்கண் ரகரம் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: ஆர், அர் என்னும் ஈற்றுப்பெயர் ஈர் என்பதோடு சிவணும் என்றவாறு.

உதாரணம்: பார்ப்பார், கூத்தர், உடையர், என்பன, பார்ப்பீர், கூத்தீர், உடையீர் எனவரும். வந்தது கொண்டு வாராதது முடித்தல் என்பதனால் பெண்டிர், பெண்டீர் எனவும்வரும்.

சூ 21 தொழிற் பெயராயின ஏகாரம் வருதலும்
வழுக்கின் றென்மனார் வயங்கியோரே

உரை:- மேற்சொல்லப்பட்ட ஈறுகள் தொழிற்பெயராயின் ஏகாரம் வருதலும் குற்றமில்லை என்பார் அறிந்தோர் என்றவாறு.

உதாரணம்:- வந்தார், வந்தவர் என்பன வந்தீர் என வருதலே அன்றி, வந்தாரே, வந்தவரே எனவும்வரும் ஈரோடு சிவணும் என்றோதி ஏகாரம் வருதலும் குற்றமில்லை என்றதனான் அதனோடு அடுத்து வருதலும் கொள்க. வந்தீரே எனவும்வரும்.

சூ 22 பண்பு கொள் பெயரும் அதனோரற்றே

ரகார ஈற்றுப் பண்பு கொள் பெயர் விளிஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- ரகார ஈற்றுப்பண்பினான் வரும்பெயரும் தொழிற் பெயர் போல விளி ஏற்கும் என்றவாறு.

உதாரணம் :- கரியார், கரியவர், என்பன கரியீர் என வருதலேயன்றிக் கரியாரே, கரியவரே கரியீரே எனவும் வரும்.

சூ 23 அளபெடைப் பெயரே அளபெடையியல

ரகார ஈற்றுள் அளபெடைப் பெயர் மேற்சொல்லப்பட்ட அளப்பெடைப் பெயரே போல இயல்பாகி விளயேற்கும் என்றவாறு.

உதாரணம் :- மகஅர், சிறுஅர் என்பன விளிக்கண்ணும் அவ்வாறே வரும்.

சூ 24 சுட்டுமுதற் பெயரே முற்கிளந்தின்ன

ரகார ஈற்றுப் விளி ஏலாதன உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- சுட்டுமுதலாகிய பெயர் மேற்சொல்லப்பட்ட சுட்டு முதற்பெயர் போல விளி ஏலா என்றவாறு.

உதாரணம் :- அவர், இவர், உவர், அத்தன்மையர், அத்தன்மையார் என்பன விளி ஏலா.

சூ 25 நும்மின் திரிபியர் வினாவின்
பெயரென், றம்முறை யிரண்டும்
அவற்றியல்பினவே

இதுவும் அது.

தும்மின் திரிபெயராவது நீயிர், வினாவின் திரிபெயராவது வினாவானாகியபெயர், அது யார், யாவர் என்பது. அம்முறையாகிய இரண்டு பெயரும் விளியேலா என்றவாறு.

இவ்வீற்றினுள், முறைப்பெயர் கூறுதது என்னையெனின் அது பொது விதியால் அடங்குதலின் என்க.

*சூ 26 எஞ்சிய இரண்டின் இறுதிப் பெயரே*
*நின்ற வீற்றயல் நீட்டம் வேண்டும்*

லகார, ளகார, ஈற்றுப்பெயர் விளி ஏற்புழி ஈற்றயல் நீட்டம் கொடுத்தல் வேண்டும் என்றவாறு.

உதாரணம் :- குருசில், தோன்றல், மக்கள், என்பன, குருசில், தோன்ருல், மக்காள் எனவரும்

*சூ 27 அயல் நெடிதாயின் இயற்கையாகும்*

உரை :- லகார, ளகார ஈற்றுப்பெயர் விளி ஏற்புழி ஈற்றல் நெடிதாயின் இயல்பாகி விளி ஏற்கும் என்றவாறு.

உதாரணம் :- பெண்பால், கோமாள் என்பன விளிக்கண்ணும் அவ்வாறே வருய

*சூ 28 வினையினும் பண்பினும்*
*நினையத் தோன்றும் ஆளென் இறுதி*
*ஆயாகும்மே விளிவயினான*

ளகார ஈற்றுள் ஒரு சாரான விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- தொழிற் பெயர்க்கண்ணும், பண்புப்பெயர்க்கண்ணும் வரும் ஆள் என் இறுதி ஆய் ஆகும் விளித்தற்கண் என்றவாறு. பெயரென்பது அதிகாரத்தான் வந்தது ஈண்டு விளிவயினான என்பதற்கு மேல் உரைத்தவாறே உரைக்க.

உதாரணம் :- உண்டாள், கரியாள், என்பன உண்டாய், கரியாய், எனவரும்.

*சூ 29 முறைப் பெயர்க்கிளவி முறைப் பெயரியல*

ளகார ஈற்றுள் முறைப்பெயர் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- ளகார ஈற்றுள் முறைப்பெயர்ச் சொல் னகார ஈற்றுள் முறைப்பெயர் போல விளி ஏற்கும் என்றவாறு.

உதாரணம் :- மகள், மகளே எனவரும். ஒப்பின் முடித்தல்

என்பதனுல் முறைமை சுட்டாத மகள் என்பதும் ஏகாரம் பெற்று விளி ஏற்கும். 'அகவன் மகளே, அகவன் மகளே' எனவரும்.

ஆ 30 சுட்டுமுதற் பெயரும் விஞவின் பெயரும்
முற்கிளந்தன்ன என்மனுர் புலவர்

ளகர வீற்றுப்பெயருள் விளி ஏலாதன உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- சுட்டெழுத்தை முதலாக உடைய பெயரும் விஞவாகிய பெயரும் மேற்சொல்லியவாறு போல் விளி ஏலா என்றவாறு.

உதாரணம் :- அவள், இவள், உவள் அத்தன்மையள், அத்தன்மையாள், யாவள் என்பன விளி ஏலா என்றவாறு.

ஆ 31 அளபெடைப் பெயரே அளபெடையியல

லகார, ளகார ஈறுகள் அளபெடைக்கண் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- லகார, ளகார ஈற்றுள் அளபெடைப் பெயர் மேற்சொல்லப்பட்ட அளபெடை போல இயல்பாகும் என்றவா .

உதாரணம் :- வலம்புரித் தடக்கை மாசுல், மேவார்த் தொலைத்த விறன்மிகு வேளள் எனவரும்.

ஆ 32 கிளந்த இறுதி அஃறிணை விரவுப்பெயர்
விளம்பிய நெறிய விளிக்கும் காலை

அஃறிணைப் பொருள் உணரவரும் விரவுப்பெயர் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேற்சொல்லப்பட்ட ஈற்றிணை உடையவாகிய அஃறிணைப் பொருள்மேல் வரும் விரவுப்பெயர் சொல்லப்பட்ட நெறியவாம் விளிக்கும் காலத்து என்றவாறு.

உதாரணம் :- சாத்தன், சாத்தா, சாத்தி, சாத்தீ, குருடன், குருடா, குருடி, குருடீ, எனவரும். பிறவும் வந்தவழிக்கண்டு கொள்க.

சூ 33 *புள்ளியும் உயிரும் இறுதியாகிய*
*அஃறிணை மருங்கின் எல்லாம் பெயரும்*
*விளிநிலை பெறூஉங் காலம் தோன்றில்*
*தெரிநிலை உடைய ஏகாரம் வரலே*

அஃறிணைக்கு உரிய பெயர் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- புள்ளியும் உயிருமாகிய எழுத்தினை ஈருக உடைய அஃறிணைப் பெயராகி வருவனவெல்லாம் விளி ஏற்கும் காலம் தோன்றின் ஏகாரம் வருதல் தெரிநிலை உடைய என்றவாறு.

எனவே பிறவாற்ருல் வருவன இத்துணை விளக்கம் இல என்றவாரும் என்பது என் சொன்னவாரு எனின் அஃறிணைப் பெயர் ஏகாரம் பெற்று விளி ஏற்றல் பெரும்பான்மை. உயர்திணைக்கு ஓதிய வாய்பாட்டால் வருதல் சிறுபான்மை என்றவாறு. காலம் தோன்றின் என்றது அஃறிணைப் பெயர் உயர்திணை போல விளி ஏற்பன சில என்பதூஉம், ஏலாதனவும் ஒரு காலம் பற்றி விலக்கப்படும் என்பதூஉம், அறிவித்தற்கு எனக்கொள்க.

உதாரணம் :- புலியே, வண்டே, மரையே. மானே, மாவே, குயிலே, மரமே எனவரும். தும்பி, தும்பீ, எனவும் யானை, யானாய் எனவும் வேங்கை, வேங்காய் எனவும் தென்றல் தென்ருல் எனவும் அரிமான் அரிமானே எனவும் உயர்திணை வகையான் வருவசிறுபான்மை.

சூ 34 *உளவெனப்பட்ட எல்லாப் பெயரும்*
*அளவிறந்தனவே விளிக்கும் காலைச்*
*சேய்மையின் இசைக்கும் வழக்கத்தான*

இருதிணைக்கண்ணும் வரும் விளிவேற்றுமைக்கெல்லாம் உரியதோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- இருதிணைக்கண்ணும் விளி ஏற்றுள எனப்பட்ட எல்லாப்பெயரும் ஓதிய அளவையினுனன்றி மாத்திரை நீண்டு ஒலிக்கும் சேய்மைக்கண் நின்றபொருளை விளிக்கும் வழக்கின்கண் என்றவாறு.

எனவே, மேற்சொல்லப்பட்டவற்றுள் கெட்டெழுத்துப் பெற்றன விடநிலைப் பொருட்கண் என்று கொள்ளப்படும். அளவிறந்தன என்றமையான் மூன்று மாத்திரையின் நீண்டு ஒலித்தலும் கொள்க.

உதாரணம் :- சாத்தாஅ, கொற்றூஅ, எனவும் சாத்தஅஅ, கொற்றுஅஅ எனவும் வரும்

சூ 35 அம்மவெண்ணும் அசைச் சொல் நீட்டம்
அம்முறைப் பெயரொடு சிவணாதாயினும்
விளியொடு கொள்ப தெரியுமோரே

இடைச்சொற்கண் விளிப்பொருண்மை உணரவருவன உணர்த்துதல் நுதலிற்று

உரை :- அம்ம என்னும் அசைச்சொல் நீட்டமாகி அம்மா என்னும் சொல், அம்முறைப் பெயரோடும் பொருந்தாயினும், அதனை விளிப் பொருண்மை உணர்த்தும் சொல்லோடு கூட்டிக் கொள்ப அறிவோர் என்றவாறு.

உதாரணம் :- அம்மா கொற்றா எனவரும் வந்தது கொண்டு வராதது முடித்தல் என்பதனால் ஏட, ஏடா, ஏடி, ஏடீ என வருவனவும் கொள்க.

சூ 36 த க நு எ என அவை முதலாகித்
தன்மை குறித்த ன ர ள வென் இறுதியும்
அன்ன பிறவும் பெயர்நிலை வரினே
இன்மை வேண்டும் விளி வேற்றுமை கொளலே
எஞ்சிய உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- த, க, நு, எ என்பன முதலாகிப் பொருண்மை குறித்த ன, ர, ள என்னும் ஈற்றினை உடைய சொற்களும் அத்தன்மைய பிறவும்......பெயராகி......விளியேற்றலின்மை வேண்டும் ஆசிரியர் என்றவாறு.

அவையாவன, தமன், தமள், தமர், நமன், நமள், நமர், நுமன், நுமள், நுமர், எமன், எமள், எமர், அன்னபிறவும் என்றதனால் பிறன், பிறள், பிறர் எனவரும். இவை விளி ஏலா.

1 ''விளங்கு மணிக்கொடும் பூணஅய் நின்னாட்
டிளம்பிடி யொருசூல் பத்தீனும்மோ

என்புழி யகர விளியேற்றதால் எனின், அவ்வாறு வருவன வழக்குப் பயிற்சியின்மையின், எடுத்தோதிற்றிலர். ஆயினும், செய்யுள் மருங்கின்' என்னும் அதிகாரப் புறனடையார் இந்நிகரவெல்லாம் அமைத்துக் கொள்க

இவ்விளி வேற்றுமையை முடிக்கும் சொல் யாதோ எனின் இஃது எழுவாய் வேற்றுமையது திரியாகலான் அதற்குப் பயனிலையாகி வருவனவற்றுள் இதற்கு ஏற்புடையன முடிக்கும் சொல்லாம் எனக்கொள்க. இவ்வாறு ஒற்றுமை உடைத்தாகலானே ஒரு சார் ஆசிரியர் வேற்றுமை ஏழெனக் கொண்டது உணர்க.

விளிமரபு முடிந்தது.

இவ்வோத்தினுள் சூத்திரம் உட்பட உரையினது அளவு இரந்த வகையான் நூற்றுமுப்பது.

---

1. புறம் 30

# (5) பெயரியல்

சூ 1 *எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே*

இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின் பெயரியல் என்னும் பெயர்த்து. பெயரியல் உணர்த்தினமையால் பெற்ற பெயர். கிளவியாக்கம் முதலாக விளிமரபு ஈறாகத் தொடர்மொழி இலக்கணம் கூறி இனி, அத்தொடர் மொழிக்கு உறுப்பாகிய தனிமொழி இலக்கணம் கூறுகின்றார். அத்தனிமொழி நான்கினும் பெயர்ச்சொல் சிறந்ததாகலின், இவ்வோத்து முற்கூறப்பட்டது மேலதனோடு இயையுமிது.

இதனுள் முதற்சூத்திரம் என்னுதலிற்றோ எனின் எல்லாச் சொற்கும் உரியதோர் பொது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- உலகத்தாரால் வழங்கப்பட்ட எல்லாச்சொல்லும் பொருள் குறித்தன என்றவாறு.

எனவே, பொருளின்றி வழங்கும் சொல் இல என்னும் மரபு என்னை, முயற்கோடு எனச் சொல் நிகழுமன்றே அதனாற் குறிக்கப்பட்ட பொருள் யாங்கது? எனின் அறியாது கடாவினாய், முயல் என்பதற்குப் பொருண்மை காண்டி கோடு என்பதற்குப் பொருண்மை காண்டி. இவை இரண்டு பொருளும் தனித்தனி உளவாகலின் இவை தனிமொழிக்கண் பொருள் குறித்து நின்றன. தொடர் மொழியாயுழி உள்ள பொருளோடு அதன்கண் இல்லாத பொருளை அடுத்தமையான் ஆண்டு இன்றாயிற்று அல்லது இல் பொருள்மேல் வழக்கின்று என்று கொள்க. அஃதேல் எல்லாச் சொல்லும் பொருள் குறித்து வருமாயின், அசைநிலை, இசைநிறை, ஒரு சொல்லடுக்கு என்பன பொருள் குறித்திலவால் எனின், பொருள் உணர்த்தும் என்னாது குறித்தன என்றமையான் அவையும் சார்ந்த பொருளைக் குறித்தன என்று கொள்க. அன்றியும் எடுத்தோத்துப் பெரும்பான்மை என்று கொள்க. 'இவ்வூரார் எல்லாம் கல்வி உடையர்' என்றவழிக் கல்லாதார் உளராயினும் கற்றார் பலர் என்பது குறித்து நின்றாற்போலக் கொள்க.

இன்னும் 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தன' என்பதற்குப்

பொருள் எல்லாச் சொல்லும் எல்லாப் பொருளையும் குறித்து நிற்கும் என்றவாறு.

எனவே, இச்சொல் இப்பொருள் உணர்த்தும் என்னும் உரிமை இல என்றவாறும். என்னை உரிமை இலவாகியவாறு எனின் உலகத்துப் பொருள் எல்லாவற்றையும் பாடைதோறும் தாம் அறிகுறியிட்டு ஆண்டதுணை அல்லது இவ்வெழுத்தினான் இயன்ற சொல் இப்பொருண்மை உணர்த்தும் என எல்லாப் பாடைக்கும் ஒப்பமுடிந்ததோர் இலக்கணம் இன்மையான் என்க எனப் பொருள் பற்றிவரும். இடுகுறி என்பது பெறப் பட்டது.

இவ்விடுகுறியான் அடிப்பட்ட சொல்லோடு ஒட்டி மற்றொரு சொற்குப் பெயராகி வருவது காரணக்குறியாம்.

*சூ 2 பொருண்மை தெரிதலும் சொன்மை தெரிதலும்*
*சொல்லினாகும் என்மனார் புலவர்*

இதுவும் சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- சொல்லினாற் குறிக்கப்பட்ட பொருளின் தன்மை ஆராய்தலும், சொல்லின் தன்மை ஆராய்தலும் சொல் தன்னானே ஆகும் என்றவாறு.

உதாரணம் :- நிலம் என்பது பொருளின் தன்மை ஆராய்வார்க்கு மண்ணினான் இயன்றதோர் பூதம் என்றாயிற்று. சொல்லின் தன்மை ஆராய்வார்க்குப் பெயர்ச் சொல் ஆயிற்று அதனால் இருபகுதிய சொல் நிலைமை என்றவாறு.

*சூ 3 தெரிபுவேறு நிலையலும் குறிப்பிற் றோன்றலும்*
*இருபாற்றென்ப பொருண்மை நிலையே*

மேற்சொல்லப்பட்ட இருபகுதியினுள் பொருண்மைநிலை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- பொருண்மை நிலையாவது இச்சொற்குப் பொருள் இதுவென உணரப் பலபொருளிலும் தெரிந்து வேறாகி நிற்றலும் சொல்லப்படு

பொருளன்றிச் சொல்லுவான் குறிப்பினான் பிறிது பொருள் பட நிற்றலும் என இருபகுதியை உடைத்து என்று சொல்லுவர் என்றவாறு.

வெளிப்படுநிலை, குறிப்புநிலை எனச்சொற் பொருள் உணர்த்துமாறு இருவகை என்றமையால் இதுவும் சொல் ஆராய்ச்சியாம். அஃது எற்றாற் பெறுதும் எனின் யாதானும் ஒரு சொல்லையும் பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் எனக் குறியிடுவதால் அதன் பொருண்மை உணரவேண்டுதலின் பொருண்மை நிலையும் சொல் இலக்கணம் என்பது உய்த்துணர வைத்தார்.

'தெரிபுவேறுநின்றன' நிலம், நீர், தீ, வளி, எனப் பொருள் உணர்த்துவனவும், உண்டான் தின்றான் எனத்தொழில் உணர்த்துவனவும் குறிப்பிற்றோன்றின — இவன் நெருப்பு, இவன் பசு, எனக் குணம் பற்றாமைத் தீமை செய்தான் நன்றி செய்தான் எனவும், கொடுமை செய்தாரை, வாழ்வாயாக என அப்பொருள் பயவாது பிற பொருள் பயப்பவும் வருவன.

*சூ 4 சொல்லெனப் படுப பெயரே வினையென்று*
*ஆயிரண் டென்ப அறிந்திசி னோரே*

சொன்மைநிலை உணர்த்துதல் நுதலிற்று.

**உரை :-** சொல் என்று சொல்லப்படுவன பெயர்ச்சொல், வினைச்சொல் என இருவகை என்ப ஆசிரியர் என்றவாறு.

*சூ 5 இடைச் சொற்கிளவியும் உரிச்சொற்கிளவியும்*
*அவற்றுவழி மருங்கிற்றோன்று மென்ப*

இதுவும் அது.

**உரை :-** இடைச்சொல்லாகக் கிளக்கப்படுவனவும், உரிச்சொல்லாகக் கிளக்கப்படுவனவும் பெயர், வினைகளைச் சார்ந்த இடத்தில் தோன்றும் என்றவாறு.

எனவே, பெயரையும் வினையையும் சாராத வழிக் கூற்று நிகழாது என்றவாறும்.

இத்துணையும் சொல்லப்பட்டது, சொல்லாயின் பொருள்

குறித்துவரும் எனவும், அது பொருண்மைநிலை சொன்மைநிலை என இருவகைப் படும் எனவும் அவற்றுள் பொருண்மைநிலை, வெளிப்படுநிலை, குறிப்புநிலை என இருவகைப்படும் எனவும் சொன்மைநிலை பெயர், வினை, எனச்சிறப்புடைச் சொல் இரண்டும், இடை, உரி எனச்சிறப்பில் சொல் இரண்டும் என நால்வகைப்படும் எனவும் தனிமொழிக்குப் பொது இலக்கணம் கூறியவாறும். இவற்றுள் பொருண்மைநிலை வழக்கினும் சான்றோர் செய்யுளகத்தும் பயின்று வருதலானும் வழக்கு, தமிழ்நாட்டுப் பிறந்தது. தமிழறிவாரை நோக்குதல் இலானும் இலக்கணம் இன்றியும் பாகம் உணர்வார் ஆகலானும் எடுத்து ஓதாராயினர். அஃது அற்றாதல் 'வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா. வெளிப்படா வரா உரிச்சொல்மேன' என ஓதிய அதனாலும் கொள்க. சொன்மைநிலை இலக்கணமில்வழி உணர்வரிது ஆதலான் எடுத்து ஓதப்பட்டது.

சூ 6 *அவற்றுள்*
*பெயரெனப்படுபவை தெரியுங்காலை*
*உயர்திணைக் குரிமையும் அஃறிணைக்குரிமையும்*
*ஆயிரு திணைக்கும் ஓர் அன்ன உரிமையும்*
*அம்மூவுருபின தோன்றலாறே*

நிறுத்த முறையானே பெயர்ச்சொல் பாகுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேற்சொல்லப்பட்ட நான்கு சொல்லுள்ளும் பெயர் என்று சொல்லப்படுபவை ஆராயும் காலத்து உயர்திணைப் பொருட்கே உரிமையவாகியும் அஃறிணைப் பொருட்கே உரிமையவாகியும் அவ்விரு திணைக்கும் ஒத்த உரிமையவாகியும் அம்மூன்று வடிவினை உடைய தோன்றுதற் கண் என்றவாறு.

எனவே, பெயர்ச்சொல், உயர்திணைப்பெயர், அஃறிணைப் பெயர், விரவுப்பெயர், என மூவகைப்படும் என்பதூஉம் அவ்விருதிணைப் பெயர்களையும் உணர்த்தும் என்பதும் பெறுதும். உதாரணம் தத்தம் சிறப்புச் சூத்திரத்துட் காட்டுதும்.

சூ 7 *இருதிணைப் பிரிந்த ஐம்பால் கிளவிக்கும்*
*உரியவை உரிய பெயர்வயி னான*

இதுவும் பெயர்ச்சொற்கெல்லாம் பொது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- இருதிணையிலின்றும் பிரிந்த ஐம்பால் சொற்கும் பெயர்வயின் உரியவை உரியவாம் என்றவாறு.

இதனாற்சொல்லியது முன் எடுத்து ஓதப்படுகின்ற பெயர்களைப் பால் விரித்து ஓதுகின்றிலம். பெயர்களுள் அவ்வப்பாற்குரிய பெயரைப் பாலறி கிளவியாகக் கொள்க என்றவாறு. இதனானே பெயர்ச்சொற்கு ஈறு வரையறுக்கப்படாது என்பதூஉம் கூறினாராம்.

சூ 8 *அவ்வழி*
*அவளிவள் உவள்என வரூஉம்பெயரும்*
*அவனிவன் உவன்என வரூஉம்பெயரும்*
*அவரிவர் உவர்என வரூஉம் பெயரும்*
*யான்யாம் நாம்என வரூஉம்பெயரும்*
*யாவன் யாவள் யாவர் என்னும்*
*ஆவயின் மூன்றொ டப்பதி னைந்தும்*
*பாலறிவந்த உயர்திணைப் பெயரே*

நிறுத்த முறையானே உயர்திணைப் பெயராமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேற்சொல்லப்பட்ட பெயரிடத்து அவன் முதலாகிய சுட்டுப்பெயர் ஒன்பதும் யாவன் முதலாகிய தன்மைப் பெயர் மூன்றும் யாவன் முதலாகிய வினாவின் பெயர் மூன்றும் ஆய அப்பதினைந்து பெயரும் பால் விளங்கவந்த உயர்திணைப் பெயராம் என்றவாறு.

யான் என்பது ஒருமை உணர நின்றது.

சூ 9 *ஆண்மை அடுத்த மகனென் கிளவியும்*
*பெண்மை யடுத்த மகளென் கிளவியும்*
*பெண்மை யடுத்த இகர இகரவிறுதியும்*

நம்மூர்ந்து வரூஉம் இகர வைகாரமும்
முறைமை சுட்டா மகனும் மகளும்
மாந்தர் மக்கள் என்னும் பெயரும்
ஆடூஉ மகடூஉ ஆயிரு பெயரும்
சுட்டு முதலாகிய அன்னும் ஆனும்
அவை முதலாகிய பெண்டென் கிளவியும்
ஒப்பொடு வரூஉம் கிளவியொடு தொகைஇ
அப்பதினைந்தும் அவற்றோரன்ன

இதுவும் அது.

உரை :- ஆண்மை அடுத்த மகன் என்பது முதலாக ஓதப்பட்ட பதினைந்து பெயரும் பால் விளங்கும் வந்த உயர்திணைப் பெயராம் என்றவாறு.

ஆண்மை அடுத்த மகன் என்பது ஆண்மகன். பெண்மை அடுத்த மகள் என்பது பெண்மகள். பெண்மை அடுத்த இகர இறுதி பெண்டாட்டி, இகர இறுதியை உடையது இறுதி என்றாயிற்று.

நம்பி, நங்கை என்பனவற்றிற்கும் ஒக்கும். நம் ஊர்ந்து வரூஉம் இகர ஐகாரம் என்பது நம்பி நங்கை என்பன முறைமை சுட்டா மகனும் மகளும் என்பது முறைப்பெயரைக் குறியாது உயர்திணைப் பொருட்குப் பெயராகி மகன், மகள் எனவரும். மாந்தர், மக்கள் என்னும் பெயராவன, மாந்தர், மக்கள் என்னும் பொருட்பன்மை உணரவருவன

'ஆடூஉ மகடூஉ ஆயிரு பெயரும்' என்பது ஆடூஉ, மகடூஉ என்பன 'சுட்டு முதலாகிய அன்னும் ஆனும் ஆவது' சுட்டெழுத்தை முதலாக உடைய அன், ஆன் என்னும் சொல்லீறாகி வருவன. அது சினையிற்கூறும் முதலறி கிளவியாகிய பெயர்க்குப் பெயராயிற்று. அத்தன்மையன் அத்தன்மையான், அன்னன், அனையான் என வருவன. ஏனைச்சுட்டும் ஒட்டிக்கொள்க. இவை உவமை குறியாது முன்னம் சில குணத்தை அடுத்தமையான் எனப் பண்பு குறித்து வரும்.

'அவை முதலாகிய பெண்டென் கிளவி' என்பது சுட்டெழுத்தை முதலாக உடையவாகிப் பெண்மை உணரவரும் சொல் அத்தன்மையள், அத்தன்மையாள், அன்னள், அனையாள், என்பன. 'ஒப்பொடு வரூஉம் கிளவி' உவமிக்கப்படும் பொருளோடு ஒத்துவரும் பெயர். கணணன்னன், கண்போல்வான், பொன்னையான், குரங்கன, பேயன், குரங்கி, என்பனவும் அவை. அஃதேல் அன்னர், அனையார் எனச் சுட்டு முதலாகிய பன்மை உணரவரும் பெயர் கூறுதது எனையெனின், அவை பெருவழக்கின்மையான் ஈண்டு ஓதிற்றிலராயினும், அன்ன பிறவும் என்பதனாற் கொள்க.

சூ 10 எல்லாரும் என்னும் பெயர்நிலைக் கிளவியும்
எல்லீரும் என்னும பெயர்நிலைக் கிளவியும்
பெண்மை யடுத்த மகனென் கிளவியும்
அன்ன வியலஎன்மனார் புலவர்
இதுவும் அது.

உரை :- எல்லாரும் என்னும் பெயரும், எல்லீரும் என்னும் பெயரும், பெண் மகன் என்னும் பெயரும் பால் விளங்க வந்த உயர்திணைப் பெயராம் என்றவாறு

விளையாடு பருவத்துப் பெண்மகளைப் பெண்மகன் என்றல் பண்டையோர் வழக்கு.

சூ 11 நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின் பெயரே
வினைப்பெயர் உடைப்பெயர் பண்புகொள் பெயரே
பல்லோர்க் குறித்த முறைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த சினைநிலைப் பெயரே
பல்லோர்க் குறித்த திணைநிலைப் பெயரே
கூடிவரு வழக்கி னுடியற் பெயரே
இன்றிவ ரென்னும் எண்ணியற் பெயரே
அன்றி யனைத்தும் அவற்றியல் பினவே
இதுவும் அது.

உரை :- நிலப்பெயர் முதலாக ஓதப்பட்ட அனைத்தும் பால் விளங்க வந்த உயர்திணைப் பெயராம் என்றவாறு.

உதாரணம் :- நிலப்பெயராவது இடத்தினால் பெற்றபெயர். அது சோணாட்டான், சோணாட்டாள், சோணாட்டார் எனவும், மதுரையான்' மதுரையாள், மதுரையார் எனவும் வருவது. குடிப்பெயராவது, குலத்தினான் ஆகிய பெயர். அந்தணன் அந்தணி, அந்தணர் என்பன. அஃதேல் பாம்பு, நாய், மணி என்பனவும் அந்தணன் அரசன் என வருமாலெனின் அவ்வாறு வருவன குடியிற்கருகிய பெயர். அவையாவன சேரன், சோழன், பாண்டியன் என்பன வந்தது கொண்டு வராதது முடித்தல் என்பதனால் அந்நூலகத்து ஆடல் வேண்டி, ஆசிரியன் இட்டதோர் குறியென்று கொள்ளினல்லது பாம்பைப் பிடித்தான் என்னும் அந்தணனைப்பிடித்தான் என்றவழிப் பொருள் புலப்படாமையின் அது வழக்கின்றென மறுக்க.

குழுவின் பெயராவது பலர் கூடின கூட்டத்தால் பெற்ற பெயர். பிறவும் வந்தவழிக்கண்டு கொள்க. வினைப்பெயராவது உடையவன், உண்டவள், உண்டவர் எனவரும். உடைப்பெயராவது உடைமையாற் பெற்ற பெயர். அவை நிலமும் பொருளும் கருவியும் பற்றிவரும். குட்டுவன், பூழியன் என்பன குட்டநாட்டையும் பூழிநாட்டையும் உடையான் என்னும் பொருள்பட வந்தன.

முடியான், குழையான், குழையாள், குழையார் என்பன பொருள்பற்றி வந்தன. வேலான், வில்லி என்பன கருவிபற்றி வந்தன. பண்புகொள் பெயராவது பண்பினாற் பெற்றபெயர். கரியான், நெடியான், நல்லார் எனவரும். பல்லோர்க்குறித்த முறைநிலைப் பெயராவது: தாயர், தாய்மார், தந்தையர் தந்தைமார் என்பன.

இது முதலாகிய நான்கு பெயரும் இருதிணைக்கும் பொது-வாகிவருதலின் பல்லோர் குறித்த என்றார். அஃதேல் அஃறிணைக்கண்ணும்' 1 ''கொடுங்கோற் கோவலர் பின்னினறுய்ப்ப, இன்னே வருகுவர் தாயர்'' என வந்ததால் எனின் ஆண்டு உயர்த்துச் சொல்லுதற்கண் வந்தது.

1. முல்லை. 15, 16.

அதற்கு இலக்கணம் ''செய்யுள் மருங்கினும்'' என்னும் புறனடைச் சூத்திரத்தாற் கொள்ளப்படும்.

பல்லோர்க்குறித்த சினைநிலைப் பெயராவது, சினையினாற் பன்மை குறித்துவரும் பெயர் கூனர் குருடர், முடவர் என்பன. பல்லோர்க் குறித்த திணைநிலைப் பெயராவது திணைப்பற்றி வரும் பன்மைப் பெயர் ''குறிஞ்சிக் கண்ணியர் குவளைபூண்டு—வெற்பராடும் வெற்புச்சேர் இருக்கை'' என்றவழி உயர்திணைப்பொருளாகிய பன்மை குறித்து வந்தது. வெற்பன். மலையன், நாடன் என ஒருமைக் குறித்து வருவன உளவால் எனின் அவை அந்நிலத்துத் தலை மகனைக் குறுக்கும் உடைப் பெயராம். அந்நிலத்துள்ள மாந்தரைக் குறிக்கில் இருதிணைக்கும் பொதுவாம். வெட்சியார், காந்தையார் என்பனவும் அவை. வெட்சியான், என வாராதோ எனின், அவ்வாறு வழக்கிவரின் அக்கிரலின் உள்ளான் என்னும் பொருள்படவரினல்லது, நிரை கோடல், மீட்டல், கடுந்துவிதெக்தல் என்பன ஒருவனாற் செய்யப்படாமை யானும் வெட்டியாள், காந்தையாள் எனப்பெண்பால் உணரவரும் வழக்கின்மையாலும், திணையாற்பெறும் பெயர் பன்மை குறித்து வருதல் பெரும்பான்மை என்று கொள்க.

சிறுபான்மை ஒருமை குறித்துவரின் அன்னபிறவாற் கொள்ளப்படும். கூடிவரு வழக்கிடியனற் பெயராவது, கூடியியலும் வழக்கின் வழங்கும் இயற்பெயராவது, ஒரு பொருட்கு இடுகுறியாகிய பெயர். அஃது இரு திணைக்கும் உரித்தாகலின விரவுப் பெயரென வேறெடுத்து ஓதினர் ஈண்டு அப்பெயருடையார் பலரை ஒரு வினையாற் சொல்லும் காலத்துச் சொல் தொகுத்துக்கூற வேண்டுதலின் ஈண்டு ஓதப்பட்டது. சாத்தர் என்னும் பெயருடையார் இருவர், மூவர் சேர வந்துழிச் சாத்தான் வந்தான் சாத்தன் வந்தான் எனத்தனித்தனி கூறின, பொருள் வேற்றுமை உணர்த்தாது ஒரு பொருளை இருகாற் சொன்னாற் போலப்படும். ஆண்டுச் சாத்தன்மார் வந்தார், சாத்திமார் வந்தார் எனக் கூறுதல் வேண்டுதலானும், அப்பொருள் உயர்திணை ஆகலானும் ஈண்டு ஓதப்பட்டது. இன்றிவரென்னும் எண்ணியற் பெயராவது இத்துணைவர் என எண்ணினான் இயன்ற பெயர் ஒருத்தி, ஒருவன். இருவர், மூவர் என்பன.

சூ 12 அன்னபிறவும் உயர்திணை மருங்கில்
பன்மையும் ஒருமையும் பாலறிவந்த
என்ன பெயரும் அத்திணையவ்வே

உயர்திணைப் பெயர் புறனடை வகையான் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேல் எடுத்து ஓதப்பட்டன போல்வன பிறவும் உயர்திணைப் பொருளிடத்து ஒருமை பன்மை எனப் பால் விளங்க வரும் எல்லாப் பெயரும் உயர்திணையிடத்த

உதாரணம் :- பெண்டிர், பெண்டுகள் என்பனவும், அத்தன்மையர், அத்தன்மையார் என்பனவும் ஏனாதி அமைச்சன் படைத்தலைவன் எனச்சிறப்புப் பற்றிவரும் பெயரும் நாயன், நாச்சி எனத்தலைமை பற்றி வரும் பெயரும் அடியன் அடியாள் என இழிபு பற்றிவரும் பெயரும் ஆசிரியன், புலவர் எனக்கல்வி பற்றிவரும் பெயரும் குழலன், குழலாள், இடையன், தோளாள் என உறுப்புப் பற்றிவரும் பெயரும் ஆதிரையான், ஓணத்தான், வேனிலான், எனக்காலம் பற்றிவரும் பெயரும் பிறன், பிறள், பிறர், நுமன், நுமள், நுமர், தமன, தமள், தமர் என்பனவும் பிறவும் உயர்திணைப் பொருட்கே உரியவாகி வரும் பெயரெல்லாம் இதுவேயாகக் கொள்க.

சூ 13 அதுஇது உதுவென வரூஉம் பெயரும்
அவைமுத லாகிய ஆய்தப் பெயரும்
அவைஇவை உவையென வரூஉம் பெயரும்
அவைமுத லாகிய வகரப் பெயரும்
யாது, யா, யாவை என்னும் பெயரும்
ஆவயின் மூன்றோ டப்பதினைந்தும்
பாலறி வந்த அஃறிணைப் பெயரே

நிறுத்த முறையானே அஃறிணைப் பெயராமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- அதுமுதலாக ஓதப்பட்ட பதினைந்து பெயரும் பாலறிவந்த அஃறிணைப் பெயராம் என்றவாறு.

உதாரணம் :- அது, இது, உது, அஃது, இஃது, உஃது, அவை, இவை, உவை, அவ், இவ், உவ், யாது, யா, யாவை எனவரும்.

சூ 14 பல்ல பலசில என்னும் பெயரும்
உள்ள இல்ல என்னும் பெயரும்
வினைப்பெயர்க் கிளவியும் பண்புகொள் பெயரும்
இனைத் தெனக் கிளக்கும் எண்ணுக்
குறிப்பெயரோடு
ஒப்பினாகிய பெயர்நிலை உளப்பட
அம்பாலொன்பதும் அவற்றோரன்ன
இதுவும் அது.

உரை :- பல்ல, பல, சில என்னும் பெயராவன பல்ல, பல, சில என்பன. உள்ள, இல்ல என்னும் பெயராவன, உள்ள, இல்ல என்பன. வினைப்பெயர்க் கிளவியாவது வினையானாகும் பெயர். வந்தது, உழுதது என்பன வினையினான் இப்பொருட்குப் பெயராகி வந்தன. பண்பு கொள் பெயராவது பண்பினைக் கொண்டபெயர். கரியது, காரி, வெள்ளை எனப்பண்பினைக் கொண்ட பொருட்குப் பெயராயின. இனைத்து எனக் கிளக்கும் எண்ணுக்குறிப்பெயராவது இத்துணை என வரையறுத்து உணர்த்தும் எண்ணுக்குறிப்பெயராம். அவை எண்ணப்பட்ட பொருள்மேல் வருவனவும் எண்ணுப்பெயராம். எண்ணின் பெயரும் எண்ணுப்பெயராம். நீ தந்த காரணம் ஆயிரம் என்றவழி எண்ணப்பட்ட பொருள் மேல் வந்தது. நாலிரண்டெட்டு என்றவழி, எண்ணின்மேல் வந்தது. ஒப்பினாகிய பெயர்நிலை என்பது ஒப்புப்பற்றி வருவது பொன் போல்வது, பொன்னனையது, யானைப் போலி என்பன. அப்பால் ஒன்பதும் அவற்றோரன்ன என்பது அக்கூற்று ஒன்பதும் அஃறிணைப் பாலறி சொல்லாம் என்றவாறு.

சூ 15 கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே
கொள்வழி உடைய பலவறி சொற்கே
இதுவும் அது.

உரை :- கள் என்னும் சொல்லோடு சிவணிய அவ்வஃறிணைப் பொருள்மேல் வரும் இயற்பெயர் பலவறி சொற்றக் கொள்ளும் இடனுடைய என்றவாறு.

என்றமையால் சினைத இயற்பெயர் பால் விளங்காது என்றவாறும். ஆக்கள், தெங்குகள் எனவரும்.

*ஆ 16 அன்னபிறவும் அஃறிணை மருங்கில்*
*பன்மையும் ஒருமையும் பாலறிவந்த*
*என்ன பெயரும் அத்திணை யவ்வே*

அஃறிணைப் பெயர்க்கெல்லாம் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேற்சொல்லப்பட்டன போல்வன பிறவுமாகி அஃறிணைப் பொருட்கண் பன்மையுர் ஒருமையுமாகிப் பால் விளங்க வந்த எல்லாப்பெயரும் அஃறிணையிடத்த என்றவாறு.

உதாரணம் :- உள்ளது, இல்லது, பிறிது, பிற, அத்தன்மையது, அத்தன்மைய. இவையும் இவை போலவனவும்.

*ஆ 17 தெரிநிலை உடைய அஃறிணை இயற்பெயர்*
*ஒருமையும் பன்மையும் வினையொடு வரினே*

மேற்பால் விளங்குவன கூறினர். இனிப்பால் விளங்காத அஃறிணை உணர்த்துமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- அஃறிணைப் பொருள்மேல் வரும் இயற்பெயர் ஒருமையும், பன்மையும் தெரிநிலை உடையவாம். வினையொடுவரின் என்றவாறு அல்லது பால் விளங்கா என்றவாறு. உயர்திணைப் பொருள்மேல் வரும் இயற்பெயர் ஒருமையும் பன்மையும் தோன்ற நிற்றலின் வேறோதப்பட்டது. இவை பொருளும் உறுப்பும், பண்பும், தொழிலும், இடமும், காலமும் பற்றிவரும்.

உதாரணம் :- ஆ, தெங்கு என்பன பொருள். இலை, பூ என்பன உறுப்பு. கருமை, வட்டம் என்பன பண்பு. உண்டல், ஓடல் என்பன தொழில். அகம், புறம், என்பன இடம். யாண்டு திங்கள் என்பன காலம் ஆ வந்தது என்றவழி ஒன்று என்பதும் வந்தன என்றவழிப் பல என்பதூஉம் உணர்த்தியவாறும். அவ்விரு ஈற்றுக்கும் பொதுவாகி நின்றவாறும் கண்டுகொள்க. பிறவும் அன்ன.

ஆ 18 இருதிணைச் சொற்குமோர் அன்ன உரிமையில்
திரிபு வேறுபடூஉம் எல்லாப்பெயரும்
நிணையும் காலைத் தத்தம் மரபின
வினையோ டல்லது பால்தெரி பிலவே

நிறுத்த முறையானே, இருதிணைக்கும் உரியபெயர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- உயர்திணைப் பெயர்ச்சொல், அஃறிணைப் பெயர்ச் சொல், என இருதிணைச் சொற்கும் ஒத்த உரிமையினின்றும் திரிந்து பொருள் வேறுபடூஉம் எல்லாப் பெயரும் நினையுங்காலைத் தத்தம் மரபின் வினையொடு கூடியல்லது பால் விளங்கும் தன்மை இல என்றவாறு.

உதாரணம் :- பால் எனவே திணையும் அடங்கும். அவை யாவன இயற்பெயர் முதலாக முன் எடுத்து ஓதகின்ற பெயர். அவற்றுள் சாத்தன் என்னும் பெயர் உயர்திணை ஆண்பாற்கும் இருதிணைக்கும் பொதுவாகி வழங்கு-மாதலின் அது வந்தான், என்பதனோடு தொடர்பு பட்டுழி உயர்திணை எனவும் வந்தது என்பதனோடு தொடர்பு பட்டுழி அஃறிணை எனவும் நின்றவாறு கண்டு கொள்க. பிறவு மன்ன. இச்சூத்திரம் எதிரது நோக்கிற்று.

ஆ 19 நிகழூஉ நின்ற பலர்வரை கிளவியின்
உயர்திணை ஒருமை தோன்றலும் உரித்தே
அன்ன மரபின் வினையினை

மேலதற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- தத்தம் மரபினால் பால்உணர வரூஉம் வினைச் சொல் அன்றி நிகழ்காலத்தை உணர நின்ற பலரை வரைந்த செய்யும் என்னும் முற்றுச் சொல்லானும் உயர்திணை ஒருமை தோன்றலும் உரித்து அப்பால் தெரியவரும் தொழிலின்கண்.

நிகழூஉ நின்ற என்பதனைப் பெயரெச்சமாகவும் பால்வரை கிளவி என்பதனை வினைத்தொகையாகவும் கொள்க. உம்மை எச்சவும்மை ஆகலான், அஃறிணை ஒருமை தோன்றலும் உரித்தென்று கொள்.

உதாரணம் :- சாத்தன் யாழ் எழூஉம், சாத்தி சாந்தரைக்கும் என்றவழி உயர்திணை என்பது பெறப்பட்டது சாத்தன் புல்மேயும், சாத்தி புல்மேயும் என்றவழி அஃறிணை என்பது பெறப்பட்டது.

ஆ 20 இயற்பெயர் சினைப்பெயர் சினைமுதற்பெயரே
முறைப்பெயர்க் கிளவி தாமே தானே
எல்லாம் நீரே நீயெனக் கிளந்து
சொல்லிய அன்ன பிறவு மாஅங்கு
அன்னவை தோன்றின் அவற்றொடுங்கொளலே

மேற்சொல்லப்பட்ட இருதிணைக்குமுரிய சொல் பாதுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று

உரை :- இயற்பெயர் முதலாக எடுத்து ஓதப்பட்டனவும் எடுத்து ஓதப்படாத அத்தன்மைய பிறவும் இருதிணைப் பொருண்மையும் உணரத் தோன்றின் அவ்விருதிணையோடுங் கொள்க என்றவாறு.

ஒரு திணைமேல் கொள்ளற்க என்றவாருயிற்று.

இயற்பெயராவது ஒரு பொருட்கு இடுகுறியாகி வழங்கும் பெயர். மேல் சினைப்பெயர் கூறுகின்ருராதலின் இதனை முதற்பெயர் என்று கொள்க. சினைப்பெயராவது உறுப்பின் பெயர். சினைமுதற்பெயராவது, சினை-யையும் முதலையும் உணர்த்தும் பெயர். முறைப்பெயராவது பிறப்புமுறை பற்றிவரும் பெயர். தாம், எல்லாம், நீர் என்பன பன்மை உணர்த்தும் பெயர். தான், நீ என்பன ஒருமை உணர்த்தும் பெயர். அன்ன பிறவும் ஆவன பிராயம் மற்றி வரும் பெயரும் இடம் பற்றிவரும் பெயரும் தொழில் பற்றிவரும் பெயரும் பிறவும்.

ஆ 21 அவற்றுள்
நான்கே இயற்பெயர் நான்கே சினைப்பெயர்
நான்கென மொழிமனர் சினைமுதற்பெயரே
முறைப் பெயர்க்கிளவி இரண்டாகும்மே
ஏனைப் பெயரே தத்தம் மரபின

மேற்சொல்லப்பட் பெயர் விரி வகையான் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேற்சொல்லப்பட்டவற்றுள் இயற்பெயர் நான்கு வகைப்படும். சினைப்பெயர் நான்கு வகைப்படும். சினைமுதற்பெயர் நான்கு வகைப்படும். முறைப்பெயர் இரண்டு வகைப்படும். ஏனைப்பெயர் ஓதிய வாய்பாட்டன என்றவாறு.

சூ 22 அவைதாம்,
பெண்மை இயற்பெயர் ஆண்மை இயற்பெயர்
பன்மை இயற்பெயர் ஒருமை இயற்பெயர் என்று
அந்நான் கென்ப இயற்பெயர் நிலையே

நிறுத்த முறையானே இயற்பெயர் நான்கும் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று

உரை :- மேற்சொல்லப்பட்ட இயற்பெயரது நிலைமையாவது, இருதிணைக்கண்ணும் பெண்மைப் பொருண்மையைக் குறித்த இயற்பெயரும், ஆண்மைப் பொருண்மையைக் குறித்த இயற்பெயரும், பன்மைப் பொருண்மையைக் குறித்த இயற்பெயரும் ஒருமைப் பொருண்மையைக் குறித்த இயற்பெயரும் என நான்கு என்றவாறு

பன்மை இயற்பெயர் என்றாராயினும் உயர்திணைப் பன்மை இயற்பெயர். பால் தோன்றலின் அஃதொழித்து ஏனையது கொள்ளப்படும். அவ்வாறுதல் வருகின்ற சூத்திரங்களானும் விளங்கும். இவ்வுரை வருகின்ற சூத்திரங்கட்கும் ஒக்கும்.

உதாரணம் :- பெண்மை குறித்த பெயர் சாத்தி, ஆண்மை குறித்த பெயர் சாத்தன், ஒருமை குறித்த பெயர் கோதை, பன்மை குறித்த பெயர் யானை, பிறவுமன்ன.

சூ 23 பெண்மைச் சினைப்பெயர் ஆண்மைச் சினைப்பெயர்
பன்மைச் சினைப்பெயர் ஒருமைச்சினைப் பெயரென்று
அந்நான் கென்ப சினைப்பெயர் நிலையே

சினைப்பெயர் நான்கும் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேற்சொல்லப்பட்ட சினைப்பெயரது நிலைமையாவது பெண்மைப் பொருண்மைக்கண் வரும் சினைப்பெயர், ஆண்மைப் பொருண்மைக்

கண் வரும் சினைப்பெயர், பன்மைப் பொருண்மைக்கண் வரும் சினைப்பெயர், ஒருமைப் பொருண்மைக்கண் வரும் சினைப்பெயர் என நான்கு என்றவாறு

உதாரணம் :- முலை என்பது பன்மை குறித்து நின்றது. மோவாய் என்பது ஆண்மை குறித்து நின்றது கை என்பது ஒருமை குறித்து நின்றது. தலை என்பது பன்மை குறித்து நின்றது.

சூ 24 பெண்மை சுட்டிய சினைமுதற் பெயரே
ஆண்மை சுட்டிய சினைமுதற் பெயரே
பன்மை சுட்டிய சினைமுதற் பெயரே
ஒருமை சுட்டிய சினைமுதற் பெயரென்று
அந்நான் கென்ப சினைமுதற் பெயரே

சினைமுதற்பெயர் நான்கும் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று

உரை :- பெண்மை சுட்டிய சினைமுதற்பெயர் முதலாகிய நான்கும் சினைமுதற்பெயர் நான்கும் ஆவன என்றவாறு.

ஈண்டுச் சினைமுதற்பெயர் என்றமையான், முதலைக் குறித்த பெயரும் சினையைக் குறித்த பெயரும் அன்றி முதலையும் சினையையும் குறித்த பெயர் என்று கொள்ளப்படும்.

உதாரணம் :- முடத்தி என்பது பெண்மையைக் குறித்தது முடவன் என்பது ஆண்மையைக் குறித்தது. செவியிலி என்பது ஒருமையைக் குறித்தது. தூங்கல் என்பது பன்மையைக் குறித்தது.

சூ 25 பெண்மை முறைப்பெயர் ஆண்மை முறைப் பெயரென்
றாயிரண் டென்ப முறைப்பெயர் நிலையே

முறைப்பெயர் இரண்டும் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- பெண்மைப் பொருண்மையைச் சுட்டிய முறைப் பெயரும் ஆண்மைப் பொருண்மையைச் சுட்டிய முறைப்பெயரும் என இரு வகையும் முறைப்பெயர் இரண்டுமாவன என்றவாறு

உதாரணம் :- தாய் என்பது பெண்மை குறித்தது. தந்தை என்பது ஆண்மை குறித்தது. பிறவுமன்ன.

சூ 26 பெண்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருத்திக்கும் ஒன்றிநிலையே

பெண்மைப் பெயர்திணை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- பெண்மை குறித்த எல்லாப் பெயரும் அஃறிணைப் பெண்பாலாகிய ஒன்றற்கும் உயர்திணைப் பெண்பாற்கும் ஒத்த நிலைமைய என்றவாறு.

மேல், 1 'நினையும் காலைத்தத்தம் மரபின் வினையோடல்லது பால்தெரிபிலவே' என்றமையான் உயர்திணை வினை கொண்டவழி உயர்திணை எனவும் அஃறிணை வினை கொண்டவழி அஃறிணை எனவும் கொள்க. இவ்வுரை வருகின்ற சூத்திரங்கட்கும் ஒக்கும்.

உதாரணம் :- சாத்தி வந்தது, முலை எழுந்தது, முடத்தி வந்தது, தாய்வந்தது என்றவழி அஃறிணைப் பொருண்மை உணர்த்தின. சாத்தி வந்தாள் முலை எழுந்தாள், முடத்தி வந்தாள், தாய் வந்தாள் என்ற வழி உயர்திணைப் பொருளை உணர்த்தின. அஃதேல் முலை எழுந்தது எனத் தன் வினையான்வரின அஃறிணைப் பெயரேயாம். பிற எனின், முலை என்பது இருதிணைப் பொருட்கும் உள்ளதோர் உறுப்பாகலின், ஆண்டுத்திணை தெரியாமல் பொதுப்படநிற்கும், அதுமுதல் வினையோடு முடியினல்லது திணை விளங்காது என்க.

சூ 27 ஆண்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருவற்கும் ஒன்றிய நிலையே

ஆண்மைப்பெயர்திணை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- ஆண்மை குறித்த பெயரெல்லாம் அஃறிணை ஆண்பாலாகிய ஒன்றற்கும் உயர்திணை ஆண்பாலிற்கும் ஒத்த நிலைமைய என்றவாறு.

உதாரணம் :- சாத்தன் வந்தான், மோவாய் எழுந்தான், முடவன் வந்தான், தந்தை வந்தான் என்றவழி உயர்திணை ஆயின. சாத்தன் வந்தது, முடவன் வந்தது. தந்தை வந்தது, எனவும் 'முடங்குபுற விறவின்

1. பெயரி. 18.

மோவாயேற்றை' எனவும் அஃறிணைப் பொருண்மை உணர்த்தின.

சூ 28 பன்மை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றே பலவே ஒருவர் என்னும்
என்றிப் பாற்கும் ஓரன் னவ்வே

பன்மை குறித்த பெயர் திணை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மன்மை குறித்த பெயரெல்லாம் அஃறிணை ஒருமை, பன்மைக்கும் உயர்திணை ஆண்பால் பெண்பாற்கும் ஒத்த நிலைமைய என்றவாறு.

உதாரணம் :- யானை வந்தது, தலை முடித்தது, தூங்கல் வந்தது, என அஃறிணை ஒருமை ஆயின. யானை வந்தன, தலை முடித்தன, தூங்கல் வந்தன. இவை அஃறிணைப் பன்மை உயர்த்தின. யானை வந்தான், தலை முடித்தான், தூங்கல் வந்தான் என உயர்திணை ஆண்பால் ஆயின. யானை வந்தாள், தலை முடித்தாள், தூங்கல் வந்தாள் எனப்பெண்பால் ஆயின.

சூ 29 ஒருமை சுட்டிய எல்லாப் பெயரும்
ஒன்றற்கும் ஒருவர்க்கும் ஒன்றிய நிலையே

ஒருமை குறித்த பெயர்திணை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- ஒருமையைக் குறித்த எல்லாப்பெயரும் அஃறிணை ஒருமைக்கும் உயர்திணை ஆண்பார்கும் பெண்பாற்கும் ஒத்த நிலைமைய என்றவாறு

உதாரணம் :- கோதை வந்தது, கையிழந்தது, செவியிலி வந்தது என அஃறிணை ஒருமை உணர்த்தின. கோதை வந்தான், கையிழந்தான், செவியிலி வந்தான் என உயர்திணை ஆண்பால் உணர்த்தின. கையிழந்தன என அஃறிணைப் பன்மையும் உணர்த்துமால் எனின் அவ்வாறு வருவன சினை வினையும் காட்டும். திரிபின்றி வரும் உதாரணம் வந்தவழிக்கண்டு கொள்க.

சூ 30 தாமென் கிளவி பன்மைக் குரித்தே

தாம் என்னும் சொல் திணை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- தாம் என்பது இருதிணைப் பன்மைக்கும் உரித்து என்றவாறு.

உதாரணம் :- தாம் வந்தார் என உயர்திணை ஆயிற்று. தாம் வந்தன என அஃறிணை ஆயிற்று.

ஆ 31 *தான் என் கிளவி ஒருமைக் குரித்தே*

தான் என்னும் சொல் திணை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- தான் என்னும் சொல் இருதிணைக்கண் ஒருமைக்கு உரித்து என்றவாறு.

உதாரணம் :- தான் வந்தான், தான் வந்தாள், என உயர்திணை ஒருமை உணர்த்திற்று, தான் வந்தது என அஃறிணை ஒருமை உணர்த்திற்று.

ஆ 32 *எல்லாமென்னும் பெயர் நிலைக்கிளவி*
*பல்வழி நுதலிய நிலைத்தாகும்மே*
*தன்னுள் உறுத்த பன்மைகல்லது*
*உயர்திணை மருங்கின் ஆக்கமில்லை*

எல்லாம் என்னும் சொல் திணை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- எல்லாம் என்னும் பெயர் இருதிணைக்கண்ணும் பன்மை குறித்த நிலைமைத்து. அஃது உயர்திணைக்கண் உளப்பாட்டுத் தன்மைக்கு அல்லது முன்னிலை, படர்க்கையின் ஆகுதலில் என்றவாறு.

உதாரணம் :- எல்லாம் வந்தன, எல்லாம் வந்தீர் என்றவழி அஃறிணைப் படர்க்கையினும், முன்னிலையிலும் ஆகிவந்தது. எல்லாம் வந்தேம் என்றவழி உயர்திணை ஆயிற்று அஃதேல் 'நெறிதாழ் இருங்கூந்தல் நின் பெண்டிர் எல்லாம்' என 'உயர்திணைப் படர்க்கையிலும் 'நீவிர் எல்லாம் விளையாடபோதுமின்' என முன்னிலையிலும் வருமால் எனின் அவை இலக்கண வழக்கல்ல. நின் பெண்டிர் எல்லாரும் என்னும் சொல் எல்லாம் எனவும், நீங்கள் எல்லீரும் என்னும் சொல் எல்லம் எனவும் மரூஉ வழக்காகி வந்தன. மரூஉ வழக்கு நீக்கப்படாது என்பது எழுத்திகாரத்து மொழிப் புணர்ச்சி கூறுகின்றவழி மரூஉ முடிபெண எடுத்தமையால் கொள்ளப்படும்.

இலக்கண வழக்காயின் வரும் குற்றம் என்னையெனின் ஈண்டு விலக்கினமையானும் உயர்திணைக்கண் எல்லாரும் எல்லீரும் என

எடுத்தோதினமையானும் ஆண்டுத் தன்மைப்பெயர் ஓதாமையானும், எழுத்ததிகாரத்துள் எல்லாம் என்னும் பெயர்க்கு அற்றுச்சாரியைவிதித்து 'உயர்திணையாயின் நம்மிடை வரும்' என உளப்பாட்டுத் தன்மைக்கேற்ற சாரியை வரும் என விதித்தமையானும், இப்பெயர் உயர்திணைக்கண் உளப்பாட்டுத் தன்மைக்கே உரித்து என்பது இவ்வாசிரியர் கருத்தென்று கொள்க. இதனைச் 'செய்யுள் மருங்கினும்' என்னும் அதிகாரப்புறனடையால் பிறநூல் முடிபு எனத்தழீஇக் கோடலுமாம்.

*சூ 33 நீஇர் நீயென வரூஉம் கிளவி*
*பால் தெரிபிலவே உடன்மொழிப்பொருள*

நீஇர், நீ என்னும் பெயர்க்கு உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று

உரை :- நீஇர், நீ என்னும் பெயர், திணையும் பாலும் விளங்க நில்லாது, இருதிணையையும் உடன் உணர்த்தும் பொருண்மை உடைய என்றவாறு.

திணை உணர்த்துவதோர் சொல்லின்மையின், பால் எனவே திணையும் அடங்கும்.

*சூ 34 அவற்றுள்,*
*நீ என் கிளவி ஒருமைக் குரித்தே*
*ஏனைக் கிளவி பன்மைக் குரித்தே*

மேலதற்கோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- நீ என்னும் பெயர் இருதிணைக்கண்ணும் ஒருமை விளக்குதற்கு உரித்து. நீ இர் என்னும் பெயர் பன்மை விளக்குதற்குரித்து என்றவாறு.

உதாரணம் :- நீ வந்தாய், நீ இர் வந்தீர், என்றவழிப்பால் விளங்காது ஒருமைப் பன்மை விளங்கியவாறு கண்டுகொள்க. அன்னபிறவாற் கொள்ளப்படுவன முதியான் என்பது பிராயம் பற்றிவரும். அதுமுதியான் வந்தது, முதியான் வந்தான் எனவரும். சுமையான் என்பது தொழில்பற்றி வந்தது. சுமையான் வந்தது, சுமையான் வந்தான் எனவரும் பிறவுமன்ன.

சூ 35 ஒருவர் என்னும் பெயர்நிலைக்கிளவி
இருபாற்கும் உரித்தே தெரியுங்காலை

உயர்திணைப் பொருட்கண் விரவுப் பெயரிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- ஒருவர் என்று சொல்லப்படுகின்ற பெயர்ச்சொல் உயர்திணைக்கண் ஆண்பாற்கும் பெண்பாற்கும் உரித்து ஆராயும் காலத்து என்றவாறு.

சூ 36 தன்மை சுட்டின் பன்மைக்கேற்கும்

மேலதற்கோர் முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- ஒருவர் என்னும் பெயரின் தன்மையைக்கருதில் பன்மைவினை கோடற்குப் பொருந்தும் என்றவாறு.

உதாரணம் :- ஒருவர் வந்தார்.

சூ 37 இன்ன பெயரே இவையெனல் வேண்டின்
முன்னம் சேர்த்தி முறையின் உணர்தல்

பெயரானும் வினையானும் பால் அறியப்படாத சொற்கள் பால் விளங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- நீவிர், நீ, ஒருவர் என்று சொல்லப்பட்ட பெயர்கள் இன்னபாற்குரிய என்று அறியவேண்டின் சொல்லுவான் குறிப்பினோடு சேர்த்து அவற்றின் பின்வரும் சொல்லால் உணர்க என்றவாறு.

முன்னம் சேர்த்தி முறையின் உணர்க என்றமையால் குறிப்பினாலும் முறையினாலும் உணர்க என்றவாறாகக் கொள்க.

உதாரணம் :- 1 'நீயுந்தவறிலை' என்றவழி நீ என்பது பெண்பால் உணரநின்றது. 2 'நீயே பிறர்நாடு கொள்ளுங்காலை, என்றவழி ஆண்பால் உணரப்பட்டது.

'என்போல இன்றுணைப் பிரிந்தாரை உடையையோ' நீ என்றவழி அஃறிணை என்பது உணரப்பட்டது. இவை குறிப்பினான் உணர

1. கலி. 56. 2. புறம். 57.

நின்றன. நீ அரசன், நீ குயத்தி, நீகடல், வான் என முறைவந்த சொல்லி-னால் பால்விளங்கின. நீஇர் என்பதற்கும் இவ்வாறே உதாரணம் வந்தவழிக்கண்டு கொள்க. ஒருவர் ஒருவரைச் சார்ந்தொழுகல் ஆற்றவழிபடுதல் வல்லுதல் அல்லால் என்றவழி ஆண்பால் உணர நின்றது.

'வண்டு சுழல வருவார் ஒருவரைக்
கண்டு கலங்கிற்றுயிர்' என்பது

பெண்பால் உணர நின்றது. இவை குறிப்பினான் உணர நின்றன. ஆயிழை-யார் ஒருவர், அயில்வேலார் ஒருவர் என்பவை சார்ந்த சொல்லால் பால் உணரப்பட்டன. பிறவுமன்ன.

*சூ 38 மகடூஉ மருங்கிற் பால்திரி கிளவி*
*மகடூஉ இயற்கைத் தொழில்வயினான*

உயர்திணைப் பெண்பாற்கும் உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று

உரை :- மகடூஉ மருங்கின் பால்திரிந்த பெண்மகன் என்னும் சொல் தொழிற்படுங்கால் மகடூஉ இயற்கையாம் என்றவாறு.

உதாரணம் :- பெண்மகன் வந்தாள் எனவரும்.

*சூ 39 ஆவோ வாகும் பெயருமா ருளவே*
*ஆயிட னறிதல் செய்யு ளுள்ளே*

இஃது ஒருசார் பெயருக்கு உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- ஆகாரம் ஓகாரமாகத் திரியும் பெயரும் உள. அவ்வாறு வரும்சொல் செய்யுளகத்து அறிந்து கொள்க என்றவாறு.

1 ''வில்லோன் காலன கழலே தொடியோள்,
மெல்லடி மேலவும் சிலம்பே
நல்லோர் யார்கொல் அளியர்தாமே''

என்றவழி, வில்லான், தொடியாள், நல்லார் என்பன ஓகாரம் பெற்று வந்தன. உம்மை எச்ச உம்மையாகலான் அகரம் ஓகாரமாகத் திரியும் பெயரும்

1. குறுந். 7.

உள் என்றவாறு. கிழவன், கிழவள், என்பன 'நாடு கிழவோன் கிழவோடேத்து' எனவும் வரும். அஃறிணைப் பொருட்கண்ணும் இவ்வாறு வருவன அறிந்து கொள்க.

சூ 40 இறைச்சிப் பொருள்வயிற் செய்யுளுட் கிளக்கும்
இயற்பெயர் கிளவி உயர்திணை சுட்டாம்
நிலத்துவழி மருங்கில் தோன்றலான

ஒருசார் இயற்பெயர்க்கு உரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று. எய்தியது விலக்கியதுமாம்.

உரை :- இறைச்சிப் பொருள் என்பது செய்யுளுள் உரைக்கப்படுகின்ற பொருட்புறத்தாகிய கருப்பொருள். அஃதாவது மாவும் புள்ளும் முதலாயின. அவற்றின்மேல் இடுகுறியாகி வரும் இயற்பெயர் அவற்றின் கண் செய்யுளுள் கிளக்கும் இயற்பெயர்ச் சொல் உயர்திணைப் பொருண்மையைச்சுட்டா. நிலத்துவழித் தோன்றலான என்றவாறு.

வழியும், மருங்கும் ஒரு பொருட்கண் இருசொல் பிரிவின்றி வந்தன. என்பதென் சொன்னவாறெனின், இயற்பெயர் என்பதனை இருதிணைக்கும் பொதுவென ஓதினாராயினும் செய்யுளகத்துக் கருப்பொருள் ஆகி. நிலத்துவழித் தோன்றும் மாவும் புள்ளும். மரமும் முதலாயினவற்றின்மேல் இடுகுறியாகிவரும் இயற்பெயர், அஃறிணைப் பொருளைச் சுட்டுமதல்லது உயர்திணைப் பொருண்மையைச் சுட்டா என எய்தியது விலக்கியவாறு செய்யுளகத்து இறைச்சிப் பொருட்கண் தோன்றும் இயற்பெயரென ஓதல் வேண்டியது அஃறிணைப் பொருட்கண் சாத்தன் கொற்றன் எனவரும் இயற் பெயர் வழக்கின்கண் என்பன.

சூ 41 திணையொடு பழகிய பெயரலங்கடையே
எய்தியது ஒரு மருங்கு விலக்குதல் நுதலிற்று.

உரை :- மேல் உயர்திணையைச் சுட்டா என ஓதப்பட்டன. அவ்வாறு வருதல் உயர்திணையோடு பழகிப்போந்த பெயர் அல்லாத இடத்து என்றவாறு. எனவே பழகிப்போந்த பெயர் இருதிணைக்கும் பொதுவாகி நிற்கும் என்றுகொள்க. அவையாவன, யானை ,சிங்கம், அன்னம், மயில், மாலை என இவ்வாறு வருவன.

பெயரியல் முடிந்தது.

இவ்வோத்தினுள் சூத்திரம் உட்பட உரையினது அளவு கிரந்தவகையான் முன்னூற்று ஒருபஃது.

# (6) வினையியல்

சூ 1 வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்

என்பது சூத்திரம். இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின், வினையியல் என்னும் பெயர்த்து, வினைச்சொல் உணர்த்தினமையால் பெற்ற பெயர். நிறுத்த முறையானே பெயர் இலக்கணம் கூறி, அதன்பின் வினையிலக்கணம் கூறவேண்டுதலின் அதன்பின் கூறப்பட்டது.

இதன் தலைச்சூத்திரம் என்னுதலிற்றோ எனின், வினைச்சொல் இலக்கணம் பொதுவகையான் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- வினை என்று சொல்லப்படுவது வேற்றுமை உருபு ஏலாது. காலத்தோடு தோன்றும் ஆராயும் காலத்து என்றவாறு.

வினை என்பது தொழில் உணர்த்தும் சொல்லாதலின் அது வேற்றுமை கொண்டு நிற்பதும் ஒருநிலை உண்டு. அந்நிலை ஒழியக் காலத்தோடு பொருந்தி நிற்குமது நம்மால் வினைச்சொல் என வேண்டப்பட்டது என்றவாறு.

உதாரணம் :- அஃதாவது உண்டலைச் செய்தான் என்பது ஈண்டுத் தின்றான் எனக்காலத்தோடு பட்டநிற்பது.

சூ 2 காலந் தாமே மூன்றென மொழிப

காலத்துக்குத் தொகை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேற்சொல்லப்பட்ட காலந்தாம் மூன்று என்று சொல்லுவார் ஆசிரியர் என்றவாறு. அதன் வகை வரும் சூத்திரத்துக்கூறுப.

சூ 3 இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்ற
அம்முக் காலமும் குறிப்பொடுங் கொள்ளும்
மெய்ந்நிலை உடைய தோன்றலாறே

காலத்திற்கு வகையும் அதற்கு உரியதோர் இலக்கணமும் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேற்சொல்லப்பட்ட காலத்தின் பாகுபாடாகிய இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என அம்முக்காலமும் குறிப்பொடும் கொள்ளும் பொருள் நிலைமையை உடைய தோன்றுநெறிக்கண் என்றவாறு.

உம்மை எஞ்சி நின்றது எனவே, காலம் தோற்ற நில்லாது குறித்துக் கொள்ளப்படும் வினைச்சொல்லும் உள என்றவாறாம்.

உதாரணம் :- உடையவன் என்பது முன்பு உடையன், இப்போது உடையன், பின்பு உடையன், என மூன்று காலத்திற்கும் வடிவு வேற்றுமைபட நில்லாமையின், காலம் குறித்துக்கொள்ளப்பட்டது.

சூ 4 குறிப்பினும் வினையினும் நெறிப்படத் தோன்றி
காலமொடு வரூஉம் வினைச்சொல் எல்லாம்
உயர்திணைக் குரிமையும் அஃறிணைக்குரிமையும்
ஆயிரு திணைக்கும் ஓரன்ன உரிமையும்
அம்மு உருபின தோன்றலாறே

மேற்கூறப்பட்ட வினையும் வினைக்குறிப்பும் தொகை நிலை வகையால் பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை:- காலம் குறிக்கப்படும் பொருண்மையினும், தொழிற்பொருண்மையினும் நெறிபடத்தோன்றி, காலத்தோடு வரூஉம் வினைச்சொல் எல்லாம் உயர்திணைப் பொருட்கு உரிமையவாகியும் அஃறிணைப் பொருட்கு உரிமையவாகியும் அவ்விரு திணைப் பொருட்கும் ஒத்த உரிமையவாகியும் மூன்று வேறுபாட்டான் வரும், புலப்படும் இடத்து என்றவாறு.

அவற்றுள் உயர்திணையாவன தெரிநிலைவினை, குறிப்புவினை என இருவகைப்படும். அவற்றுள் தெரிநிலை தன்மைவினை, முன்னிலைவினை, படர்க்கைவினை என மூன்று வகைப்படும். அவற்றுள் தன்மைவினை உளப்பாட்டுத் தன்மை, தனித்தன்மை என இருவகைப்படும். முன்னிலைவினை, ஒருமைவினை, பன்மைவினை, என இருவகைப்படும். படர்க்கைவினை ஆடூஉவினை மகடூஉவினை பன்மைவினை என மூவகைப்படும். குறிப்புவினையும் அவ்வாறே வரும். அவற்றுள் முன்னிலைவினை இருதிணைக்கும் பொதுவாகலின், அது விரவு வினைக்கண் கூறப்படும். ஏனைய ஈண்டுக் கூறப்படுகின்றன. அஃதேல் இம்மூன்று என்பது ஏற்றுற் பெறுதும் எனின், எச்சவியலுட் பெறுதும்.

ஆ 5 அம்ஆம் எம்ஏம் என்னும் கிளவியும்
உம்மொடு வரூஉம் கடதற என்னும்
அந்நாற் கிளவியொ டாயெண் கிளவியும்
பன்மை உரைக்கும் தன்மைச் சொல்லே

நிறுத்தமுறையானே உயர்திணைவினை ஓதுவான் எடுத்துக் கொண்டார். அவற்றுள் உளப்பாட்டுத் தனமைவினை உணர்த்துதல் நுதலிற்று.

உரை : அம்முதலாக ஓதப்பட்ட எட்டீற்றினை உடைய சொல் உயர்திணைப் பொருள் தன்னோடு கூடிய பன்மைவினை உரைக்கும் சொல்லாம் என்றவாறு.

உயர்திணை என்பது 'முன்னுறக்கிளந்த உயர்திணையவ்வே' என்பதினின்றும் தந்துரைக்கப்பட்டது. வினை என்பது மேலைச் சூத்திரத்தினின்றும் தந்துரைக்கப்பட்டது. மேற்காலமொடு வரூஉம் வினைச்சொல் என்று ஓதி ஈண்டுப்பால் உணர்த்தும் சொற்களை ஓதினமையான் வினைச்சொல் நிலைமை மூவகையாம் என்று கொள்ளப்படும். தொழில் உணர்த்துதலும் காலம் காட்டலும் பால்காட்டலும் என.

உதாரணம் : உண்டனம், உண்கின்றனம், உண்பம் என்ற வழி உண் என்பது தொழில் உணர்த்திற்று. டு, கின்று, பு என்பன காலம் காட்டின. அன்சாரியை ஆகி நின்றது. அம் பாலுணர்த்திற்று. பிறவும் இவ்வாறும் என்பது அறிந்து கொள்க. உண்டனம், உண்டாம், உண்ட-னெம், உண்டேம் இவை இறந்தகாலம் பற்றி வந்தன. உண்கிறனம் உண்கின்றும், உண்கின்றனெம், உண்கின்றேம் இவை நிகழ்காலம் பற்றி வந்தன. உண்பம், உண்பாம், உண்பெம், உண்பேம், இவை எதிர்காலம் பற்றி வந்தன. உண்கும், உண்டும், வருதும், சேறும், உண்பன எதிர்காலம் பற்றி வந்தன. உண்கும், உண்டும், வருதும், சேறும், உண்பன எதிர்காலம் குறித்துழி எதிர்காலத்திற்கு ஏற்கும் நிகழ்காலம் குறித்துழி நிகழ்காலத்-திற்கு ஏற்கும். அம்,ஆம் என்பன ஈற்றெழுத்து ஓதினமையான் உடம்பாட்டின் வருதலேயன்றி, மறையினும் வரப்பெறும் என்று கொள்க. உண்ணலம்,

உண்ணும்' உண்ணலெம், உண்ணோம் எனவரும். இவ்வுரை மேல் வருவன-வற்றிற்கும் ஒக்கும்.

6 கடதற என்னும்
அந்நான்கு ஊர்ந்த குன்றிய லுகரமோடு
என ஏன் அல் என வரூஉம் ஏழும்
தன்வினை உரைக்கும் தன்மைச் சொல்லே

இனித் தன்மைவினை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- கடதற என்னும் அந்நான்கு எழுத்தினையும் ஊர்ந்த குற்றியலுகரத்தோடே கூட என, ஏன், அல் என வரூஉம் ஏழும் தன்வினை உரைக்கும் தன்மைச் சொல்லாம் என்றவாறு.

தன்வினை உரைக்கும் சொல் என்னாது தன்மைச்சொல் என்றது தன் வினையைத் தானே உரைக்கும் சொல் என்று கொள்க.

உதாரணம் :- உண்கு, உண்டு, வந்து, சென்று எனவும் உண்டனென், உண்ணாநின்றனென், உண்குவென், உண்டேன், உண்கின்-றேன், உண்பேன், உண்பல் எனவும் உண்ணலென், உண்ணேன் எனவும் வரும்.

சூ 7 அவற்றுள்
செய்கென் கிளவி வினையொடு முடியினும்
அவ்வியல் திரியா தென்மனார் புலவர்

மேற்சொல்லப்பட்டவற்றுள் செய்கு என்னும் சொல் வினையொடு முடிந்துழியும் பாலுணர்த்தும் இயற்கையில் திரியாது என்றவாறு.

உதாரணம் :- காண்குவந்தேன், காண்கு யான் எனப் பெய-ரோடும் முடிதல் இலக்கணம் என்று கொள்க. அஃதேல் முற்றுச்சொல் பெயர் கொண்டு முடிதல் ஈண்டுப் பொருந்தாதாம் எனின், ஈண்டு முடியினும் என்ற-தற்குப் பொருள் தொடர்பு படினும் என்றவாறாகக் கொள்க.

சூ 8 அன், ஆன், அள், ஆள் என்னும் நான்கும்
ஒருவர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே

உயர்திணைப் படர்க்கை வினையுள் ஒருமைவினை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- அன் முதலாக ஓதப்பட்ட நான்கும் உயர்திணை ஒருமை உணரவரும் படர்க்கைச் சொல்லாம் என்றவாறு.

உதாரணம் :- உண்டனன், உண்கின்றனன், உண்பன், உண்டான், உண்ணாநின்றான், உண்பான், உண்ணான்; இவை ஆண்பால் உணரவந்தன. உண்டனள், உண்கின்றனள், உண்பள், உண்டாள், உண்கின்றாள், உண்பாள், உண்ணாள் இவை பெண்பால் உணரவந்தன. பிறவும் அன்ன.

சூ 9 அர் ஆர் ப என வரூஉம் மூன்றும்
பல்லோர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே

உயர்திணைப் படர்க்கைப் பன்மைவினை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- அர், ஆர், ப எனவரும் மூன்று சொல்லும் உயர்திணைப் படர்க்கைப் பன்மைவினை உணரவரும் என்றவாறு.

அரு என வந்த உகரம் செய்யுள் விகாரம் என்பதும் ஒன்று. ஒற்றாகி வரும் சொற்கள் உகரம் பெற்று வழங்கப்பெறும் என்பது அறிவித்தற்கு, உடம்பொடு புணர்த்துக் கூறினார் என்பதும் ஒன்று.

உதாரணம் : உண்டனர், உண்ணாநின்றனர், உண்பர், உண்டார், உண்ணாநின்றார், உண்பார், உண்ணார், உண்ப எனவரும்.

சூ 10 மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை
காலக் கிளவியொடு முடியும் என்ப

மேலதற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மார் என்ற வினைச்சொல்லும் பல்லோரை உணர்த்துக் படர்க்கைச் சொல்லாம். அது பெயரோடு முடிதலேயன்றி வினையோடும் முடியும் என்று சொல்லுவார் என்றவாறு.

உதாரணம் : ஆ கொண்மார் வந்தார். இது வினையோடு முடிந்தது. 'பாடில் மன்னரைப் பாடன்மார் எமரே' இது பெயரோடு முடிந்தது. இதனையும் செய்கு என்பதனையும் வினையெச்சம் என்றதனால் குற்றம் என்னை எனின் வினையெச்சம் பால் தோன்றாது; இவை பால் தோன்றலின் முற்று எனல் வேண்டும்.

சூ 11 பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அந்நா லைந்தும் மூன்று தலையிட்ட
முன்னுறக் கிளந்த உயர்திணையவ்வே

விரித்தது தொகுத்தலை உணர்த்துதல் நுதலிற்று. மேல் உயர்திணை ஒன்று ஓதாமையான எஞ்சியது உணர்த்திற்று என்றுமாம்.

உரை :- பன்மையும் ஒருமையுமாகிப் பாலுணரவரும் மூன்று தலையிட்ட இருபதும் முந்துற எடுத்து ஓதப்பட்ட உயர்திணை இடத்து என்றவாறு.

பெயரெச்சம் மொழி மாறி நின்றது. இவ்வாறு மாறிவருவன, உடப்பொடு, புணர்த்தலுனும கொள்க. மேல் ஓதப்பட்ட ஈறுகள் உயர்திணை என்பது இச்சூத்திரத்தால் பெறப்பட்டது. அவை இருபத்து மூன்று மாவன : அம், ஆம், எம், ஏம், கும். டும், தும், றும், கு, டு, து. று, என், ஏன், அல், அன், ஆன், அள், ஆள், அர், ஆர் ப, மார் என்பன.

சூ 12 அவற்றுள்,
பன்மை உரைக்கும் தன்மைக் கிளவி
எண்ணியல் மருங்கில் திரிபவை உளவே

உளப்பாட்டுத் தன்மைக்கண் வருவதோர் திரிபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேற்சொல்லப்பட்டவற்றுள் உளப்பாட்டுப் பன்மைச்சொல் எண் இயலும் வழித் திரிபவை உண்டு என்றவாறு.

உதாரணம் : எண் இரண்டு மூன்று என்பன. யாம் இருவேம் எனற்பாலது யாம் இருவர் எனவும் வரும். இன்னும் 'எண்ணியன் மருங்கின் என்பதற்கு எண்ணப்பட்ட மருங்கின் எனப்பொருள் உரைக்க. உளப்பாட்டுத் தன்மைக்கு ஓதிய எட்டீற்றினும், திரிபவை உள என்றுமாம். வருவோம், உண்போம் என ஓகாரம் பெற்று வருவன ஏகாரத் திரிபு என்று கொள்க.

சூ 13 யாஅ ரென்னும் வினாவின் கிளவி
அத்திணை மருங்கின் முப்பாற்கு முரித்தே

இது ரகர வீற்றுக்கண் வழுவமைத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- யார் என்னும் வினாப்பொருண்மை உணர்த்தும் சொல் அவ்வுயர்திணைக்கண் முப்பாற்கும் உரித்து என்றவாறு.

யார் என்பது காலம் காட்டாமையின் வினைச்சொல் ஆகா-தெனின், வேற்றுமை ஏலாமையின் வினை எனப்படும். அதனானேயன்றே, வினை எனப்படுவது, காலமொடு தோன்றும் என்றது வேற்றுமை கொள்ளாது என-வும் ஓதல் வேண்டிற்று என்க.

உதாரணம் :- அவன் யார், அவள் யார், அவர்யார் என வரும்.

ஆ 14 பாலறி மரபின் அம்மூ விற்றும்
ஆ ஒ ஆகும் செய்யுளுள்ளே

இது படர்க்கை வினைக்கண் வரும் திரிபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- பால் விளங்குதலை மரபாக உடைய னகாரம், ளகாரம்' ரகாரம் ஆகிய மூவீற்றும் ஆகாரம் ஓகாரமாகித் திரியும் செய்யுளகத்து என்றவாறு.

உதாரணம் :- 1 'வினவி நிற்றந்தோனே' 2 'நல்லை மன்னே நகூஉப் பெயர்ந்தோளே' சான்றோரல்லர் தோழி எனவரும். செய்யுள் ஆகார-மாகி வரப்பெறாதோ எனின், வழக்கிற்கு உரியன செய்யுட்காம் என்று சொல்-லாமல் பெறுதும் என்று கொள்க.

ஆ 15 ஆயென் கிளவியும் அவற்றொடு கொள்ளும்

இது முன்னிலை வினைச்சொற்கு உரியதோர் திரிபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- ஆய் என்னும் முன்னிலை வினைச்சொல்லும் ஓகார-மாகத் திரியும் என்றவாறு. முன்னிலைவினை ஈண்டுக் கூறிற்றிலராயினும் திரிபு ஒப்புமை நோக்கிப் பருந்து விழுக்காடு என்னும் சூத்திரக்கிடக்கையான் ஈண்டு ஓதப்பட்டது.

உதாரணம் :- 3 'வந்தோய் மன்ற தண்கடற்சேர்ப்ப' எனவரும்.

---

1. அகம் 48 2. அகம் 248 3. அகம் 80.

சூ 16 அதுச்சொல் வேற்றுமை உடைமை யானும்
கண் என வேற்றுமை நிலத்தி னானும்
ஒப்பினானும் பண்பி னானுமென்(று)
அப்பாற் காலம் குறிப்பொடு தோன்றும்

உயர்திணை வினைக்குறிப்பு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- ஆறாம் வேற்றுமைக் கண் ஓதிய உடைமை என்னும் பொருண்மையானும், ஏழாம் வேற்றுமைக் கண் ஓதிய நிலப்பொருண்மையானும், ஒன்றோடொன்று உவமையாகி வரும் பொருண்மையானும், ஒன்றன் குணமாகிய பண்பினானும் மேற்பகுக்கப்பட்ட காலம் குறிப்பொடு தோன்றும் என்றவாறு.

என்று என்பது எண்ணுக்குறித்து நின்றது. இதனாற் சொல்லியது இப்பொருண்மை காரணமாக வினைக்குறிப்புத் தோன்றும் ; என்றவாறு.

உடைமையாவது உடையானும் உடைப்பொருளும் தோன்ற வரும். சாத்தனதுடைமை குழை என்பது இதனுள் உடைப்பொருளை முந்துறக் கிளக்குங்கால் குழையை உடையன் சாத்தன் எனவரும, ஆண்டு உடையன் என்பது பெயரும் வினையுமன்றி நின்றதாயினும் உருபேலாது வினைச்சொற்போல நிற்றலின் வினைக்குப் பெற்றது நிலத்தினான் வந்தது. சாத்தன் மாடத்திருந்தான் என்னும் பொருட்கண், சாத்தன் மாடத்தன் எனவருவது. மாடத்தன் என்ற வழி இடமும் உருபும் வினையும் ஒற்றுமைப் பட்டுச் சாத்தன் என்பதற்குப் பயனிலையாகி வினைச்சொல நீர்மைப்பட்டு வருதலின் அதுவும் வினைக்குறிப்பாயிற்று. ஒப்பு என்பது, இதனை ஒக்கும் இது என புழி ஒத்தல் பெயருமன்றி, வினையுமன்றி, நின்றதாயினும் தந்தையை ஒப்பன் என வினைச்சொற்போல நிற்றலின் அதுவும் வினைக்குறிப்பாயிற்று.

பண்பாவது, இவற்கு நிறம் கரிது என்புழி கருமை என்பது இப்பொருட்குப் பண்பாதலின், இப்பண்பினை உடையானைக் கரியன் என்ப ஆகலான், அது பெயருமன்றி, வினையுமன்றி, வரினும் வினைச்சொற்போல நிற்றலின் அதுவும் வினைக்குறிப்பாயிற்று.

இவை எல்லாம் அவ்வப் பொருள் காரணமாக வந்த சொல்லாயின வாறு கண்டு கொள்க.

இவற்றுள் காலம் குறிப்போடு தோன்றலாவது, இவன் திருவுடையன் என்றவழிச் சொல்வான் குறிப்புத் தொன்று தொட்டுத் திருவுடையன் என்பதாயின், இறந்தகாலங் காட்டும். இப்பொழுது என்பதாயின் எதிர்காலம் காட்டும். பிறவும் இவ்வாறு அறிந்து கொள்க.

ஆ 17 அன்மையின் இன்மையின் உண்மையின் வன்மையின்
அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும்
என்ன கிளவியும் குறிப்பே காலம்

இதுவும் அது

உரை :- இப்பொருள் அல்ல என்னும் பொருண்மையானும், இப்பொருள் இல்லை என்னும் பொருண்மையானும் இப்பொருள் உண்டு என்னும் பொருண்மையானும் இது செய்ய வல்லன் என்னும் பொருண்மையானும் வரும் சொல்லும் அத்தன்மை பிறவுமாகி வரும் சொல்லும் குறிப்பாற் கொள்ளப்படும் எல்லாச் சொல்லும் காலம் குறிப்பான் உணரப்படும் என்றவாறு. இதனால் சொல்லியது இவை காரணமாகப் பிறந்த சொல்லும் குறிப்பு வினையாம் என்றவாறு.

உதாரணம் :- அல்லன், இலன், உளன், வல்லன் எனவரும். அன்ன பிறவாற் கொள்ளப்படுவன, இதன் எதிர்மறை வாய்பாட்டான் வரும். அவன் வல்லான் எனக்கொள்க. பிறவும் அன்ன. ''குறிப்பொடு கொள்ளுமென்ன கிளவியும்'' என்று ஓதியதவனல் காலம் குறித்தலேயன்றி, ஈண்டு ஓதப்பட்ட பொருண்மை புலப்பட நில்லாது, குறித்துக் கொள்ள நிற்கும் சொல்லும் வினைக்குறிப்பாம் என்றவாறு.

சாத்தன் குழையை உடையன் எனக் கூறற்பாலது சாத்தன் குழையன் என்றவழிக் குழையாகிய பொருளும் உருபும் உடைமை என்னும் சொல்லும் ஒற்றுமைப்பட்டுக் குழையன் என ஒரு சொல்லாகி வருதலின் அதுவும் வினைக்குறிப்பாம் எனறு கொள்க.

''குழலன் கோட்டன்'' *என்பனவும் அவை அஃதேல் இவை வேற்றுமைத் தொகை ஆகாதோ எனின், அது உருபு தொக வருதலும் பொருள் தொக வருதலும் என இருவகைத்து, அவற்றுள் உருபு தொகவரின் குழை உடையன் எனல் வேண்டும். பொருள் தொக வரின், குழைச்சாத்தன் எனல் வேண்டும். அவ்விருவாற்றானும் அன்றி, குழையன் என வினைச்சொல் நீர்மைப்பட்டு வருதலின் வினைக்குறிப்பாயிற்று. இன்னும் 'குறிப்பொடு கொள்ளுமென்ன கிளவியும்' என்றதனால் பைங்கண்ணன் புன்மயிரன் எனப் பண்பினாகிய சினை முதற்கிளவியாகி இருதிணைக்கும் பொதுவாகி வரும் வினைக்குறிப்பும் கொள்ளப்படும்.

சூ 18 பன்மையும் ஒருமையும் பாலறிவந்த
அன்ன மரபிற் குறிப்பொடு வரூஉம்
காலக்கிளவி உயர்திணை மருங்கின்
மேலைக் கிளவியொடு வேறுபாடிலவே

குறிப்பு வினைச்சொற்கு ஈறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- பன்மையும் ஒருமையும் ஆகிப் பால் விளங்க வந்தனவாகிய மேற்சொல்லப்பட்ட மரபினவாகி, குறிப்பொடு வரூஉம் காலத்தை உடைய சொல், உயர்திணை மருங்கின் மேற்சொல்லப்பட்ட சொல்லொடு வேறுபாடில என்றவாறு.

இவ்வாறு மாட்டெறிந்ததனால் ஆண்டு ஓதிய ஈறே வினைக் குறிப்பிற்கும் ஈறு என்றவாறும். ஏற்புழிக் கோடல் என்பதனால் ஈண்டு ஏற்பன கொள்ளப்படும்.

உதாரணம் : உடையம், உடையாம், உடையெம், உடையேம், இவை உளப்பாட்டுத் தன்மை. உடையென், உடையேன், இவை தனித்தன்மை. உடையன், உடையான், உடையள், உடையாள், உடையர்

*முருகு 209

உடையார், உடையோன், உடையோள், உடையோர் இவை படர்க்கை. ஏனையவற்றோடும் இவ்வாறே ஒட்டிக் கொள்க. பிறவீற்றினும் ஏற்பன வந்த வழிக்கண்டு கொள்க.

சூ 19 அ ஆ வ எனவரூஉம் இறுதி
அப்பான் மூன்றே பலவற்றுப் படர்க்கை

நிறுத்த முறையானே அஃறிணை வினை உணர்த்துவான் எடுத்துக்கொண்டார். அவற்றுள் தன்மைக்கண் கூற்று நிகழாமையானும், முன்னிலை விரவு வினை-யாதலானும் அஃறிணைக்கே உரித்தாகி வருவது படர்க்கை ஆதலான். அது தெரிநிலைவினை, குறிப்புவினை என இருவகைப்படுதலின் அவற்றுள் தெரிநிலை வினை உணர்த்துவார், முதற்பட அதற்கண் பலவறி சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

அஃதற்றாக, கிளியும் பூவையும் தம்வினையான் உரைக்கு-மாதலின், அஃறிணைக்கண் தன்மைவினை இன்றென்பது என்னையெனின் கிளியும் பூவையும் ஆகிய சாதி எல்லாம் உரையாடும் என்னும் வழக்கின்மையானும் அவ்வகை உரைக்குங்கால் ஒருவர் உரைத்ததைக் கொண்டு உரைக்கும் ஆதலானும் ஒருவன் பாடின பாட்டை நரம்புக் கருவியின் ஓசையும் பொருளும்பட இயக்கிய வழிக் கருவியும் உரையாடிற்றுதல் வேண்டுமாகலானும் அவ்வாறு வருவன மக்கள் வினை யாதலால் தன்மைவினையன்றென்க. யான் என்னும் பெயரை விரவுப் பெயர்க்கண் ஓதாது உயர்வினைக்கண் ஓதினமையானும் அஃறிணைக்கண் தன்மை இன்றென்க.

உரை :- அ, ஆ, வ, என்னும் ஈற்றினை உடைய அக்கூற்று-மூன்று சொல்லும் அஃறிணைப் படர்க்கைக்கண் பன்மை உணர்த்தும் சொல்லாம் என்றவாறு.

அஃறிணை என்பது வருகின்ற சூத்திரத்தினின்றும் தந்துரைக்-கப்பட்டது.

உதாரணம் :- உண்டன, உண்கின்றன, உண்பன, உண்ணல, உண்ணா. உண்குவ, எனவரும் பிறவுமன்ன.

சூ 20 ஒன்றன் படர்க்கை தறட ஊர்ந்த

*குன்றிய லுகரத் திறுதியாகும்*

அஃறிணைப் படர்க்கைக் கண் ஒருமை உணரும் சொல்லாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- அஃறிணை ஒன்றனை அறியவரும் படர்க்கை வினைச் சொல் த ற டக்களை ஊர்ந்த குற்றியலுகரத்தினை ஈருக உடைய என்றவாறு.

உதாரணம் :- உண்டது, உண்ணு நின்றது, உண்பது, உண்ணுது, கூயிற்று, உண்டு எனவரும். உண்டு என்பது உண்டது என்னும் பொருட்டு. பிறவுமன்ன.

சூ 21 *பன்மையும் ஒருமையும் பாலறிவந்த*
*அம்மூவிரண்டும் அஃறிணை யவ்வே*

விரிந்தது தொகுத்தலே உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேல், பன்மையும் ஒருமையுமாகிப் பால் உணர எடுத்து ஓதப்பட்ட ஆறு ஈற்று வினைச்சொல்லும் அஃறிணையிடத்த என்றவாறு.

அவையாவன : அ, ஆ, வ, து, று, டு, என்பன.

சூ 22 *அத்திணை மருங்கின் இருபாற் கிளவிக்கும்*
*ஒக்கும் என்ப எவன் என் வினுவே*

அஃறிணைக்கு உரியதோர் வினுச்சொல் பால் உணர்த்துமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- அஃறிணை இடத்து இருபாற்கிளவிக்கும் எவன் என் வினு ஒக்கும் என்று சொல்லுவர் என்றவாறு.

உதாரணம் :- பண்டியுள்ளது எவன், பண்டியுள்ளன எவன் எனவரும்.

சூ 23 *இன்றில உடைய என்னும் கிளவியும்*
*அன்றுடைத் தல்ல என்னும் கிளவியும்*
*பண்புகொள் கிளவியும் உளவென் கிளவியும்*
*பண்பி னுகிய சினைமுதற் கிளவியும்*
*ஒப்பொடு வரூஉம் கிளவியொடு தொகைக்கு*
*அப்பாற் பத்தும் குறிப்பொடு கொள்ளும்*

அஃறிணை வினைக்குறிப்பாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- இன்றென்பது, முதலாகச் சொல்லப்பட்ட பத்தும், காலம் குறிப்பொடு கொண்டு நிற்கும் என்றவாறு.

உதாரணம்:- இன்று, இல என்பன பொருளின்மை உணர வருவன. அன்று, அல்ல என்பன தாம் குறித்த பொருளை விளக்க வரும். அதுவன்று, அவையல்ல எனவரும். பண்புகொள் கிளவியாவது, பண்பினைக் கொண்டு நிற்கும் சொல். இது கரிது, இது நெடிது என வருவன. உளவென் கிளவியாவது, பொருளின் உண்மை உணர நிற்பது. அவை உள. இதன் ஒருமையாகிய உண்டு என்னும் சொல் இருதிணைக்கும் உரித்தாகலின் ஈண்டு ஓதாராயினார். பண்பினாகிய சினைமுதற்கிளவியாவது பண்பும் சினையும் அடுத்து முதலொடு முடிவது. குறுந்தாட்டு, குறுந்தாள எனவரும். ஒப்பொடு வரூஉம் கிளவியாவது, ஒன்றனோடு ஒன்று ஒக்கும் என்னும் பொருண்மை குறித்து வருவது. அன்னது, அனையது, அன்ன, அனைய எனவரும்.

*சூ. 24 பன்மையும் ஒருமையும் பாலறிவந்த*
*அன்னமரபிற் குறிப்பொடு வரூஉம்*
*காலக் கிளவி அஃறிணை மருங்கின்*
*மேலைக் கிளவியொடு வேறுபாடிலவே*

அஃறிணை வினைக்குறிப்பிற்குப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேல் ஓதிய வாய்பாட்டால், பால் விளங்க வந்தன வாய்ச் சொல்லப்பட்ட மரபினால், குறிப்பொடு வரும் வினைச்சொல் அஃறிணைத் தெரிநிலை வினையொடு வேறுபாடில என்றவாறு.

அதற்கு ஓதிய ஈறே இதற்கும் ஈறென்பது பெற்றாம்.

உதாரணம் :- உடையது, இன்று, குண்டு, கட்டு, குறுந்தாள, பொல்லா எனவரும். 'அன்னமரபிற் குறிப்பொடு வரூஉம்' என்றதனால், உருபும், பொருளும், வினையும் ஒற்றுமைப்பட்டு வருவனவும், உயர்திணை வினைக்கண் ஓதிய இடமும் வன்மையும் பற்றி வருவனவும் கொள்க. முதற்று, முதல என்பன உருபும் பொருளும் வினையும் ஒற்றுமைப்பட்டன. மேற்று, மேல, மாடத்தது மாடத்த என்பன இடம்பற்றி வந்தன. நடவற்று, ஓடவல்ல, ஓடவல்லாது ஓடவல்லா என்பன வன்மைபற்றி வந்தன. பிறவுமன்ன.

சூ 25 முன்னிலை வியங்கோள் வினையெஞ்சு கிளவி
இன்மை செப்பல் வேறென் கிளவி
செய்ம்மன செய்யும் செய்த என்னும்
அம்முறை நின்ற ஆயென் கிளவியும்
திரிபு வேறுபடூஉம் செய்திய வாகி
இருதிணைச் சொற்குமோர் அன்ன உரிமைய

நிறுத்த முறையானே இருதிணைக்கும் உரிய வினை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேற்சொல்லப்பட்டவற்றுள் முன்னிலை வினை முதலாக எடுத்து ஓதப்பட்ட எண்வகைச் சொல்லும் பிரிந்து பொருள் வேறுபடூஉம் செய்கையவாகிய இருதிணைச் சொற்கும் ஒத்த உரிமையை உடைய என்றவாறு.

உதாரணம் மேற்காட்டுதும்.

சூ 26 அவற்றுள்,
முன்னிலைக் கிளவி
இ ஐ ஆயென வரூஉம் மூன்றும்
ஒப்பத் தோன்றும் ஒருவர்க்கும் ஒன்றற்கும்

முன்னிலை வினைச்சொல் ஒருமை உணர்த்துமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேற்சொல்லப்பட்டவற்றுள் முன்னிலைக் கிளவிக்கண் இ, ஐ, ஆய் என்று வரும். ஈற்றினை உடைய மூன்று சொல்லும் உயர்திணை ஆண்பாற்கும், பெண்பாற்கும் அஃறிணை ஒன்றன்பாற்கும் ஒத்த இயல்பினவாகித் தோன்றும் என்றவாறு.

முன்னிலை வினை என்னுது, முன்னிலை எனப் பொதுப்பட ஓதினவதனுல், அச்சொல் இருவகைப்படும். முன் நின்ருன் தொழில் உணர்த்துவனவும், அவனைத் தொழிற்படுத்தற்கு ஏவல் குறித்து வருவனவும் என.

உதாரணம் :- உண்டி, உண்கிற்றீ, உண்டனை, உண்ணுநின்றனை, உண்குவை, உண்ணப, உண்டாய், உண்ணுநின்ருய், உண்பாய். உண்ணுய், கருத்தி, கரியை, கரியாய் என்பன முன்னின்ருன் தொழில் உணர்த்தின. இவற்றுள் ஆய் என்பது, மறையினும் ஏவலினும் தொழிலினும் வரும்.

உண்டி என்பது தொழிலினும் ஏவலினும் வரும். பிறவுமன்ன. அஃதேல், நட, வா, எறி, அறி, ஈ, கொடு, தா, ஏ, வை, போ, கௌ எனவும் செல் கொள், உண், தின், கூட்டு எனவும் உயரீறும் ஒற்றீருமாகிய, பலவகையான் வருவன எல்லாம் ஓதாது முன்னிலைச்சொல் மூன்றென்றது என்னை எனின் அவை எல்லாம் ஆய் என்னும் உருபால் குறைந்து நின்றன. அன்னவாதல், 1 "செய்யாவென்னும் முன்னிலை வினைச்சொல், செய்யென் கிளவி ஆகிடனுடைத்தே" என்பதனுள் கண்டு கொள்க

சூ 27 *இர் ஈர் மின் என வரூஉம் மூன்றும்*
*பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினும்*
*சொல்லோர் அனைய என்மனார் புலவர்*

முன்னிலை வினைச்சொல்லுள் பன்மை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- இர், ஈர், மின் என்று சொவ்லப்பட்ட மூன்று ஈற்று வினைச்சொல்லும் உயர்திணைப் பன்மைக்கண்ணும் அஃறிணைப் பன்மைக்கண்ணும் சொல் நோக்கு ஒக்கும் என்றவாறு.

உதாரணம் :- உண்டனிர், உண்ணாநின்றனீர், உண்பிர், உண்டீர். உண்ணாநின்றீர், உண்பீர், உண்மின், உண்ணாநின்மின் எனவரும்.

இவை உணர்த்துமாறு என்னையெனின் இவ்வினைக்குப் பெயராயிற்று என்பனவற்றிற்கு 2 'இன்னபெயரே இவையெனல் வேண்டின் முன்னம் சேர்த்தி முறையின் உணர்தல்' என விதித்தாராகலான், ஆண்டை விதியுமேற்று ஈண்டும் சொல்லுவான் குறிப்பின் தொடரவும் பட்டு...... உணர்ந்து கொள்க.

உதாரணம் :- உண்டாயோ மகனே, மகளே என்றவழி உயர்திணை உணரப்பட்டது. உண்டாயோ குயிலே என்றவழி அஃறிணை உணரப்பட்டது. உண்டீரோ, மக்காள் என்புழி, ஆண்பன்மை, பெண்பன்மை உணரவேண்டின் அதனோடு புணர்ந்த சொல்(லான்) உணர்க.

சூ 28 *எஞ்சிய கிளவி இடத்தொடு சிவணி*
*ஐம்பாற்கும் உரிய தோன்றலாறே*

முன்னிலை ஒழிந்த சொற்கள் பால் உணர்த்துமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

1. எச் 61 2. பெயரி 37

உரை :- மேற்சொல்லப்பட்ட முன்னிலை ஒழிந்த சொற்கள் மூன்றிடத்தோடும் கூடி ஐந்துபாற்கும் உரிய. தோன்று நெறிக்கண் என்றவாறு.

அவற்றுள் சிறப்புவிதியுடைய வியங்கோற்கும், வினையெச்சத்திற்கும் செய்யும். செய்த என்னும் சொற்கும் உதாரணம் தத்தம் சிறப்புச் சூத்திரத்துள் காட்டுதும். ஏனைய ஈண்டுக் காட்டப்படும்.

உதாரணம் :- இன்மை செப்பல் என்பது இல்லை என்னும் சொல். அது யானில்லை, யாமில்லை, நீயில்லை, நீரில்லை, அவனில்லை, அவளில்லை, அவரில்லை, அதுவில்லை, அவையில்லை எனவரும். வேறென்கிளவியாவது வேறென்னும் சொல். அது, யான் வேறு, யாம் வேறு, நீ வேறு, நீர் வேறு, அவன வேறு, அவள் வேறு. அது வேறு, அவை வேறு, அவர் வேறு எனவரும் வந்தது கண்டு வராதது முடித்தல் என்பதனால் கூட்டு என்பதூஉம், ஆம் என்பதூஉம் கொள்க

யான் கூட்டு, நீ கூட்டு, யானும், நீயாம் என மூன்றிடத்துக்கண்ணும் ஒட்டுக. செய்மன என்பது, யான் செய்மன, நீ செய்மன, அவன் செய்மன, என எல்லாப் பாலோடும் ஒட்டுக இது இக்காலத்துச் செய்வது, செய்வன, செய்பவை, செய்யுமவை என வழங்கும் போலும்.

சூ 29 *அவற்றுள்,*
*முன்னிலை தன்மை ஆயீரிடத்தொடு*
*மன்னுதாகும் வியங்கோட் கிளவி*

எய்தியது ஒரு மருங்கு விலக்குதலை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேற்சொல்லப்பட்டவற்றுள் வியங்கோள் சொல் முன்னிலையும் தன்மையுமாகிய இடத்து நிலைபெறு, என்றவாறு.

எனவே, படர்க்கை ஐந்து பாற்கண்ணும் வரும் என்றவாறும். வியங்கோள் என்பது யாதோ எனின் செய்க என்னும் பொருட்கண்ணும் தவிர்க என்னும் பொருட்கண்ணும் வேண்டிக் கோடற் பொருட்கண்ணும் வருவது.

அஃதாவது, வாழ், உண், தவிர் என்னும் ஏவல் குறித்த சொற்கள். தன்மைப் பெயர்க்கண்ணும் படர்க்கைப் பெயர்க்கண்ணும் ஏலாது,

முன்னிலை ஒருமைப் பெயர்க்கண், நீ வாழ், நீயுண், நீ தவிர், என ஏற்றலின், ஆண்டுப் பால் உணர்த்தும் சொல்லொடு ஒரு நிகரனவாகி, முன்னிலை வினையுள் அடங்கின. அப்பொருட்கண் தன்மை கூறும் யான் வாழ்வல், உண்பல், தவிர் வல் எனக் கூறவேண்டலின், அவை தன்மை வினையுள் அடங்கின.

இனிப் படர்க்கைக்கண் வருங்கால் அவன் வாழ்க, அவள் வாழ்க, அவர் வாழ்க, அது வாழ்க, அவை, வாழ்க, என ஐந்து பாற்கும் உரித்தாகி வந்தவாறு கண்டு கொள்க.

நீ வாழ்க, உண்க எனவும் வருமாலெனின், அவை அக்கரகம் பெருக்காலும் பொருள் இனிது விளக்குதலின் அவ்வாறு வருவன மருஉ வழக்கென்று கொள்க. 'கடாவுக பாகநின் கால்வல் நெடுந்தேர்' என செய்யுளகத்து வந்ததால் எனின், நீ கடாவுக என வாராது, பாகா கடாவுக என வருதலின் அது, படர்க்கைப் பெயர் விளியேற்றவழி வந்ததென்க.

1 ''என்முதற் பிழைத்தது கெடுக என்னுயுள்''

எனத் தன்மைக்கண் வந்ததால் எனின், ஆண்டுக் கெடுக எனப்பட்டது. ஆயுளாதலின் அதன்மேல் வந்ததென்க. இனி, அவ்வியங்கோட் பொருட்கிளவியாவது ஈறு திரிந்து வந்து அப்பொருள் படுதலும் கொள்க.

'' 2 வாழிய என்னும் செய்யென் கிளவி—

இறுதி யகரம் கெடுதலும் உரித்தே'' என்றமையான் வாழ்க என்பது, வாழி, வாழிய, வாழியர் எனவும்,

2 'செப்பும் வினாவும் வழா அலோம்பல்' என்றமையான் ஓம்புக என்பது, அல் ஈருகி வருதலும் கொள்க.

3 'மகனெனல் மக்கட்பதடி எனல்' என்றமையான் உடம்பபட்டலும், மறையினும் அல்லீருகி வருதலும் கொள்க.

4 'ஓதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினையா அது மென்னுவர்' என்பது பல்லோர் படர்க்கை ஆதலின் வேண்டும் என்னும் முற்றுச்சொல் கொண்டு முடியாமையின் ஆக்கம் கருதுவார் இவ்வாறு செய்தல் வேண்டுமென வேண்டிக் கோடற் பொருட்கண் வியங்கோள் ஈறு திரிந்தது.

1. சிலப். வழக்-77 2. எழுத். உயிர் மெய்-9 3. கிளவி-13 4. குறள்-20:6

1 'திசைதிசை தேனார்க்கும் திருமருத முன்றுறை
வசைதீர்ந்த வென்னலம் வாடுவது அருளுவார்
நசைகொண்டு தம்நிழல் சேர்ந்தாரைத் தாங்கித்தம்
இசைபரந் துலகேத்த ஏதில்நாட் டுறைபவர்'

என்றவழி, ஏதினாட்டுறைபவர் அருளுவாராக என வேண்டிக் கோடற் பொருண்மைக்கண் ஈறு திரிந்தது. பிறவுமன்ன.

சூ 30 பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்றும் நிகழும் காலத்து
செய்யு மென்னும் கிளவியொடு கொள்ளா

இதுவும் எய்தியது ஒருமருங்கு மறுத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- பலரை உணர்த்தும் படர்க்கையும் முன்னிலையும் தன்மையுமாகிய மூன்றிடமும் நிகழ்காலம் குறித்த செய்யும் என்னும் கிளவியொடு பொருந்தா என்றவாறு.

ஈண்டும் இவ்வாறோதி, முன்னும் 2 'அவ்வறு பொருட்கும் ஓரன்ன உரிமைய-செய்யும் செய்த என்னும் சொல்லே, எனவும் ஓதினமையால், செய்யும் என்பது முற்றம், பெயரெச்சமும் என இருவகைப்படும் என்று கொள்க.

அது முற்றுயுழித் தன்மையினும், முன்னிலையினும் உயர்திணைப் படர்க்கைப் பன்மையினும் வாராது, ஏனைப்பாலின கண்ணே வரும் என்றவாறும், அவனுண்ணும், அவளுண்ணும், அது உண்ணும், அவை உண்ணும், என வரும்.

ஈண்டு நிகழ்காலம் குறித்த தென்னையெனின் எதிர்காலம் குறித்து வராதோ எனின் எதிர்காலத்துக்கண் வருவது கால மயக்கமாகக் கொள்க. முற்றுச் சொல் சேரக் கூறுகின்றாகலின், இச்சூத்திரம் ஈண்டோதப்பட்டது.

சூ 31 செய்து செய்யூச் செய்பு செய்தெனச்
செய்யியர் செய்யிய செயின்செயச் செயற்கென
அவ்வகை ஒன்பதும் வினையெஞ்சு கிளவி

வினையெச்ச மரபாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

1. கலி பாலை-26 2. வினையியல்-37

உரை :- செய்து என்பது முதலாகச் செயற்கு என்பது ஈறாக ஓதப்பட்ட ஒன்பது வாய்பாடும் வினையெச்சச் சொல்லாம்.

வினையெச்சமாவது, மற்றொரு வினைச்சொல்லோடல்லது முற்றுப்பெறாது நிற்கும். வினைச்சொல்லாவது பால் உணர்த்தாது காலம் காட்டி நிற்கும். செய்து என்பது இறந்தகாலம் காட்டும்.

செய்யூ என்பது இறந்தகாலமும், நிகழ்காலமும் காட்டும். * 'செய்யாவென்னும் வினையெஞ்சு கிளவியும்' என எழுத்ததிகாரத்து ஓதுதலின், அவ்வாய்பாடும் இப்பொருட்டாகி வருதலின், அதுவும் கொள்க.

செப்பு என்பது மூன்றுகாலமும் காட்டும் செய்தென என்பது இறந்த காலப் பொருட்டாயினும், வினாவு குறித்தலானும் திரிந்து முடிதலானும், பொருள்வேறுபாடு உடைத்தாகலான் வேறு ஓதப்பட்டது. செய்யியர் என்பது எதிர் காலம் காட்டும். செய்யிய என்பது வாய்பாடு வேற்றுமை உடைத்தாகலான் பொருள் நோக்காது சொல் நோக்கிக் கூறப்பட்டது செயின் என்பது எதிர்காலம் பற்றிவரினும் பொருள் வேறுபாடு உடைத்தாகலான் வேறோதப்பட்டது.

செயவென்பது மூன்று காலத்திற்கும் பொதுவாகிப் பொருள் வேறுபாடு உடைத்து. செயற்கு என்பது எதிர்கால வாய்பாட்டு வேற்றுமை குறித்து ஓதப்பட்டது. உதாரணம் வருகின்ற சூத்திரங்களுட் காட்டுதும்.

ஆ 32 *பின்முன் கால்கடை வழியிடத் தென்னும்*
*அன்ன மரபிற் காலம் கண்ணிய*
*என்ன கிளவியும் அவற்றியல் பினவே*

இதுவும் வினையெச்ச வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- பின் முதலாக ஓதப்பட்டனவும் அத்தன்மையாகிய மரபினால் காலம் குறித்து வரும் எல்லாச் சொல்லும் வினையெச்ச இயல்பின என்றவாறு.

எனவே, மேற்சொல்லப்பட்டவற்றோடு ஒரு நீர்மைய அல்ல

* எழுத் உயிர் மெய்-20

என்பது பெறப்பட்டது. அன்னமரபிற் கொள்ளப்படுவன, ஆல், பான், உம், இனி, அணி என வருவனவும் பிறவும். இவற்றிற்கு உதாரணம் முன்னர்க் காட்டுதும்.

சூ 33 *அவற்றுள்,*
*முதனிலை மூன்றும் வினைமுதல் முடிபின*

நிறுத்த முறையானே முந்துற்ற மூன்றிற்கும் முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேற்சொல்லப்பட்டவற்றுள் முந்துற்ற மூன்றும் அவ்வினைக்குக் கருத்தாவாகிய பொருளின் வினையை முடிபாக உடைய என்றவாறு.

உதாரணம் :- உண்டு வந்தான், இது செய்தென் எச்சம் 1 'படுமகன் கிடக்கை காணூஉ—ஈன்ற ஞான்றினும் பெரிதுவந்தனளே' இது இறந்தகாலம் குறித்த செய்யூ என்னும் வினையெச்சம்.

'நிலம்புடையூஉ வெழுதரும் வலம்படு குஞ்சரம்'' இது நிகழ்காலம் குறித்த செய்யூ என்னும் வினையெச்சம்.

2 ''வானிடு வில்லின் வரவறியா வாய்மையால்'' இது செய்யா என்னும் வினையெச்சம்.

3 ''புலராப் பச்சிலையிடையிடுபு தொடுத்த'' என்பது, இறந்தகாலம் குறித்த செய்பு என்னும் வினையெச்சம்.

4 ''வாடுபு வனப்போடி வணங்கிறை வளையூர'' என்பது, நிகழ்காலம் குறித்த செய்பு என்னும் வினையெச்சம். உண்பு வந்தான், இது எதிர்காலம் குறித்த செய்பு என்னும் வினையெச்சம். மூன்றிடத்தைந்து பாலோடும் ஒட்டிக்கொள்க.

சூ 34 *அம்முக் கிளவியும் சினைவினை தோன்றிச்*
*சினையொடு முடியா முதலொடு முடியினும்*
*வினையோ ரனைய என்மனார் புலவர்*

எய்தியதன்மேல் சிறப்புவிதி வகுத்தலை உணர்த்துதல் நுதலிற்று. வழுவமைதியுமாம்.

1. புறம் 278 2. நாலடி கடவுள் வாழ்த்து 3. புறம் 33 4. கலி. 16

உரை :- மேற்சொல்லப்பட்ட மூன்று சொல்லும் சினைவினை-யாகித் தோன்றி, அச்சினைவினையோடு முடியாது, முதல்வினையோடு முடியினும் அச்சினை வினையான் முடிந்ததனோடு ஒக்கும் என்றவாறு

உதாரணம் :- கையிற்று வீழ்ந்தது, கையிறுஉ வீழ்ந்தது கையிறுபு வீழ்ந்தது. எனற்பாலன, கையிற்றுவீழ்ந்தான், கையிறூஉவீழ்ந்-தான், கையிறுபு வீழ்ந்தான் என வீழப்பட்டது கையாயினும் அதனோடு முடியாது அதன் முதல்வினையோடு முடியினும் குற்றமில என்றவாறு.

உய்த்துணர வைத்தல் என்னும் தந்திர உத்தியால், வினை-யெச்சத்திற்கு முடிபாகி வரும் சினைவினை (முதலோடு) முடிதலையன்றித் தனி வரும் சினைவினையும் முதலோடும் முடியுமென்று கொள்க. கையிற்றான், கண் கெட்டான் எனவரும்.

*சூ 35 ஏனை எச்சம் வினைமுதலானும்*
*ஆன்வந் தியையும் வினைநிலை யானும்*
*தாமியல் மருங்கின் முடியுமென்ப*

ஏனை எச்சங்கட்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- வினை எச்சங்களுள் முந்துற்ற மூன்றும் அல்லாதன வினைமுதல் வினையானும், அவ்விடத்துப் பொருந்தும் பிறவினையானும் தாம் நடக்கும் மருங்கினான் முடியும் என்றவாறு.

உதாரணம் :- மழை பெய்தெனப் புகழ் பெற்றது, மழை பெய்யியர் எழுந்தது, மழை பெய்ய எழுந்தது, மழை பெய்யிற் புகழ் பெறும். மழை பெய்யப் புகழ் பெற்றது என்பது இறந்தகால

''வாழச் செய்த நல்வினையல்லா, தாழும் காலைப்புணை பிறிதில்லை''

இது வாழ நிற்க என நிகழ்காலம் குறித்தது மழை பெய்ய எழுந்தது, எதிர்காலம் மழை பெயற்தெழுந்து இவை வினைமுதல் வினையான் முடிந்தன.

மழை பெய்தென மரம் குழைத்தது மழை பெய்யியர் மாதவர் அருளினர், மழை பெய்யிற்குளம் நிறையும் மழை பெய்யக் குளம் நிறைந்தது

இது இறந்தகாலம். மழை பெய்யவந்தான் இது நிகழும் காலம். மழை பெய்யப் பலி கொடுத்தும், இது எதிர்காலம், மழை பெயற்கு அறம் செய்தும். இவை பிறவினையான முடிந்தன. தானுண்டபின் வந்தான், தான் உண்ணுமுன் வந்தான், தான் உண்டக்கால் வரும். தான் உண்டக்கடைவரும். இஃது இறுதி என்னும் காலம் குறித்து நின்றது. தான உண்டவழி வரும். இதுவும் அது. தானுண்டவிடத்து வரும். இஃது உண்டக்கால் என்பது குறித்தது. இவை தலைவினை. பிறன் உண்டபின் வரும், பிறன் உண்ணுமுன் வரும், பிறன் உண்டக்கால் வரும், பிறன் உண்டக்கடை வரும், பிறன் உண்டவழி வரும், பிறன உண்டவிடத்து வரும், இவை பிறவினை. இவை பெயராதற்கும் ஏற்று நிற்றலின், அந்நிலையின்றித் தொழில் நிகழும் காலத்தைக் குறித்துவரின் வினையெச்சமாம் என்பதனால் காலம் கண்ணிய என்று ஓதினர்.

1 "அற்றால் அளவறிந்துண்க"

2 "அலைப்பான் பிறிதுயிரை ஆக்கலும் குற்றம்"

3 "நனவிற் புணர்ச்சி நடக்கலுமாங்கே"

4 "கூறாமல் குறித்ததன்மேல் செல்லும்"

5 'கூறாமை நோக்கிக் குறிப்பறிவான் செவ்வன் திரிகிற்பான்'

6 "விருந்தின்றி உண்ட பகலும்"

7 "நாளன்று போகிப் புள்ளிடைதட்ப,
இனிக்கொண்டான் அணி வந்தான"

பிறவும் இவ்வாறு கொள்க

சூ 36 *பன்முறையானும் வினையெஞ்சு கிளவி*
*சொன்முறை முடியா தடுக்குந வரினும்*
*முன்னது முடிய முடியுமன் பொருளே*

வினையெச்சம் அடுக்கி வருவழி வருவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- வினையெச்சச் சொல்தாம் சொற்கள் தோறும் முற்றுப் பெறாது பலவாற்றானும் அடுக்கிவரினும் இறுதி நின்றது முடிய ஏனையவும் பொருள் முடிவு பெற்றனவாம் என்றவாறு.

---

1 குறள்-943 2 நான்மணி-26 3. கலி-குறி-3 4. கலி.[1] 5 குறள்-701 6, திரிகடு-44 7. புறம்-124

உதாரணம் :- உண்டு, தின்று ஓடிவந்தான் உண்டு பருகிக் கூத்திற் புக்கு வந்தான் எனவரும். பிறவுமன்ன.

சூ 37 நிலனும் பொருளும் காலமும் கருவியும்
வினைமுதற் கிளவியும் வினையும் உளப்பட
அவ்வறு பொருட்கும் ஓரன்ன உரிமைய
செய்யும் செய்த என்னும் சொல்லே

செய்யும், செய்த என்னும் சொற்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- நிலப்பெயரும், பொருட்பெயரும், காலப்பெயரும், கருவிப்பெயரும், வினைமுதற்பெயரும், வினைப்பெயருமாகிய அவ்வாறு பெயர்க்கும் ஒத்த உரிமைய. செய்யும், செய்த என்னும் சொற்கள் என்றவாறு.

இவற்றோடு முடியும் இவை பெயரை எச்சமாக உடையவாதலால் பெயரெச்சமெனக் குறியும் பெறும். இவையும் பால்காட்டா என்று உணர்க. இவை 'எஞ்சிய கிளவி இடத்தொடு சிவணி' என்பதின் அடங்காவோ எனின் ஆண்டு வினைமுதல்தானே மூன்றிடத்து ஐந்து பாலுமாகி வரும். இவை அவ்வாறன்றி செயப்படு பொருளோடும், செயலோடும், கருவியோடும், இடத்தோடும், காலத்தோடும், வினைமுதலோடும் ஒத்த இயையினவாகி முற்றுப்பெறுதலின் அடங்காவென்க. உதாரணம் வருகின்ற சூத்திரத்துட் காட்டுதும்.

சூ 38 அவற்றொடு வருவழிச் செய்யும் கிளவி
முதற்கண் வரைந்த மூவீற்றும் உரித்தே

எய்தியதன் மேல் சிறப்புவிதி வகுத்தலை உணர்த்துதல் நுதலிற்று

உரை :- செய்யும் எனனும் சொல் நிலம் முதலாகிய பொருளொடு வரும்வழி, முற்பட வரையப்பட்ட பலரோர் படர்க்கையும் முன்னிலையும் தன்மையும் ஆகிய மூன்று வேறுபாட்டினும உரித்து என்றவாறு.

உதாரணம் :- நிலம்: உண்ணுமில், உண்டஇல், பொருள்: உண்ணும்சோறு, உண்டசோறு, காலம்: உண்பொழுது.

கருவி—உண்ணும்கலம், உண்டகலம் வினை, உண்ணும்ஊண் உண்டஊண்.

வினைமுதல் மூன்றிடத்து ஐந்து பாலுமாகி, ஒன்பது வகைப்படும். உண்ணும் யான், யாம், நீ, நீஇர், அவன், அவள், அவர், அது, அவை என வரும். செய்த என்பதும் இவ்வாறே ஒட்டிக் கொள்க.

வந்தது கண்டு வராதது முடித்தல் என்பதனால் கருவி என்பதனால் மூன்றாவதற்கு ஓதிய காரணமும், ஏதுவும் கொள்க.

'நிலம் பூத்த மலர்மிசை' என்றவழி நிலம்பொலிவு பெற்ற மலர், என்று பொலிதற்கு ஏதுவின்கண் வந்தது.

யானை கொடுக்கும் பார்ப்பான், எனவும் ஒலித்த கூலி எனவும் நான்காவதற்கு ஓதிய கொள்வதனோடும் பயனோடும் வருமாலெனின், கொடுக்கும் பார்ப்பான் என்றவழிக் கொடைத் தொழில், கொடைத் தொழில் பார்ப்பான் மேல் ஏறுதலின் யானை கொடுக்கக் கொள்ளும் பார்ப்பான் எனப் பொருள் உரைக்க வேண்டுதலின் அதுவினை முதலாம்.

ஒலித்தகூலி என்ற வழி கூலியாவது பயனாதலின், அதற்குப் பொருள் உரைக்கும் காலை ஒலித்தற்குக் கூலி என உரைக்க வேண்டுதலின் ஆண்டு அதற் கென்பது, புலப்படாது, நின்றதல்லது, கூலி என்பதனோடு பொருந்தமின்றே..................யிற்றை மருஉ என்று கொள்ளப்படும்.

அஃதற்றாக, வினையெச்சம், பெயரெச்சம், என்பன. தனிமொழி ஆதலின்றி வினையோடும் பெயரோடும் முடிதலான், அவற்றைத் தனிமொழி கூறுகின்றவழி கூறல் வேண்டாம் எனின், ஈண்டுச் செய்து, செய்யூ எனவும் செய்யும், செய்த எனவும், தனிமொழி இலக்கணமே கூறிற்றென்க. அன்றியும் முடிக்கும் சொல்லும் ஈண்டு ஓதப்பட்டதாயினும் உண்டு வந்தான் என்றவழி சாத்தன் என்று ஒரு பெயரோடல்லது முற்றுப் பெருமையானும், உண்டசாத்தன் என்றவழி வந்தான் என ஒருவினையோடல்லது முற்றுப் பெருமையானும் இவை தனிமொழிப் பகுதியெனின் அல்லது வாக்கியமாகி முற்றி நிற்கும் தொடர்மொழியாகா என்க.

சூ 39 *பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியும்*
*எதிர்மறுத்து மொழியினும் பொருள்நிலை*
*திரியா*

இருவகை எச்சத்திற்கும் உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- பெயரெச்ச வினைச்சொல்லும் வினையெச்ச வினைச் சொல்லும் எதிர்மறுத்து மொழியினும் தத்தம் பொருள் நிலைமையில் திரியா என்றவாறு.

உதாரணம் :- உண்ணாச் சாத்தன், உண்ணாத சாத்தன், எறியாவேல் என்பன செய்யும் செய்தும் என்னும் இரண்டினும் வரும். பிறவு மன்ன. உண்ணாது வந்தான், மழை பெய்யாமையின் மரம் வந்தன, இவை வினையெச்சமறை. பிறவுமன்ன. பெயரெஞ்சு கிளவியும் எதிர்மறுத்து வரும் என்றோதி முன் எதிர்மறை ஓதாதது என்னை எனின் பெயரெச்சமும் வினையெச்சமும் ஓதுகின்றுழி உட்பட்ட சொல்லான் ஓதுதலின் எதிர்மறை ஓதல்வேண்ட சொற்கீற்றெழுத்தோதின அவைதாமே, மறுத்த வாய்பாட்டிற்கும் ஈருதலின் ஓதல்வேண்டாவாயின. அஃதற்றுதல் அ, ஆ, வ என்னும் சூத்திரத்தானும் அறிக.

சூ 40 தத்தம் எச்சமொடு சிவணும் குறிப்பின்
எச்சொல் லாயினும் இடைநிலை வரையார்

இதுவும் இருவகை எச்சத்திற்கும் உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- பெயரெச்சமும் வினையெச்சமும் தம்மை முடிக்கும் சொல்லோடு சிவணும் குறிப்பினை உடைய யாதானும் ஒரு சொல்லாயினும் இடை நிற்றலை நீக்கார் ஆசிரியர் என்றவாறு.

உதாரணம் கொல்லும் காட்டுள் யானை, கொன்ற காட்டுள் யானை, இவை பெயரெச்ச இடைக்கிடப்பு இவற்றுள் இடைக்கிடந்த சொல் யானை என்பதனோடு சிவணுதலின் அமைக்கப்பட்டது. பிறவுமன்ன. உழுது ஏரொடு வந்தான். உழ ஏரொடு வந்தான்—இவை வினையெச்ச இடைக்கிடப்பு. இவற்றுள் இடைக்கிடந்த சொல் முடிக்கும் சொல்லொடு சிவணுதல் அமைதியாயிற்று. பிறவுமன்ன. இனிச் சிவணாதன :

உதாரணம் :- உண்ட சாத்தன், தன் கை என்பது உண்ட என்பதற்கு தன் கையை முடிபாகக் குறித்தானாயின் சிவணாதாயிற்று. வினை-

யெச்சத்துட் சிறுணுதன வந்தவழிக் கண்டு கொள்க.

சூ 41 அவற்றுள்,
செய்யு மென்னும் பெயரெஞ்சு கிளவிக்கும்
மெய்யொடுங் கெடுமேஈற்றுமிசை யுகரம்
அவ்விட மறிதல் என்மனார் புலவர்

செய்யும் எனும் சொல் திரியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேற்சொல்லப்பட்டவற்றுள், செய்யும் எனும் பெயரெஞ்சு கிளவிக்கும் உம்மையால் செய்யும் என்னும் முற்றுச்சொற்கும் ஈற்றுமிசை உகரம் மெய்யோடும் கெடும். அது கெடுமிடம் அறிந்துகொள்க.

உதாரணம் :- வாவும் புரவி ஈற்றுச்சொல் எதிர்மறை ஓதாத தென்னை எனின் பெயரெச்சமும் வாய்புரவி வழுதி எனவரும். இது பெயரெச்சம்.

* "அப்பட லூரும் அவனொடு மொழிமே" இது முற்றுச்சொல். மெய்யொடும் கெடும் என்ற உம்மையால் மெய்யொழியவும் கெடும் என்று கொள்க. 'சாரல் நாட என்றேழியும்கலுழ்மே' எனவரும். பிறவுமன்ன.

சூ 41 செய்தென் எச்சத் திறந்த காலம்
எய்திட னுடைத்தே வாராக் காலம்

ஒரு சார் வினையெச்சத்திற்கு வரும காலமரபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- செய்தென் எச்சத்துக்கண் வரும் இறந்தகாலம் எதிர்காலத்தைப் பொருந்தும் இடனுடைத்து, என்றவாறு.

என்றது இறந்த காலத்தால் கூறப்படும் வினையாது நிகழ்ந்தும் இமைதலன்றி நிகழாத முன்னும் அவ்வாய்பாட்டான் வரப்பெறும் என்றவாறும். நாளை உழுது வருவன் இனித்தவம் செய்து சுவர்க்கம் புகும் எனவரும்.

சூ 43 முந்நிலைக் காலமும் தோன்றும் இயற்கை
எம்முறைச் சொல்லும் நிகழும் காலத்து
மெய்ந்நிலை பொதுச் சொல் கிளத்தல் வேண்டும்

இதுவும் அது.

*குறு-51

உரை: யாதானும் ஒருமுறையினையுடைய வினைச்சொல்லும் மூன்று காலமும் தோன்றும் இயற்கைக்கண் நிகழும் காலத்துப் பொதுநிலைப் பொதுச் சொல்லால் கிளத்தல் வேண்டும் என்றவாறு.

வினைச்சொல் எல்லாம் காலம் காட்டுதலின், காலம் காட்டப் படாத பொதுப்பட்ட வினையை நிகழ்காலத்துக்கண் எல்லாப்பாற்கும் பொதுவாகி வரும் செய்யும் என்னும் சொல்லால் சொல்லுக என்றவாறாயிற்று. ...... ..................பாருக, அகம்புக்கான் அவனது வாயிற்கண் நின்றானை யாது செய்கின்றான என வினையவழி, அவன் செய்கின்ற உண்டற்காலம் உணராமையின் உண்டான் எனவும் ஆகாது, உண்பான் எனவும் ஆகாது, ஆயிடை—கொள்க.

சூ 44 வாராக் காலத்தும் நிகழும் காலத்தும்
ஓராங்கு வரூஉம் வினைச் சொற் கிளவி
இறந்த காலத்துக் குறிப்பொடு தோன்றல்
விரைந்த பொருள் என்மனார் புலவர்
இதுவுமது.

உரை:- வரும் காலத்தும் நிகழ் காலத்தும் வரும் வினைச் சொல்லாகிய சொல், இறந்த காலத்துக் குறிப்பொடு தோன்றல் விரைந்த பொருள் என்மனார் புலவர் என்றவாறு.

ஒருவனை உண்ணாயோ, போதாயோ என்றவழி உண்ணாதவனும் உண்டேன், போந்தேன் என்னும், உண்கின்றானும் அவ்வாறு சொல்லும். இவ்வாறு விரைவு குறித்து நின்றவாறு கண்டு கொள்க. ஒடும், ஆங்கும் அசைகள்.

சூ 45 மிக்கதன் மருங்கின் வினைச்சொல் சுட்டி
அப்பண்பு குறித்த வினைமுதற் கிளவி
செய்வ தில்வழி நிகழும் காலத்து
மெய்பெறத் தோன்றும் பொருட்டாகும்மே
ஒரு சார் வினைச்சொற்கு உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை:- மிக்கது என்பது ஒன்றின் ஒன்று மிக்கது என்னும் பொருண்மை அதன் மருங்கின் வினைச்சொல் சுட்டலாவது அது பெயராகி நிற்கும்

நிலைமையைச் சுட்டாது. வினையாகி நிற்கும் நிலைமையைச் சுட்டி நிற்றல். அப்பண்பு குறித்த வினைமுதற்கிளவியாவது அப்பொருட்கண் மிகுதலாகித் தொழிலைக் குறியாது, அதன் இயல்பாகிய மிகுதியைக் குறித்த பால் உணரவரும் சொல். செய்வதில்வழி என்பது அப்பால் உணரவரும் சொல்லின்கண் கருத்தாவை உணர்த்தும் ஈற்றெழுத்து இல்வழி என்றவாறு.

நிகழும் காலத்து மெய்பெறத் தோன்றும் பொருட்டாகும் என்பது நிகழும் காலத்து உருபு பெறப் புலப்படும் பொருளை உடைத்து என்றவாறு

ஒரு பொருளின் ஒரு பொருள் மிக்கது என்னும் பொருட்கண் வரும் மிக்கது என்னும் வினைச்சொல்லை குறித்து மிகுந்த பண்புரை வரும் பாலுணர்த்தாக சொல் செய்யும் என்னும் சொல்லினால் வரின், அஃது அப்பொருளை இனிது விளக்கும், மிக்கது என்பது ஒரு காலம் குறித்துவரின், தொழில் குறித்தாம். சுவர்க்கம் மிக்கது என்றவழி எக்காலத்தும் ஒக்குமாதலின் பண்பு குறித்தாம் பூமியிற் சுவர்க்கம் மிகும் என்றதனால் குற்றம் என்னையெனின் அவ்வாறு கூறின் இறந்த காலம் தோன்றாதாம். வந்தது கண்டு வாராதது முடித்தல் என்பதனால் உயர்வு, தாழ்வு, குறைவு என்பனவும் இந்நிலைமைய என்று கொள்க. இச்சூத்திரத்தால் பயன் ஒரு சார் வினைச்சொற்கள் தொழிலிற்கும், பண்பிற்கும் பொதுவாகி நிற்கும் என்பதறிவித்தல்.

சூ 46 இதுசெயல் வேண்டும் என்னும் கிளவி
இருவயின் நிலையும் பொருட்டாகும்மே
தன்பாலானும் பிறன் பாலானும்

இது ஒருவினை இருபொருட்படுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- இதனைச் செயல்வேண்டும் என்னும் வினைச்சொல் இரண்டிடத்தும் நிலைபெற்ற பொருளை உடைத்து, சொல்லுவான் கண்ணும் பிறன் கண்ணும் என்றவாறு.

உதாரணம் ;- நீ உண்ணல் வேண்டும் என்றவழி, நீ உண்பாயாகல் வேண்டும் எனத் தான்வேண்டிக் கோடற் பொருண்மை சொல்லுவான் கண் நிலைபெற்றது. சாத்தன் உண்ணல் வேண்டும் என்றவழி உண்டலைப் பிறன் விரும்பும் எனப் பிறன்கண் நிலைபெற்றது.

சூ 47 வின்புற வரூஉம் விறைவுடை வினைச்சொல்
எதிர் மறுத் துணர்த்துதற் குரிமையுமுடைத்தே
இதுவுமது.

உரை :- வற்புறுத்தற் பொருண்மைக்கண் விறைவுடை வினைச் சொல் எதிர்மறுத்துப் பொருள் உணர்த்துதற்கு உரிமையாகலும் உடைத்து என்றவாறு.

உதாரணம் :- யான் வைதேனே, யான் வைதேனே என்பன விறைப்பொருண்மைப் படுதலன்றி வைகிலேன் என எதிர்மறைப் பொருளும் பட்டவாறு கண்டு கொள்க.

சூ 48 வாராக் காலத்து வினைச்சொற் கிளவி
இறப்பினும் நிகழ்வினும் சிறப்பத் தோன்றும்
இயற்கையும் தெளிவும் கிளக்கும் காலே
காலவழுவமைதி உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- எதிர்காலத்து நிகழும் வினைச்சொல் இறந்த காலத் தானும் நிகழ்காலத்தானும் பொருள் விளங்கத் தோன்றும். ஓர் இயற்கையையும் ஒரு பொருளினது தெளிவையும் கிளக்கும் காலத்து என்றவாறு.

உதாரணம் :- ஆறலை கள்வர் இயங்குவோர் காட்டிடைப் போகலுற்றானை, இவ்விடத்துப் போகுவையாயின் கூறை கோட்படுவை எனற்பாலான், பட்டாய் எனவும் படாநின்றாய் எனவும் கூறும்.

இது இயற்கை சென்றது சென்றது வாழ்நாள், செறுத்துடன் வந்தது வந்தது எனவும் கூற்று வாழ்நாள் செல்லா நின்றது எனவும் கூற்று வரும் எனற்பாலது வந்தது எனவும் நிகழ்காலமும், எதிர்காலமும் இறந்த காலத்தான் வந்தன. வாழ்நாள் செல்லுதலும் கூற்று வருதலும் ஒரு தலையா தலின், இவை தெளிவுபற்றி வந்தன. நிகழ்காலத்தான் வருவன வந்தவழிக் கண்டு கொள்க.

சூ 49 செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியல்மரபே
இது வினைச்சொற்கள் தம்முள் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- செயப்படுபொருளைச் செய்யப் பட்டதெனக் கூறுது கருத்தாவைக் கூறுமாறு போலத் தொழிற்படச் சொல்லுதலும் வழக்கியல் மரபு என்றவாறு. மருஉ வழக்கு என்றவாறு.

உதாரணம் :- சோறடப்பட்டது, திண்ணை மெழுகப்பட்டது எனற்பாலன சோறட்டது, திண்ணை மெழுகிற்று எனவரும். உம்மையால் கருவியைக் கருத்தாவாக்கலும் கொள்க. வெட்டிற்று, சுரிகை குத்திற்று எனவரும்.

சூ 50 *இறப்பே எதிர்வே யாயிரு காலமும்*
*சிறப்பத் தோன்றும் மயங்குமொழிக்கிளவி*

காலமயக்கம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மயங்குதற்குரிய மொழிக்கண் இறந்தகாலமும் எதிர்காலமும் என்று சொல்லப் பட்ட அவ்விரண்டு காலமும் ஒப்பத்தோன்றும் என்றவாறு.

உதாரணம் :- 'உயர்திணை யென்மனார் மக்கட்சுட்டே' என்றவழி, என்றார் என்றற்பாலது என்மனார் என வந்தது பிறவுமன்ன.

சூ 51 *ஏனைக் காலமும் மயங்குதல் வரையார்*

இதுவுமது.

உரை :- இறப்பும் எதிர்வும் தம்முள் மயங்குதலன்றி அவற்றோடு நிகழ்காலமும் மயங்கப்பெறும் என்றவாறு.

உதாரணம் ;- யாம் விளையாடும் கா என்றவழி முன்பு விளையாடுங்கா, இன்று விளையாடுங்கா, நாளைவிளையாடுங்கா என மூன்று காலத்துக் கண்ணும் வந்தவாறு கண்டு கொள்க.

அஃதேல், வினைச் சொற்கள்—முற்றும், பெயரெச்சமும், வினையெச்சமும் என மூவகைப்படும். அவற்றுள் பெயரெச்சம், வினையெச்சம் என்பன இத்தன்மைய என்று எடுத்தோதி முற்றுச்சொல்லாவது இத்தன்மையது என்று ஓதிற்றிலர். அதற்கு இலக்கணம் யாங்குப் பெறுதும் எனின், எச்சவியலுட் பெறுதும். வினைக்கு இன்றியமையாத முற்றினை ஒழிபியல் கூறுகின்றுழிக்

கூறிய அதனால் பெற்றதென்னை எனின், அஃது எமக்குப் புலனாயிற்றன்று. அஃ-தேல் வினையிலக்கணம் அறிந்தேனாகுங்காலம் முற்றிலக்கணமும் அறிதல் வேண்டும் அன்றே. அதனை ஆண்டுக் கூறியவாறு ஈண்டுரைத்தல் வேண்டுக் எனின், உரைக்குமாறு :-

சூ 52 *"இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றச்*
*சிறப்புடை மரபின் அம்முக் காலமும்*
*தன்மை முன்னிலை படர்க்கை என்னும்*
*மூவிடத் தான வினையினும் குறிப்பினும்*
*மெய்ம்மை யானும் ஈரிரண் டாகும்*
*அவ்வா றென்ப முற்றியல் மொழியே"*

முற்றுச் சொற்கு இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என் வினைச்சொற்குச் சிறப்புடைத்தாகிய மூன்று காலத்தானும், தன்மை, முன்னிலை, படர்க்கை என்றும் மூன்றிடத்தானும், தொழிலானும், குறிப்பானும், பொருளானும் முற்று இயலும் மொழிவகை நிலைமையான் இருபத்து நான்கு என்றவாறு.

காலம் என்பதன்கண் உருபு தொக்கு நின்றது. இடம் என்பதன்கண் உம் எஞ்சி நின்றது.

அவையாவன : தன்மைக்கண் எட்டும், முன்னிலைக்கண் எட்டும், படர்க்கைக்கண் எட்டும் ஒருமையும் பன்மையும் எனத் தமிழ்நடை இருவகைப்படுதலின் தன்மைக்கண் வரும் எட்டும், ஒருமை உணர்த்துவன நான்கும் என இருவகைப்படும்.

உதாரணம் :- உண்டேன், உண்ணா நின்றேன், உண்பேன், கரியேன், இவை மூன்று காலமும் வினைக்குறிப்பும் பற்றி ஒருமைக்கண் வந்தன. உண்டனம், உண்ணா நின்றனம், உண்குவம், கரியம் என்பன அவ்வாறு பன்மைப் பொருண்மைக்கண் வந்தன. முன்னிலைக் கண் எட்டும் இருவகைப்படும்.

உண்டனை, உண்ணா நின்றனை, உண்குவை, கரியை இவை ஒருமைபற்றி வந்னெ. உண்டனிர், உண்ணா நின்றனிர், உண்குவீர், கரியீர், இவை நான்கும் பன்மைபற்றி வந்தன. படர்க்கைக்கண் எட்டும் இருவகைப்படும்

அவற்றுள் ஒருவனை உணர்த்துவதும் ஒருத்தியை உணர்த்துவதும் ஒன்றனை உணர்த்துவதும் ஒருமை என அடங்கும்.

பலரை உணர்த்துவதும், பலவற்றை உணர்த்துவதும் பன்மை என அடங்கும். உண்டனன் உண்ணா நின்றனன், உண்பன், கரியன் எனவும் உண்டனள், உண்ணா நின்றனள், உண்பல், கரியள், எனவும் உண்டது, உண்ணா நின்றது. உண்பது, கரியது எனவும் இவை பொருண் முகத்தான் ஒருமையாதலின் மூன்று காலமும் வினைக்குறிப்பும் பற்றி நான்காய் அடங்கின.

உண்டனர், உண்ணா நின்றனர், உண்குவர், கரியர் எனவும், உண்ட, உண்ணா நின்ற உண்ப, கரிய எனவும் இவை பொருள் முகத்தால் பன்மையின் அடங்கின. வினையெச்சமும், பெயரெச்சமும் தொழிலும் காலமும் உணர்த்தினல்லது, இடமும் பாலும் உணர்த்தா என்பதூஉம், முற்றுச்சொல் தொழிலுங் காலமும் இடமும் பாலும் உணர்த்தும் என்பதூஉம் கண்டுகொள்க

*சூ 53 எவ்வயின் வினையும் அவ்வயின் நிலையும்*

மேலதற்கு ஓர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- தொழிலும் காலமும் இடமும் பாலும் உணரவரும் வினைச்சொல் அன்றி, மூன்றிடத்திற்கும் பொதுவாகி வரும் வினைச்சொல்லும் முற்றும் நிலைமையைப் பெறும் என்றவாறு.

அவையாவன : வியங்கோள், இன்மை செப்பல், வேறென் கிளவி, செய்ம்மன, பெயரெச்சமல்லாத செய்யும் என்னும் சொல்.

*சூ 54 அவைதாம்,*
*தத்தம் கிளவி அடுக்குன வரினும்*
*எத்திறத்தானும் பெயர்முடி பினவே*

முற்றுச்சொல் தொடர்ந்தியலுமாறு உணர்த்துதல் நுதலிற்று

உரை :- மேற்சொல்லப்பட்ட முற்றுச் சொற்களுள் தத்தமக்கு ஏற்ற வினைச்சொல் அடுக்கிவரினும், உம்மையான் அடுக்காது வரினும் எவ்வழியானும் பெயர் முடிபினை உடைய என்றவாறு. என்பது, முற்றுச் சொல் பெயரோடல்லது தொடரவும் படாது என்றவாறாயிற்று.

உதாரணம் :- உண்டான் சாத்தன், நல்லன் அரசன், இவை தனிவந்தன. உண்டான், தின்றான், ஓடினான், பாடினான் சாத்தன், நல்லன் அறிவுடையன், செவ்வியன், சான்றோர் மகன்; இவை வினையும் வினைக்குறிப்பும் அடுக்கி வந்தன.

தத்தம்கிளவி என்றதனால் ஒரு காலத்திற்கு ஏற்றவினையே அடுக்குவது என்று கொள்க. எத்திறத்தானும் என்றமையால் சாத்தன் உண்டான், தின்றான், ஓடினான், அரசனென்றி உடையன் செவ்வியன் எனவும் வரும்

இவை எழுவாயும் பயனிலையும் ஆகாவோ எனின் எழுவாய்த் தொடரொடு முற்றுத் தொடரிடை வேறுபாடின்மை வேற்றுமை ஒத்தினுட் கூறப் பட்டது. அன்றியும் பெயர் முந்துற்றதனை எழுவாய்த்தொடர் என்றும் வினைமுந்துற்றதனை முற்றுத் தொடர் என்றும் வழங்கினும் அமையும். இவை மூன்று சூத்திரமும் ஈண்டைத் தொடர்பு பட்டுக் கிடந்த இதனை உரை எழுதுவார், பிரிநிலை வினை என்னும் சூத்திரத்துட் சொல்லப்பட்ட பெயரெச்ச வினையெச்சம் என்பவற்றை ஈண்டு ஓதப்பட்ட பெயரெச்ச வினையெச்சமாகக் கருதி ஆண்டுச் சேர வைத்தார் என்பாரும் உளர்.

அற்றாக வினைச்சொல்-பெயரெச்சம் வினையெச்சம் முற்றெனமூவகைப்பட்டதாயின் வினையெச்சமும் முற்றும் அடுக்கிவருமாறு கூறாதது என்னை யெனின், பெயரெச்ச அடுக்கு வினையெச்சம் போல் முன்னர் முடிய முடியாமை-யின் கூறாராயினார். சிறுபான்மை வருவன செய்யுள் மருங்கினும் என்னும் அதிகாரப் புறனடையால் கொள்ளப்படும்.

வினையியல் முடிந்தது.

இவ்வோத்தினுள் சூத்திரம் உள்பட உரையினதளவு கிரந்தவகையான் நானூற்றறுபது.

# (7) இடையியல்

சூ 1 இடையெனப் படுவ பெயரொடும் வினையொடும்
நடைபெற் றியலும் தமக்கியல் பிலவே

இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின் இடைச்சொல் ஒத்து என்னும் பெயர்த்து இடைச்சொல் உணர்த்தினமையாற் பெற்ற பெயர். இது பெயரையும் வினையையும் சார்ந்து தோன்றுதலின் அவற்றின் பின் கூறப்பட்டது.

''இடையெனப் படுப......தமக்கியல்பிலவே'' என்பது இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- இடையென்று சொல்லப்படுவன பெயரோடு கூடியும், வினையோடு கூடியும் வழக்குப் பெற்று இயலுயல்லது, தமக்கென வழக்கில என்றவாறு.

என்றது, மேல் அதிகரிக்கப்பட்ட சொல் நான்கினுள், இடைச்சொல்லாவது பெயரும் வினையும் போலத் தனித்தனி பொருள் உணர உச்சரிக்கப்படாது. பெயர் வினைகளைச் சார்ந்து புலப்படும் என்றவாறு

பெயரும் வினையும் இடமாக நின்று பொருள் உணர்த்துதலின் இடைச் சொல்லாயிற்று. மேற்பெயரியலுள்ளும் 'அவற்றுவழி மருங்கிற்றோன்றும் என ஓதி, ஈண்டும் இவ்வாறு கூறுதல், கூறியது கூறலாம். பிற எனின் ஆண்டுத் தோற்றுவாய் செய்தார். ஈண்டு இலக்கணம் கூறினர் என்க பெயரொடும் வினையொடும் நடைபெற்றியல்' என்றதனால் பொருள் உணர்த்தும் வழிப்பெயர்ப் பொருண்மை உணர்த்தியும் வருமதல்லது வேறு பொருள் இலதென்றுமாம்.

சூ 2 அவைதாம்,
புணரியல் நிலையிடைப் பொருள்நிலைக் குதநவும்
வினைசெயல் மருங்கில் காலமொடு வருநவும்
வேற்றுமைப் பொருள்வயின் உருபா குநவும்
அசைநிலைக் கிளவி ஆகிவருநவும்
இசைநிறைக் கிளவி ஆகிவருநவும்

*தத்தம் குறிப்பிற் பொருள்செய் குநவும்*
*ஒப்பில் வழியாற் பொருள்செய் குநவுமென்று*
*அப்பண் பினவே நுவலுங்காலை*

இடைச்சொல் பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை:- ''அவைதாம் புணரியல் நிலையிடைப் பொருள் நிலைக்குதநவும்'' என்பது மேற்சொல்லப்பட்ட இடைச்சொற்கள் தாம், ஒரு சொல் புணர்ந்தியலும் வழி அப்பொருள்நிலைக்கு உதவியாகி வருவனவும் என்றவாறு. பொருள்நிலைக்கு உதவுதலாவது அவ்வழிப் பொருட்கு உரியன இவை வேற்றுமைப் பொருட்கு உரியன, இவையென வருதல்.

அவையாவன, இன்னே, அற்றே, என்பன முதலாயின. அவை சாரியை அன்றே எனின் அவை இடைச்சொல் எனவும் ஒரு குறிபெறும் என்றவாறு. 'வினைசெயல் மருங்கில் காலமொடு வருநவும்' என்றது வினைச் சொல் முடிவு பெறுமிடத்துக் காலம் காட்டும் சொல்லொடு பால்காட்டும் சொல்லும் என்றவாறு.

அவையாவன, உண்டனம், உண்டாம், உண்ணு நின்றனம் உண்கின்றனம், உண்பம், உண்குவம், என்புழி இறந்த காலம் குறித்த குறிப்பொடு நிகழ்காலம் குறித்த நின்று, கின்று என்பனவும் எதிர்காலம் குறித்த பு, கு, என்பனவும் அம், ஆம் எனப்பால்காட்டுவனவும் இவ்வாறு வருவன பிறவும் 'வேற்றுமைப் பொருள்வயின் உருபாகுநவும்' என்பது, அவ்வேற்றுமைப் பொருளிடத்து உருபாகி நிற்கும் சொற்களும் என்றவாறு.

அவையாவன. ஐ ஓடு, கு முதலிய இவையும் இடைச்சொல் எனக்குறிபெற்றன. 'அசைநிலைக்கிளவியாகி வருநவும்' என்பது அசைநிலைக் கிளவி போலப்பிரிந்து நில்லாது ஒரு சொல்லொடு ஒற்றுமைப்பட்டு இசைநிறைத்தற் பொருட்டாகி நிற்பனவும் என்றவாறு.

'தத்தம் குறிப்பிற் பொருள் செய்குநவும்' என்பது, தத்தம் குறிப்பினால் பொருள் உணர்த்துவனவும் என்றவாறு. 'ஒப்பில் வழியாற் பொருள் செய்குநவும்' என்பது குறிப்பினால் வருதலன்றிப் பொருத்தம் இல்லாத

இடத்துப் பொருள் உணர்த்துவனவும் என்றவாறு. 'அப்பண்பினவே நுவலுங்-காலை' என்பது அவ்வியல்பினை உடைய சொல்லுங்காலத்து என்றவாறு.

தத்தம் குறிப்பின் என்பதற்குச் சார்ந்த சொல்லின் குறிப்-பினான் எனவும், ஒப்பில்வழி என்பதனை ஒரு சொல்லோடு பொருத்தமின்றி தனி வந்துழி எனவும் பொருள் உரைப்பினும் அமையும். அஃது அற்றாக, ஒப்பில்வழி என்பதற்கு ஒக்கும் என்னும் சொல் வாராத உவம உருபு எனப் பொருள் உரைப்ப-வால் எனின், * ''ஒப்பினானும் பண்பினானும் என்று அப்பாற் காலம் குறிப்பொடு தோன்றும்'' என்றமையானும் போல, அன்ன, ஏய்ப்ப, உறழ, என்பன சாத்தன் புலி போலும் எனவும் புலிபோலப் பாய்ந்தான் எனவும் புலி போன்ற சாத்தன், புலி போலும் சாத்தன் எனவும் இவ்வாறு பிறவும், முற்றும் வினையெச்சமும், பெயரெச்சமுமாகி, வருதலினானும் அவையெல்லாம் வினைக்குறிப்பென்று கொள்க. அவற்றுள் 'புணரியல் நிலையிடைப் பொருள் நிலைக்குதவுந' எழுத்திகாரத்துக் கூறப்பட்டன. வேற்றுமைப் பொருள்வயின் உருபாகுந வேற்றுமை ஓத்தினுட் கூறப்பட்டன. ஏனை நான்கும் ஈண்டு ஓதப்படுகின்றன.

சூ 3 *அவைதாம்,*
*முன்னும் பின்னும் மொழியடுத்து வருதலும*
*தம்மீறு திரிதலும் பிறிதவண் நிலையலும்*
*அன்னவை யெல்லாம் உரிய வென்ப*

இதுவும் இடைச்சொற்கு உரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை:- மேற்சொல்லப்பட்ட இடைச்சொல்லும் மொழியை முன்னும் பின்னும் அடுத்து வருதலும் தத்தம் ஈறுதிரிந்து வருதலும், பிறிதோர் இடைச்சொல் ஆண்டு அடுத்து வருதலும் ஆகிய அத்தன்மையு எல்லாம் உரிய என்றவாறு.

உதாரணம் :- அதுமன, கேண்மியா என்பன மொழிமுதல் வந்தன, கொன்னூர் ஓ ஓ கொடியை என்பன மொழிப்பின் வந்தன. 'மன்னைச் சொல்' (சூ 4) என்றவழி ஈறுதிரிந்தது. * 'வருக தில்லம்ம' என்பது பிறிது அவண் நின்றது பிறவுமன்ன.

* வினை 16 அக 276

சூ 4 கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவியென்று
அம்மூன் றென்ப மன்னைச் சொல்லே

ஈண்டு உரைக்கப்படுகின்ற இடைச்சொல் நான்கும் பொருள் புணர் இடைச்சொல்லும், பொருள் புணரா இடைச்சொல்லும் என இருவகைப்படும்.

அவற்றுள்,
பொருள் புணர் இடைச்சொல்லாமாறு
உணர்த்துதல் நுதலிற்று.

உரை: கழிந்தது என்னும் பொருண்மையும் ஆம் என்னும் பொருண்மையும், எஞ்சிய இசையான் உணரும் பொருண்மையும் உணரவரும். மன் என்னும் சொல் என்றவாறு. மன், மன்னை என நின்றது.

உதாரணம் ;- 1 ''சிறிய கட்பெறினே எமக்கீயு மன்னே'' என்புழி மன் கழிந்தது என்னும் பொருள்பட நின்றது. '' 2 புதுமலர் கஞலவின்று பெயரின், அதுமனெம் பரிசில் ஆவியர் கோவே'' இதனுள் மன் என்பது ஆம் என்பது குறித்து நின்றது. கூரியதோர் வாண்மன் என்றவழித் திடமின்று என்றானும் வெட்டில்லார் உளராயின் என்றானும் ஒழிந்த சொல்லினான் உணரும் பொருள்பட்டது.

சூ 5 விழைவே காலம் ஒழியிசைக் கிளவியென்று
அம்மூன் றென்ப தில்லைச் சொல்லே

உரை :- விழைவுப் பொருளையும் காலப் பொருளையும் ஒழியிசைப் பொருளையும் உணரவரும் தில் என்னும் சொல் என்றவாறு.

உதாரணம் :- 3 ''அரிவையைப் பெறுகதில்லம்ம யானே'' இது விழைவு பற்றி வந்தது.

4 ''பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டு ஈமம்
நுமக்கரி தாகுக தில்ல எமக்கெப்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பிற
வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையும் தீயுமோரற்றே''

1. புறம்-235 2. புறம்-14 3. குறுந்-14 4. புறம்-246

இதனுள் ஈமம் புகுவல் நுமக்கு அரிதானுக, எமக்......காலத்துப் பொய்கையோடு ஒக்கும் என்றமையால் காலங் குறித்தது.

1 ''வருக தில்லம் மவெஞ் சேரிசேர'' வந்தால் இவ்வாறு செய்வன் என்னும் ஒழியிசை குறித்து நின்றது.

நூ 6 அச்சம் பயமிலி காலம் பெருமையென்று
அப்பால் நான்கே கொன்னைச் சொல்லே

இதுவும் அது.

உரை :- அச்சப் பொருண்மையும் பயனின்று என்னும் பொருண்மையும் காலப் பொருண்மையும் பெரிது என்னும் பொருண்மையும் பற்றி வரும். கொன் என்னும் சொல் என்றவாறு.

உதாரணம் : 2 ''கொன்முனையிரவூர் போல்'' என்பது அச்சம் உணர நின்றது.

3 ''கொன்னே கழிந்தன்றிளமையும்'' என்புழிப் பயனின்மை உணர நின்றது. 'கொன்வரல் வாடை' என்றவழிக் காலத்து வருகின்ற வாடை எனக்காலம் உணர நின்றது.

4 ''கொன்னூர் துஞ்சினும்'' என்றவழிப் பெருமை உணர நின்றது. இம்மூன்று சொல்லும் பெயர் வினையை ஒட்டி வாராது தனிவந்து குறிப்பில் வழியாற் பொருளுணர்த்தினமையால், ஒப்பில் வழியால் பொருள் செய்தன பிறவும் இவ்வாறு வருவன அறிந்து கொள்க.

நூ 7 எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கமென்று
அப்பால் எட்டே உம்மைச் சொல்லே

இதுவும் அது.

உரை :- எச்சம் முதலாகச் சொல்லப்பட்ட எண் வகைப் பொருளும் உணர வரும் உம்மைச் சொல் என்றவாறு.

---

1. அக-276  2. குறுந்-91  3. நாலடி-55  4. குறுந்-138

உதாரணம் :- எச்சம் இறந்தது தழீஇயதும் எதிரது தழீஇய-தும் என இருவகைப்படும். சாத்தனும் வந்தான் என்புழி முன்னொருவன் வரவு குறித்தானாயின் இறந்தது தழீஇயதாம். பின் ஒருவன் வரவு குறித்தானா-யின் எதிரது தழீஇயதாம்.

ஏனை ஒழிந்த பொருளைக் குறித்தமையால் எச்சமாயிற்று. சிறப்பு என்பது மிகுதி. அஃது உயர்பான் மிகுதலும் இழிபான் மிகுதலும் என இருவகைப்படும்.

1 ''அக்காரம் யாவரே தின்னினும்
கையாதாங் கைக்குமெ, தேவரே
தின்னினும் வேம்பு'' என்றவழி

யாவர் என்றது இழிபு குறித்து நின்றது. தேவர் என்பது உயர்வு குறித்து நின்-றது. ஐயம் என்பது ஐயப்பட்ட பொருண்மை குறித்து வருவது

''ஏனல் காவல் இவளும் அல்லள்
மான்வழி வருகுனன் இவனுமல்லன்
அரந்தங் கண்ணியிவனோ டிவளிடை''

என்றவழிக் காரணம் பிறிதாகல் வேண்டும் என்னும் ஐயம் குறித்து நின்றது.

எதிர்மறையாவது யாதானும் ஒரு தொழிலை எதிர்மறுத்துத் தொழிற்கண் வரும். சாத்தன் வருதற்கும் உரியன் என்றவழி வாராமைக்கும் உரியன் எனவரும். முற்றென்பது மற்றொரு பொருளை நோக்காது நிற்கும். தமிழ் நாட்டு மூவேந்தரும் வந்தார் என வரும். முழுதும் உணர்ந்தார் என்பதும் அது.

எண் என்பது பலபொருளை எண்ணுதல் குறித்து வரும். 2'மண்டிணிந்த நிலனும் நிலவேந்திய விசும்பும், விசும்பு, தைவருவளியும்' என வரும். தெரிநிலை என்பது ஒருபொருளை ஐயப்படுதலும் துணிதலும் இன்றி ஆரா-யும் நிலைமைக்கண் வரும்.

3 ''ஐதேய்ந் தன்று பிறையுமன்று,
மைதீர்ந்தன்று மதியுமன்று'' எனவரும். ஆக்கம் உம்மை யடுத்த சொற் பொருள் மேல் ஆகும் நிலைமையைக் குறித்து வரும். வாழும் வாழ்வு

1. நாலடி-112 2. புறம்-2 3. கலி-55

உண்ணும் உண் எனத்தொழிலினது ஆக்கம் குறித்து நின்றவாறு கண்டுகொள்க. இது பெயரெச்ச வினைச்சொல் அன்றோ எனின் ஆம். அதன் கண்ணும் இடைச் சொல் என்க.

அதனானேயன்றே 1 'உம்முந்தாகுமிடனுமாருண்டே' என்னும் இலக்கணத்தால், 2 ''நெல்லரியு மிருந்தொழுவர்'' என்னும் பாட்டினுள் 'செஞ்ஞாயிற்று வியன் முனையில், தெண்கடல் திரையிசைப் பாயும்' எனற்பாலது பாயுகது என வந்தது. இவ்விலக்கணம் வினையியலுள் ஓதாமையால் பெயரெச்ச உம் இடைச்சொல் என்று கொள்ளப்படும்.

பாயும் புனல் என்பது பாய்புனல் எனத்தொக்குழி வேற்றுமைப் பொருட்கண் உருபு, பெயர்நிற்பத் தொக்கவாறு போல, வினை நிற்ப உருபு தொகுதலானும் செய்யும் என்பது வினையும் உருபுமாகிய இருநிலைமைத்து என்று கொள்க.

செய்யும் என்னும் முற்றுச் சொல்லின்கண் உம் எவ்வாறு வந்ததெனின் அது மற்றொரு பொருளைக் குறித்து நில்லாமையின் ஈண்டு இடமின்றென்க. முற்றி நிற்றலின் முற்றும்மை எனினும் இழுக்கன்று ஆக்கவும்மை என்பதற்கு நெடியனும் வலியனும் ஆயினான் என உதாரணம் காட்டுபவராலெனின் அஃது எண்ணும்மை என்க. தவிர்வரின் எச்சவும்மையாம்.

சூ 8 பிரிநிலை வினாவே எதிர்மறை ஒழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
இருமூன் றென்ப ஓகாரம்மே

இதுவும் அது

உரை :- பிரிநிலை முதலாக ஓதப்பட்ட ஆறிடமும் என்று சொல்லுவார், ஓகாரமாகிய இடைச்சொல் பொருள் உணர்த்துமிடம் என்றவாறு.

உதாரணம் ;- பிரிநிலையாவது, பிறபொருளின்றும் பிரிந்தமை தோன்றவருவது.

3 ' கானம் காரெனக் கூறினும்
யானோ தேறேனவர் பொய்வழங்கலரே

1. சூத் 43 2. புறம்-24 3. குறுந்-21

அவரோ வாரார்'' எனவரும்.

எல்லாரும் தேறினும் யான்தேறேன் எல்லாரும் லரினும் அவரோவாரார் எனப் பிரிநிலைப்பொருண்மை தோன்றியவாறு கண்டு கொள்க. வினு என்பது வினவு-தற் பொருள்மேல் வரும் அதுவோ, உண்டாயோ எனவரும். எதிர்மறையாவது தன்னுல் சொல்லப்பட்ட பொருளன்றி மற்றொரு பொருளும் கொள்ளநிற்பது. செய்கையோ செய்தான் என்றவழிப் பின்பும் இவ்வாறு செய்திலன் என்னும் பொருளும் குறித்து நின்றவாறு கண்டு கொள்க. தெரிநிலை என்பது ஒரு பொருளை ஆராயும் நிலைமைக்கண் வருவது. திருமகளோ அல்லள். அரமகளோ அல்லள் இவள் யாராகும் எனவரும்.

சிறப்பென்பது பொருளி......குறித்து நிற்கும்

1 ''கானக நாடனை நீயோஒ பெரும்''

எனவரும். அஃதேல் எழுத்திகாரத்து ஓகார ஈற்றுள் ஐயமென்றும் ஓர் ஓகாரம் ஓதினுரால் எனின் அது தெரிநிலைக்கண் அடங்கும் என்பதூஉம் ஒன்று.

'வந்தது கண்டு வாராதது முடித்தல்' என்பதனுல் ஆண்டு மாறுகொள் எச்சமும் வினுவும் ஐயமும் என ஓதப்பட்டவற்றுள் வாராததூம் கொள்ளப்படும். ஒருவனோ, ஒருத்தியோ தோன்றுகின்றுர் எனவரும்.

சூ 9 தேற்றம் வினுவே பிரிநிலை எண்ணே
ஈற்றசை இவ்வைந் தேகா ரம்மே

உரை :- தேற்றம் முதலாக ஐந்து பகுதிய ஏகார இடைச் சொல் என்றவாறு.

உதாரணம் :- அவனேஎ செய்தான் என்பது துணிவுகுறித்த வழித்தேற்றேகாரமாம் ஈண்டு அளபெடை வரும். வினுக்குறித்தவழி வினுவேகார மாம். யானே வந்தேன் என்றவழிப் பிறர்கூடலின்றியே எனப்பொருள் படுதலின் பிரிநிலை ஏகாரமாம். எண் எண்ணுக்குறித்து வரும்.

'' சொல்லே குறிப்பே ஆயிரண் டெச்சம்.........'' ஈற்றசை என்பது சொல்லின் இறுதிக்கண் அசைநிலையாகி நிற்பது.

2 ''கடல்போல் தோன்றல காடிறந்தோரே'' எனவரும்.

---

1. குறுங்-21 2. அகம்-1

அஃதேல் எழுத்திகாரத்துள், 'மாறுகோள் எச்சமும், என ஏகார ஈறு ஓதினர். ஏகாரம் ஈண்டு ஓதாதது என்னை எனின் ''வன்புற வரூஉம் வினுவிடை வினைச்சொல் எதிர்மறுத்து உணர்த்தற்கு உரிமையும் உடைத்து' என்றாராகலின் அது வினுவினுள் அடங்கும். அன்றியும் வந்தது கொண்டு வாராதது முடித்தல் என்பதனாலும் கொள்க. யான் வைதேனோ என்றவழி வைதிலேன் என்னும் எதிர்மறைப்பொருள்..................இவை மூன்று சொல்லும் பெயரோடு ஒட்டுப்பட்டு நின்று தத்தம் குறிப்பினால் பொருள் உணர்த்தின. பிறவும் இவ்வாறு வருவன கண்டு கொள்க.

ஆ 10 *வினையே குறிப்பே இசையே பண்பே*
*எண்ணே பெயரோ டவ்வறு கிளவியும்*
*கண்ணிய நிலைத்தே எனவென் கிளவி*

இதுவும் அது.

உரை :- வினைமுதலாகப் பெயர் ஈறாகச் சொல்லப்பட்ட ஆறு சொல்லினைக் குறித்த நிலைமைத்து என என்னும் சொல் என்றவாறு.

உதாரணம் :- கொள்ளெனக் கொடுத்தான் என்பது வினை குறித்து நின்றது.

1 ''பொள்ளென வாங்கே புறம்வேரார்'' என்பது விரைய என்னும் குறிப்பு உணர நின்றது.

2 ''கல்லெனக் கவின்பெற்ற விழவாற்றுப் படுத்தபின்'' என்பது இசைப்பொருண்மை குறித்து நின்றது.

'கன்முகை அருவிகண்ணெனப் பருகி' என்பது பண்பு குறித்து நின்றது.

பாழெனக் காலெனப் பாகென ஒன்றென இரண்டென என்புழி எண்ணுக்குறித்து நின்றது.

3 ''நாளென ஒன்றுபோல்காட்டி'' என்றவழிப் பெயர்குறித்தது எழுத்திகாரத்துள் என என்னெச்சம் என ஓதுதலான் இவையெல்லாம் வினையெச்சப் பொருண்மை உணரவும் பெயரெச்சப் பொருண்மை உணரவும் வரும்

1. குறள் 487 2. கலி-5 3. குறள்-334

என்று கொள்க. ஊரெனப் படுவது உறையூர் எனச்சிறப்புப் பற்றியும் வருமால் எனின் அது பேர்ப் பொருளின் பாகுபாடாதலின் பெயரென அடங்கும்.

சூ 11 என்றென் கிளவியும் அதனோரற்றே
இதுவுமது.

உரை:- என்று என்னும் இடைச்சொல்லும் மேற்சொல்லப் பட்ட அறு வகைப்பொருண்மையும் குறித்து நிற்கும் என்றவாறு.

உதாரணம்:- கொள்ளென்று கொடுத்தான், துண்ணென்று வந்தது, ஒல்லென்று ஒலித்தது. பச்சென்று கிடந்தது, நிலனென்று நீரென்று சினத்தைப் பொருளென்று கொண்டவன் எனவரும்.

இது மாட்டேற்று வகையான் எச்சவாய் பாட்டதென்று கொள்க. இச்சொற்களானும் செய்யும் என்பதன்கண் உம் இடைச்சொல் ஆயினவாறு கண்டு கொள்க.

சூ 12 விழைவின் தில்லை தன்னிடத் தியலும்
இத்துணையும் பலபொருள் குறிக்க இடைச்சொல் ஓதி இனி ஒரு பொருள் குறித்த இடைச்சொல் ஓதுகின்றாராகலின் மேற்சொல்லப்பட்டவற்றுள் ஒரு சொற்குப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

உரை:- விழைவுப் பொருட்கண் வரும் தில்லைச் சொல் சொல்லுவான் மாட்டே நிகழும் என்றவாறு.

உதாரணம் மேற்கூட்டப்பட்டது.

சூ 13 தெளிவின் ஏவும் சிறப்பின் ஓவும்
அளபின் எடுத்த இசைய என்ப
இதுவுமது.

உரை:- தேற்றேகாரமும் சிறப்பின்வரும் ஓகாரமும் அளபெடை பெற்றுவரும் என்று சொல்லுவர் என்றவாறு.

உதாரணம் மேற்காட்டப்பட்டது.

சூ 14 மற்றென் கிளவி வினைமாற் றசைநிலை

*அப்பால் இரண்டென மொழிமனார் புலவர்*

ஒரு பொருளைக் குறித்த இடைச்சொல் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மற்று என்னும் இடைச்சொல் ஒரு வினையை மாற்றதற்பொருட்கண்ணும் அசைநிலையாகியும் வரும் என்றவாறு.

உதாரணம் :- 1 ''மற்றறிவாம் நல்வினையாமிளையம்'' என்ற வழி மற்று என்பது, பின்பு அறிவாம் என அக்காலத்துச் செய்கின்ற வினையை மாற்றி நின்றது.

2 ''மற்றடிகள் கண்டருளிச் செய்க மலரடிக் கீழ்'' என்றவழி அசைநிலையாயிற்று.

சூ 15 *எற்றென் கிளவி இறந்த பொருட்டே*

இதுவுமது.

உரை :- எற்று என்னும் சொல் கழிந்தது என்னும் பொருண்மை உடைத்து என்றவாறு.

உதாரணம் :- ''எற்றெனுடம்பின் எழில்நலம்'' எனவரும்.

சூ 16 *மற்றைய தென்னும் கிளவி தானே*
*சுட்டுநிலை ஒழிய இனம் குறித்தன்றே*

இதுவுமது.

உரை :- மற்றையது என்னும் சொல் சுட்டி நின்ற பொருள் ஒழிய அதற்கினமாகிய பொருளைக்குறித்து நிற்கும் என்றவாறு.

அது என்பது எவ்வாறு வந்தது எனின் மேல் வினை மாற்று என்றார். இது பொருண்மை மாற்று என்பதனை விளக்குதற்கு அது என்பதனைக் கூட்டியுரைத்தார். அது என்பது பெயராதலின்,

3 ''ஒருபாற்கிளவி எனைப்பாற்கண்ணும்
வருவதாமே வழக்கென மொழிப''

என்பதனால் ஐந்து பாற்கண்ணும் கொள்க. அவ்வாறு கொள்ளவே, மற்றை என்பது இடைச்சொல்லாகி நின்று பிறபொருள் உணர்த்தியவாறு கண்டுகொள்க.

இனம் குறித்து என்றமையான் சுட்டப்பட்ட பொருட்கு,

1. நாலடி-19 2. சீவக-1873 3. பொருளியல்-28

இனமாகிய பொருளையே குறிக்கும். ஆடைகொணர்ந்த வழி மற்றையதோ எனின், கொணர்ந்த தொழியப் பிறிதுமோ ராடையைச் சுட்டியவாறு கண்டு கொள்க. ஒருவினை செய்வார் இருவருள்வழி, ஒருவனைக் கண்டவன் மற்றை-யவனே என்றவழி அதுவும் இனம் குறித்தது பிறவுமன்ன.

சூ 17 *மன்றவென் கிளவி தேற்றம் செய்யும்*
இதுவும் அது.

உரை -: மன்ற என்னும் சொல் தேற்றப் பொருண்மையை உணர்த்தும் என்றவாறு.

உதாரணம் ;- 1 ''கடவுளாயினுமாக-மடவை மன்ற வாழிய முருகே'' என்றவழிக் கடவுளாயினும் மடவை எனத்தேற்ற பொருண்மை காட்டிற்று.

சூ 18 *தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே*
இதுவுமது.

உரை :- தஞ்சம் என்பது எளிமை என்னும் பொருண்மைய உடைத்து.

உதாரணம் :- 2 ''முரசு கெழுதாயத்தரசோ தஞ்சம்'' என்பது எளிதென்பது குறித்து நின்றது.

சூ 19 *அந்தில் ஆங்க அசைநிலைக் கிளவியென்று*
*ஆயிரண் டாகும் இயற்கைத் தென்ப*
இதுவுமது.

உரை :- அந்தில் என்பது ஆங்கு என்னும் பொருண்மை பெற்றும் அசைநிலையாகியும் வரும் என்றவாறு.

3 'அந்திற்கச்சினன் கழலினன்' என்புழி அசைநிலையாயிற்று.

4 'வருமே சேயிழையந்தில் கொழுநற்காணிய என்பது ஆங்கு என்னும் பொருளுணர்த்திற்று.

சூ 20 *கொல்லே ஐயம்*

இதுவுமது.

உரை :- கொல் என்பது ஐயம் குறித்து வரும் என்றவாறு

உதாரணம் :- ''அதுகொல் தோழி காமநோயே என்றவழி ஐயம் கூட்டிற்று.

---

1. நற்-34 2. புறம்-73 3. அகம்-76 4. குறுந்-293

சூ 21 *எல்லே இலக்கம்*

இதுவுமது.

உரை :- எல் என்பது இலங்குதல் குறித்து வரும் என்றவாறு.

உதாரணம் :- 1 எல்வளை-இயங்குவளை இது உரிச்சொல்லன்றோ எனின், அது குறைச் சொல்லாகி நிற்கும். இது குறையின்றி நிற்றலின் இடைச் சொல்லாயிற்று.

சூ 22 *இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி*
*பலர்க்குரி யெழுத்தின் வினையொடு முடிமே*
*அசைநிலைக் கிளவி ஆகுவழி அறிதல்*

அசைநிலை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : இயற்பெயர் முன்னர் வரும் ஆர் என்னும் இடைச் சொல் ஒருமைப் பொருள் மேல்வரினும் பலர்க்குரித்தாகிய எழுத்தினையுடைய வினையொடு முற்றுப்பெறும். அது அசைநிலைக்கிளவி ஆகுமிடனறிந்து கொள்க என்றவாறு.

'வந்தது கொண்டு வாராதது முடித்தல்' என்பதனால் பிறபெயர்க் கண்ணும் ஏற்பன கொள்க.

''பலர்க்குரி எழுத்தின் வினையொடு முடிமே'' என்ற உம்மை எச்சமாகலின், ஒருமையான் வரவும் பெறும் என்றவாறு.

இதனானே, இடைச்சொல் பற்றி வரும் பால் வழுவும் திணை வழுவும் அமைத்தவாறாயிற்று.

உதாரணம் :- சாத்தனார், சாத்தியார், நம்பியார், நங்கையார், முடவனார், முடத்தியார், தாயார், தந்தையார், கிளியார், மயிலார் என்பன ஒருமை உணர நின்றனவாயினும் வினையோடு வருங்கால் வந்தார் எனவரும். நம்பியார் வந்தார், நங்கையார் வந்தார் என இவ்வாறு வருதற்கேற்பனவும் கொள்க. ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியுள் அடங்காதோ எனின் ஆண்டு உரைத்த விடையே ஈண்டும் உரைக்க.

ஆர் என்பது இடைச்சொல்லாயின் இப்பெயருடையார் பலர் வந்துழிக் கூறுமாறு என்னையெனின் அதனானேயன்றோ மார் என்பது வேறு

1. புறம்.24

எடுத்தோதல் வேண்டியது. 1 "எல்லா உயிரொடும் கொல்லுமார் முதலே" என்புழி ஆர் அசை நிலையாயிற்று.

சூ 23 ஏவும் குரையும் இசைநிறை அசைநிலை
ஆயிரண் டாகும் இயற்கைய வென்ப

அசைநிலையும் இசைநிறையும் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று

உரை :- ஏ என்னும் சொல்லும் குரை என்னும் சொல்லும் இசை நிறைத்த லாகியும் அசை நிலையாகியும் வரும் அவ்விரண்டு நிலைமையும் உடைய என்றவாறு.

ஈண்டு ஏ என்றமையான் ஓரெழுத்தொரு மொழியாகிய உயிரெழுத்தே கொள்ளப்படும். முன் கூறப்பட்ட ஏகாரம் மொழிக்கு ஈருகி வருதலின் உயிர்மெய்யென்று கொள்ளப்படும்.

இசை நிறை யாவது, இசைநிறைத் தற்பொருட்டு ஒருசொல்லோடு ஒட்டி வரும். அசைநிலையாவது தனிவரும் 'ஏஎஇவளொருத்தி பேடியோ என்றார்'' என்றவழி ஏ என்பது, இசைநிறையாயிற்று. ஏ தெளிந்தேம் யாமென்பது அசைநிலையாயிற்று. 2'அளிதோ தானேயது பெறலருங்குரைத்தே', ''சேர்ந்த சினையிளங் குரையவாயினும்'' என்பன இசைநிறை. 3 ''நல்குர வென்னும் இடும்மையுள் பல்குனத்துன்பங்கள் சென்றுபடும்' கிது அசைநிலை.

சூ 24 மாவென் கிளவி வியங்கோள் அசைச்சொல்

அசைநிலையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மா என்னும் சொல் வியங்கோட்கண் அசைநிலையாகி வரும் என்றவாறு.

உதாரணம் :- 'உப்பின்று-புற்கை யுண்கமா கொற்கையோனே' ஓர்மா தோழியவர் தேர்மணிக்குரல்'' எனவரும்.

சூ 25 மியாயிக மோமதி இகுஞ்சின் என்னும்
ஆவயின் ஆறும் முன்னிலை அசைச்சொல்

இதுவுமது.

உரை .- இவை ஆறு சொல்லும் முன்னிலை வினைச்சொற்கள் அசைநிலையாகி வரும் என்றவாறு.

1. மொழி ம.பு.28 2. புறம்-5 3. குறள் 1045

உதாரணம் :- கேண்மியா 1 ''தண்டுறை ஊரகண்டிக, காமம் செப்பாது கண்டது மொழிமோ 2 "கேள்மதி பெரும, மெல்லம் புலம்புகண்டிகும் காப்பும் பூண்டிசிற் கடையும் போகல்'' எனவரும். இவை கேள், காண், மொழி, செல், பூண் என்னும் பொருட்கண் ஆய் என்பது திரிந்து வந்தன.

சூ 26 *அவற்றுள்,*
*இகுமுஞ் சின்னும் ஏனையிடத்தொடு*
*தகுநிலை உடைய என்மனார் புலவர்*

எய்தியதன்மேல் சிறப்புவிதி வகுத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேற்சொல்லப்பட்டவற்றுள், இகுமும் சின்னும் தன்மையினும் படர்க்கையினும் வருதல் தகுநிலை உடைத்தென்று சொல்லுவர் என்றவாறு.

உதாரணம் :-

3 ''கண்டிகுமல்லமோ யாமே''
4 ''கண்ணும் படுமோ என்றிசின்யானே''
இவை கண்டேம் என்றேன் என்னும் பொருட்கண் வந்தன.
5 ''புகழ்த்திரு மல்லரோ பெரிதே
பாடல் சான்ற விறல்வேந்தனும்மே''
''வெற்புடைய வரண் கடந்து
துப்புறுவர் புறம் பெற்றிசினே''
''யாரஃதறிந்தி சினோரே''

எனப்பால் காட்டும் எழுத்தோடு அடுத்துவருதலும் கொள்க.

சூ 27 *அம்ம கேட் பிக்கும்*

இதுவும் அசைநிலைச் சொல் பொருள்படுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை -: அம்ம என்னும் சொல் அசைநிலை ஆகவேயன்றிக் கேள் என்னும் பொருளும்படும் என்றவாறு.

உதாரணம் :- 6 'அம்மவாழி தோழி' என்றவழிக் கேள் என்னும் பொருள் குறித்து நின்றது. 7 ''உண்டாலம்மவிவ் வுலகம்'' என்பது அசை

1. குறுந்-2 2. அகம்-7 3. ஐங்-121 4. நற்-61 5. குறுந் 18 6 ஐங்-31 7. புறம்-182

நிலையாகி வந்தது. அசைநிலை என்பது, எற்றாற் பெறுதும் எனின் மேல், 1 'அம்ம என்னும் அசைச்சொல் நீட்டம்'' என்பதனாற் பெறுதும்.

சூ 28 ஆங்க உரையசை

அசைநிலை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- ஆங்க என்னும் சொல் உரையிடத்து அசைநிலையாம் என்றவாறு.

உதாரணம் :- 'ஆங்கக் குயிலும் மயிலும் காட்டி' எனவரும்.

சூ 29 ஒப்பில் போலியும் அப்பொருட்டாகும்

இதுவும் அது.

உரை :- ஒப்புக் குறியாத போல் என்னும் சொல்லும் உரையசையாம் என்றவாறு.

உதாரணம் :- அவர் வந்தார் போலும். இதனுள் வந்தார் எனத் துணிந்த வழி வருதலின் அசையாயிற்று.

சூ 30 யாகா

பிறபிறக் கரோ போ மாதென வரூஉம்

ஆயேழ் சொல்லும் அசைநிலைக் கிளவி

இதுவுமது

உரை :- யா முதலாகச் சொல்லப்பட்ட ஏழு சொல்லும் அசை நிலைக் கிளவியாம் என்றவாறு.

உதாரணம் :- யா—''தோழியா சுவர்க்கம் போக்கிங்கென்''

கா—''புறநிழற்பட்டாளோ அவளிவட் காண்டிகா''

பிற—2 ''தான்பிற, வரிசையறிதலின் தன்னும் தூக்கி''

பிறக்கு—''நசை பிறக்கொழிய''

3 அரோ ''நோதக, இருங்குயில் ஆலுமரோ''

போ—''பிரியன் வாழாதென்போ தெய்ய''

மாது—4 ''விளந்தன்று மாதவத் தெளிந்த வென்னெஞ்சே''

சூ 31 ஆக ஆகல் என்ப தென்னும்

ஆவயின் மூன்றும் பிரிவில் அசைநிலை

இதுவுமது.

1. விளிமரபு.35 2. புறம்-140 3. கலி 33 4. நற் 128

உரை:- இவை மூன்று சொல்லும் பிரிவின்றிவரின் அசைநிலையாம் என்றவாறு இரட்டித்து வருமிடத்து அசைநிலையாம் என்றவாறு.

உதாரணம்:- ஆகஆக, ஆகல் என்பதென்பது எனவரும்.

சூ 32 ஈரளபிசைக்கும் இறுதியில் உயிரே
ஆயியல் நிலையும் காலத் தானும்
அளபெடை நிலையும் காலத் தானும
அளபெடை யின்றித் தனிவரும் காலையும்
உளவென மொழிப பொருள்வேறு படுதல்
குறிப்பின் இசையான் நெறிப்படத் தோன்றும்

ஒருசார் இடைச்சொற்பொருள் உணர்த்துதல் நுதலிற்று.

உரை:- இரண்டு மாத்திரையாகி ஒலிக்கும் உயிர்களுள் இறுதியாகிய ஒளகாரம் அல்லாத உயிர்கள் மேற்கூறியவாறு போல இரட்டித்து வரும் காலத்தினும் அளபெடை பெற்றுவரும் காலத்தினும் தனிவரும் காலத்தினும் பொருள் வேறுபடுதல் உள என்று சொல்லுவர் ஆசிரியர். அவை ஒரு பொருள் உணர்த்தும்வழி ஓசையாலும் குறிப்பாலும் பொருள் உணர்த்தும் என்றவாறு.

உதாரணம்:- அவையாவன ஆ, இ, ஐ, ஓ, ஒள என்பன ஒருவன் தகுதியல்லாத செய்த வழியும் அரியன செய்த வழியும் ஆ, ஆ என்ப. வியப்புள வழியும் துன்பமுள்ள வழியும் ஆ, ஆ என்ப. தமக்கு இயைபு இல்லாத ஒன்றை ஒருவன் சொன்னவழி அதனை மறுப்பார் ஆ என்ப. ஈ என்றவழி அருவருத்தலை உணர்த்தும் ஊ, உ இசையை உணர்த்தும் [1] ''ஏ ஏ இஃதொத்தன்'' என்றவழி இகழ்ச்சியை உணர்த்தும் ''ஏ ஏ என இறைச்சியோளே'' என்றவழி நாணம் குறித்து நின்றது ஐ ஐ என்றவழி இசைவை உணர்த்தும்.

''ஒ ஓ உவமை உறழ்வின்றி ஒத்ததே'' என்றவழி மிகுதியை உணர்த்தும்.

ஓ என்றவழி இசைவையும் இரக்கத்தையும் உணர்த்தும் ஓ ஓ என்பது விலக்குதலை உணர்த்தும். பிறவும் இவ்வாறு இரட்டித்தும்

1. கலி-2

அளபெடுத்தும் தனிவந்தும் பொருள்வேறு படுவன வந்தவழிக் கண்டு கொள்க. அஃதேல் 'ஏவும் குரையும்' என ஓதவேண்டியது என்னை? அதுவும் இதனுள் அடங்குமால் எனின் ஆண்டுப் பொருள் உணர்த்தா நிலையைக் கூறினர். ஈண்டுப் பொருளுணர்த்தலின் நிலைமை கூறினர் என்க.

சூ. 33 *நன்றீற் றேவும் அன்றீற் றேவும்*
*அந்தீற் றோவும் அன்னீற்றோவும்*
*அன்ன பிறவும் குறிப்பொடுங் கொள்ளும்*

ஏகார ஓகாரங்கட்கு எய்தியதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- நன்று, அன்று என்பலற்றின்கண் வரும் ஏகாரமும் அந்து, அன் என்பவற்றின் கண் வரும் ஓகாரமும் அத்தன்மைய பிறவும் மேற்கூறிய வற்றுள் அன்றிக் குறிப்பும் பொருளோடும் ஏற்கும் என்றவாறு. உம்மை இறந்தது தழீஇயற்று.

உதாரணம் :- 1 சென்றே யெறிப வொருகால் சிறுவரை
நின்றே யறைப பறையினை—நன்றேகாண்
முக்காலைக் கொட்டினுள் மூடித்தீக் கொண்டெழுவர்
செத்தாரைச் சாவார் சுமந்து.

இதனுள் நன்றே காண் என்பது தீதே காண் என்னும் குறிப்புணர்த்திற்று

''நின்......ன்றே திருமுக்குடையர்'' என்றவழி, அன்றென்பது, அல்லாமையைக் குறியாது முககுடையானையே சுட்டி நின்று அவன் கேட்பது பயனாக வந்தது.

2 ''பொன்னே கொடுத்தும்'' என்பதனுள் அன்னோ என்பது அருள் குறித்து நின்றது.

3 ''வெந்திறற் கூற்றம் பெரும்பே துறுப்ப
அந்தோ வளியென் வந்தனென் மன்ற'' என்றவழி அந்தோ என்பது. கேடு குறித்து நின்றது அன்ன பிறவுமாவன வந்தவழிக்கண்டு கொள்க.

சூ 34 *எச்சவும்மையும எதிர்மறை உம்மையும்*

---

1. நாலடி-24 2. நாலடி-162 3. புறம்-238

*தத்தமுள் மயங்கும் உடனிலை இலவே*

உம்மைக்குரியதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- எச்ச உம்மையும் எதிர்மறை உம்மையும் தத்தமுள் மயங்கும் உடனிலை இல என்றவாறு.

உதாரணம் :- சாத்தனும் வந்தான் என்றவழிக் கொற்றனும் வரும் என்றுதல், வந்தான் என்றுதல் கூறுதலன்றி வாரான் என்னற்க. ஒரு தொழிலை கூறல் வேண்டும் என்றவாறு.

சூ 35 *எஞ்சுபொருட் கிளவி செஞ்சொல்லாயின்*
*பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்*

எச்ச உம்மைக்கண் வழூஉக் காத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- எஞ்சு பொருட்கிளவி, உம்மையில் சொல்லாயின் உம்மை வருகின்ற சொல்லோடு கிளக்க என்றவாறு.

உதாரணம் :- சாத்தனும் வந்தான், கொற்றனும் வரும் என்றற்பாலதன்கண் ஓர் உம்மைவரில் சாத்தன் வந்தான் கொற்றனும் வரும் என்க.

சூ 36 *முற்றிய உம்மைத் தொகைச்சொல் மருங்கின்*
*எச்சக் கிளவி உரித்தும் ஆகும்*

இஃது உம்மைக்கண் வருவதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- முற்றும்மைத் தொகைச்சொல் பொருண்மைக்கண் எச்சப் பொருண்மையும் உரித்து என்றவாறு.

ஈண்டுத் தொகை என்றது எண்ணின் தொகை.

உதாரணம் :- நின்கையிற் காணம் பத்தும் கொடால்-என்ற வழிச் சில கொடுக்க என்றவாறும். இது மறுத்த வாய்பாட்டானல்லது வராது.

சூ 37 *ஈற்றுநின் றிசைக்கும் ஏயென் இறுதி*
*கூற்றுவயின் ஓரள பாகலும் உரித்தே*

ஏகாரத்திற்கு உரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- செய்யுள் இறுதிக்கண் நின்று ஒலிக்கும் ஏகாரம் சொல்லுமிடத்து ஒரு மாத்திரையாகி நிற்கவும் பெறும் என்றவாறு.

உதாரணம் :- 1 ''கடல்போல் தோன்றல் காடிறந்தோரே'' இது ஒரு மாத்திரையாகி நிற்கும்.

சூ. 38 *உம்மை எண்ணும் எனவென் எண்ணும்*
*தம்வயின் தொகுதி கடப்பா டிலவே*

எண்ணின்கட் படுவதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று

உரை :- உம்மையான் எண்ணப்பட்ட எண்ணும் எனவென் எண்ணப்பட்ட எண்ணும் தம்மிடத்துத் தொகை பெறுதல் நியமம் இல என்றவாறு.

உதாரணம் : முத்தும், பவழமும் கொணர்ந்தான். நன்றெனத் தீதென நின்றது. முத்தும் பவழமும், பொன்னும் மூன்றும் கொணர்ந்தான். நன்றெனத் தீதென இரண்டுமாகி நின்றது என இருபாற்றுறும் வரும்.

சூ 39 *எண்ணே கார மிடையிட்டுக் கொளினும்*
*எண்ணுக் குறித்தியலும் என்மனார் புலவர்*

இதுவுமது.

ஏகாரத்திற்குப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- எண்ணுக்குறித்த ஏகாரம் சொற்றொறுங் கொள்ளாது ஒருவழிக் கொளினும் எண்ணுக்குறித்து நடக்தும் என்றவாறு.

உதாரணம் :- ''தோற்றம் இசையே நாற்றம் சுவையே உறவோடாங்கைம் புலனென மொழிப'' என்புழி இடையிட்டு வந்தும் எண்ணுக் குறித்தது.

சூ 40 *உம்மை தொக்க எனுவென் கிளவியும்*
*ஆவீருகிய என்றென் கிளவியும்*
*ஆயிரு கிளவியும் எண்ணுவழிப்பட்டன*

எண்ணின்கண் வருவன சில இடைச்சொல் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- உம்மை தொக்க எனவின் திரிபாகிய எனு என்னும் சொல்லும் ஆவீருகிய என்று என்னும் சொல்லும் எண்ணின்கட் பட்டன. என்றவாறு.

---

1. அகம்-1

எனவும் என்பது எனு எனவும் என்று என்பது என்ரு எனவும் வரும்.

உதாரணம் :- 1 "வளிநடந்தன்ன வாய்ச்சொல் இவுளியொடு, கொடி நுடங்கு மிசைய தேரினரெனுக் கடல்கண்டன்ன ஒண்படைத் தானை-யொடு, மலைமாறு மலைக்கும் களிற்றின ரெனுஅ" என்பதனுள் எனவும் என்பது எனுஎன்று வந்து எண்ணுக் குறித்தவாறு கண்டுகொள்க.

2 "ஒப்பு முருவும் வெறுப்பு மென்ரு
கற்பு மேரும் எழிலும் என்ரு"

என்பதனுள் என்று என்பது ஆவொடு கூடி எண்ணுக்குறித்தவாறு கண்டுகொள்க

சூ 41 *அவற்றின் வரூஉம் எண்ணின் இறுதியும்*
*பெயர்க்குரி மரபிற் செவ்வெண் இறுதியும்*
*ஏயினுகிய எண்ணின் இறுதியும்*
*யாவயின் வரினும தொகையின் றியலா*

எண்ணுதற்குரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை -: மேற்சொல்லப்பட்ட (எனு) என்ரு என்பனவற்ருன் வரும எண்ணிறுதியும், பெயர்க்குரிமரபின்...னுலெண்ணப்பட்டபடும் செவ்வெண இறுதியும் ஏகாரத்தால் எண்ணப்பட்ட எண்ணின் முடிவும் யாதானும் ஒரு நெறி யான்வரினும் தொகையின்றி வழங்கா என்றவாறு.

உதாரணம் :- '3 மாத்திரை எழுத்தியல் அடைவதை எனு, யாத்தசீரே அடியாப்பெனு......ஆறு தலையிட்ட அந்நாலைந்தும்" எனவும்.

4 "அவைதாம் பெயர்ச்சொல் என்ரு வினைச்சொல் என்ரு, இரண்டன் பாலா இயங்குமன் பயின்றே" எனவும்

5 "படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறும், உடையான் அரசருள் ஏறு" எனவும்

"தேற்றம் வினுவே பிரிநிலை எண்ணே ஈற்றசை இவ்வைந் தேகா ரம்மே" எனவும் எண்தொகை பெற்றவாறு கண்டுகொள்க.

---

1. புறம்-197 2. பொருளியல்-53 3 செய்யுளியல்-1 4. குறள்-381 5. சூ-9

1 "கண்கால் புறமகம்" என்னும் சூத்திரத்துள் எனவும், 2 "ஒப்பும் உருவும்" என்னும் சூத்திரத்துள் எனவும், 3 "நிலப்பெயர் குடிப்பெயர்" என்னும் சூத்திரத்துள் ஏகாரமும் தொகை பெற்றிலவலெனில் அவை, 'அன்னபிறவும்' எனவும், 'கிளவியெல்லாம' எனவும் அனைத்தும் எனவும் தொகைப் பொருண்மை தோன்ற வந்தன.

3 "செல்லல் இன்னல் இன்னாமையே" என்பதன்கண் தொகை பெற்றின்றாலெனின் "யாவயின் வருஉம்" என்றமையால் தொகையின் வரினும், அப்பொருள் உரைக்குங்கால், தொகையின்றி இயலா எனக்கொள்க.

"உடம்பொடு புணர்த்தல்" என்பதனால் எண்ணேகாரம் இடையிட்டு வருதலேயன்றி எனாவும் என்றாவும் இடையிட்டு வருதலும் கொள்க.

சூ 42 "உம்மை எண்ணின் உருபு தொகல் வரையார்"

எண்ணும்மைக்கு உரியதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை:- உம்மையான் எண்ணப்பட்ட பொருளின்கண் வரும் உருபாகிய உம்மை ஓரிடத்துத் தொகுதலும் நீக்கார் என்றவாறு.

எனவே சொற்றொறும் உம்மை கொடாக்காலும் உம்மை எண்ணாகும் என்றவாறும்.

உதாரணம் :- 4 "இயங்குபடை யரவம் எதிர்பரந்தெடுத்தல், வயங்காலய்திய பெருமையானும், கொடுத்தலெய்திய கொடைமையானும்" என உம்மை ஒரோவழித் தொக்கு நின்றது. இவ்விலக்கணம் எண்ணும்மைக்கே உரித்து.

சூ 43 உம்முந் தாகும் இடனுமா ருண்டே

உரை ;- உம் என்பது உந்து என விரிந்து நிற்கவும் பெறும் இடனும் உண்டு என்றவாறு.

உதாரணம் :- "நெல்லரியும் இருந்தொழுவர் செஞ்ஞாயிற்று வெயின் முனையிற் றெண் கடற்றிரை மிசைப் பாயுந்து, திண்டிமில் வன்பரதவர், வெப்புடைய மட்டுண்டு தண்குரவை சீர்தூக்குந்து, தூவல் கரித்ததேம் பாய் புன்னை, மெல்லிணர்க் கண்ணி மிலைந்த மைந்தர், எல்வளை மகளிர் தலைக்கை

1. வேற்றுமையியல்-20 2. பொரு-53 3. பெயரி-114. 4. புறத்திணை-8

தரூஉந்து வண்டுபட மலர்ந்த தண்ணறுங்கானல் முண்டகக் கோதை யொண்டொடி மகளிர், இரும்பனையின் குரும்பைநீரும் பூங்கரும்பின் தீஞ்சாறும், ஓங்கு மணற் குவவுத் தாழை, தீ நீரோடுடன் விராய், முந்நீருண்டு முந்நீர்ப் பாயும் தாங்கா உறையுள் நல்லூர் கெழீஇய என்றவழி உம் உந்தாயிற்று. எண்ணும்மை அதிகாரப்பட்டு வருதலான் இவ்வாறு வருவது, ஒரு பொருண்மேல் உம்மை அடுக்கியவழி என்று கொள்க ஈண்டு எண்ணும்மையாங்காதனின் ஒரு பொருள்மேல் பல வினைச்சொல் வருதலின் அவை ஒருமுகத்தான் எண்ணப் பட்டவாம்.

ஆ 44 வினையொடு நிலையினும் எண்ணுநிலை திரியா
நிலையல் வேண்டும் அவற்றவற்றியல்பே

இதுவும் அது.

உரை :- மேற் சொல்லப்பட்ட எண்ணின் வேறுபாடெல்லாம் வினையோடு நிற்பினும் எண்ணுநிலை திரியா, ஆண்டு அவற்றவற்றியல்பு ஆராய்தல் வேண்டும் என்றவாறு.

எனவே ஒரு முடிபுடையவல்ல. தொகை பெற்றும் பெறுதும் வரும் என்றவாறும்

உதாரணம் :-

1 ''வளி நடந்தன்ன வாய்ச்செலல்
இவுளியொடு, கொடிநுடங்குமிசைய
தேரினர் எனாக், கடல்கண்டன்ன ஒண்
படைத் தானையொடு, மலைமாறு மலைக்கும்
களிற்றினர் எனா உருமுரன்றன்னவுட்டுவரு
முரசமொடு, செருஉமேம்படூஉம் வென்றிய
ரெனாஅ, மண்கெழுதானை ஒண்பூண்வேந்தர்
வெண்குடைச் செல்வம் வியத்தலோ விலமே''

என்புழி வினைக்குறிப்பு எண்ணி வந்து தொகை பெறாது நின்றது.

2 ''நாணாமை நாடாமை நாரின்மை
யாதொன்றும், பேணாமை பேதை

1. புறம்-197 2. குறள் 873

தொழில்'' இதுவும் தொகைபெறாது வந்தது. தொகை பெற்றனந்தன வந்தவழிக் கண்டுகொள்க.

சூ 45 என்றும் எனவும் ஒடுவும் தோன்றி
ஒன்றுவழி உடைய எண்ணினுட் பிரிந்தே

இதுவும் எண்ணின்கண் வருவதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- என்றும், எனவும், ஒடுவும் எண்ணினுட் பிரிந்து ஒருவழித் தோன்றி எல்லாப் பெயரொடும் ஒன்றும் நெறியுடைய என்றவாறு.

இதனானே ஒடு என் ஓரிடைச்சொல் கூறியவாறுமாயிற்று.

உதாரணம்:- 1 ''இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வட சொல்என், றனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே''

2 ''யாகா பிற பிறக் கரோபோ, மாஎன
வரூஉம் ஆயேழ் சொல்லும்'' எனவும்
3 ''பொருள் கருவி காலம் வினையிடனொ
டைந்தும், இருள்தீர எண்ணிச்செயல்''

எனவும் இவை ஒரோவழிப் பிரிந்து நின்று எல்லாப் பெயரோடும் ஒன்றிமுடிந்த வாறு கண்டுகொள்க.

''வந்தது கொண்டு வாராதது முடித்தல்'' என்பதனால், என்னும், என்னும் சொல்லும் இவ்வாறு வருமெனக்கொள்க.

4 ''மியாயிக மோமதி யிகுஎஞ்சின் ன்னும், ஆவயினாறும் முன்னிலை அசைச்சொல் என்றவழி என்றும் வந்தது.

எண்ணினுட் பிரிந்தெனப் பொதுப்படக் கூறினமையால் எல்லா எண்ணொடும் வரப்பெறும் என்று கொள்க.

5 ''சொல்லெனப் படுப பெயரே வினையென்றாயிரண்டென்ப வறிந்திசினோரே'' ஏகார எண்ணின் கண் வந்தது. பிறவும் பிற எண்ணோடு வருமாறு வந்தவழிக் கண்டு கொள்க

---

1. எச்ச-1 2. கூ-30 3. குறள் 675 4. கூ-25 5. பெயரி-4

சூ 46 அவ்வச் சொல்லிற் கவையவை பொருளென
மெய்பெறக் கிளந்த இயலவாயினும்
வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றித்
திரிந்து வேறு படினும் தெரிந்தனர் கொளலே

எடுத்தோதப்பட்ட இடைச் சொற் கெல்லாம் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

உரை ;- மேற்சொல்லப்பட்ட இடைச்சொற்களெல்லாம் தனித்தனியே இதற்கு இது பொருளென எடுத்து உணர்த்தப்பட்டவாயினும் வினையோடும், பெயரோடும் குறிக்கப் புலப்பட்டு மற்றொரு வேறுபாட்டனவாகி வரினும் அவ்வேறுபாடு ஆராய்ந்து அதுவும் அதற்கு இலக்கணமாகக் கொள்க என்றவாறு.

உதாரணம் :- ''ஒத்தமொழியால் புணர்த்தனர் உணர்த்தல், தத்தமரபிற்றோன்றுமன் பொருளே'' என்றவழி மன் அசைநிலை யாயிற்று.

1 ''உறக்கும் துணையதோர் ஆலம்வித் தீண்டி இறப்ப நிழற் பயந்தாங்கு-அறப்பயனும் தான் சிறிதாயினும் தக்கார்கைப் பட்டக்கால் வான் சிறிதாப் போர்த்துவிடும்' என்பதனுள் உம் இசைநிறையாயிற்று.

''கான்கெழு நாடர் படர்ந்தோர்க்குக்
கண்ணும் படுமோ என்றிசின் யானே''

என்றவழி, உம் அசைநிலையாயிற்று.

2 ''தேவரே தின்னினும் வேம்பு'' என்றவழி சிறப்புக்குறித்து நின்றது. மழைக்குறி கண்டு மழை பெய்யும்போலும் என்றவழிப், 'போலும்' என்றது ஐயம் குறித்து நின்றது.

3 ''தேவாதி தேவனவன் சேவடி சேர்துமன்றே'' என்றவழி அன்றே என்பது முழுதும் அசைநிலையாயிற்று.

4 ''சென்றீ பெருமநிற்றகைக்குனர் யாரே'' என்றவழி ஏகாரம் ஈற்றசையாயிற்று. ''குரை கழல்'' என்றவழிக 'குரை' என்பது நலிப் பொருண்மை உணர்த்திற்று பிறவும் இவ்வாறு வருவனவெல்லாம் இதுவே ஒத்தாகக் கொள்க.

---

1. நாலடி 38 2. நாலடி 112 3. சீவக 2 4. அகம்

சூ 47 *கிளந்த வல்ல அன்னபிறவும்*
*கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே*

இது இடைச் சொற்குப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- எடுத்தோதப்பட்ட இடைச்சொல் அன்றி அத்தன்மைய பிறவும் இசைநிறை அசைநிலையாகி வரு......பொருள்படுமாறு அறிந்து கொள்க.

உதாரணம் :-

அவற்றுட் சில வருமாறு.

1 ''குன்றுதோ றாடலும் நின்றதன் பண்பே''

என்றவழிக் குன்று தொறு என்பது குன்று பல என்னும் பொருண்மை உணர நின்றது.

2 ''சிறிது தவிர்ந் தீக மாளநின் பரிசிலர்''

என்றவழி, மாள என்பது அசைநிலையாயிற்று.

3 ''பிரியன் வாழா தென்போ தெய்ய'' என்றவழி, தெய்ய என்பது அசைநிலையாயிற்று.

''எனவாங் கொள்ளழற் பிறந்த தாமரை
வெள்ளி நாராற் பூப்பெறறிசினே''

என்றவழி எனவும் ஆங்கும் அசைநிலையாயின.

4 ''அஞ்சுவதோரும்! அறனே ஒருவனை
வஞ்சிப்ப தோரும் அவா'' என்றவழி

ஒரும் என்பது அசைநிலையாயிற்று.

5 ''அரும்பெற லுலகம் நிறைய விருந்து பெற்றனராற் பொலிக நின் புகழே'' என்றவழி ஆல் அசைநிலை ஆயிற்று.

6 ''தடுமாறு தொழிற்பெயர்க் கிரண்டும் மூன்றும் கடிநிலை யிலவே பொருள் வயினான'' என்றவழி ஆன அசைநிலையாயிற்று.

7 ''செய்வினை மருங்கின் செலவயர்ந்தியாழ நின், கை புனை வல்வின் ஞாணுளர்தீயே'' என்றவழி யாழ அசைநிலையாயிற்று. பிறவும் அன்ன

இடைச்சொல் முடிந்தது

இவ்வோத்தினுட் சூத்திரமுட்பட உரையின தளவு கிரந்த வகையான் முந்நூற்று நாற்பது.

---

1. முருகு 217 2. நன்மயிலை பக்-289 3. ஐங்கு 4. குறள்-366 5 புறம் 62 6. வேற்று.மயங்-10 7. கலி-7

# (8) உரியியல்

சூ 1 உரிச்சொற் கிளவி விரிக்கும் காலை
இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப்
பெயரினும் வினையினும் மெய்தடுமாறி
ஒருசொல் பலபொருட் குரிமை தோன்றினும்
பலசொல் ஒருபொருட் குரிமை தோன்றினும்
பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தித்
தத்தம் மரபின் சென்றுநிலை மருங்கின்
எச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல்

இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின் உரிச்சொல் ஓத்து என்னும் பெயர்த்து. உரிச்சொல் உணர்த்தினமையாற் பெற்ற பெயர்.

உரிச்சொல் என்பது யாதோ எனின் ஒரு வாய்பாட்டாற் சொல்லப்படும் பொருட்குத் தானும் உரித்தாகி வருவது. அதனானேயன்றே ஒரு சொற் பல பொருட்குரிமை தோன்றினும் பல சொல் ஒருபொருட் குரிமை தோன்றினும் என ஓதுவாராயினர்.

எழுத்ததிகாரத்துள் இதனைக் 1 'குறைச் சொற்கிளவி' என்று ஓதினமையால், வடநூலாசிரியர், தாது என்று குறியிட்ட சொற்களே இவை யென்று கொள்ளப்படும். அவையும் குறைச் சொல்லாதலான்.

அஃதேல் தொழிற்பொருண்மை உணர்த்துவன வெல்லாம், இதனுள் ஓதினரோ எனின்,

2 "வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா உரிச்சொல் மேன

என்றாராகலின், வழக்கின்கட் பயிற்சி இல்லாத சொற்கள் ஈண்டு எடுத்து ஓதப் படுகின்றன என்க.

தொழிலாவது வினையுங் குறிப்புமாதலின் அவ்விரு சொற்களும் அங்கமா......ண்டுக் கூறப்படுகின்றன. இதனைத் தலைச்சூத்திரம் என்னுதலிற்றோ

1. சூ-482 2. சூ-2

எனின், 'உரிச்சொற்கெல்லாம் உரியதோர் பொது இலக்கணமும், அவற்றிற்குப் பொருந்தும் திறனும் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- 'உரிச்சொற்கிளவி விரிக்குங்காலை' என்பது உரிச்சொல்லாகிய சொல்லை விரித்து உரைக்கும் காலத்து என்றவாறு.

''இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றி'' என்பது, சொல்லானும், குறிப்பானும் பண்பானும் புலப்பட என்றவாறு.

சொல்லாற் புலப்பட்டது 'உறு' என்பது இதனின் அஃதுறும் என்றவழி மிகும் என்னும் பொருள் புலப்பட்டது. குறிப்பாற் புலப்பட்டது—கறுத்தான் என்பது.

ஒருவன் மாட்டுக் கருமையாகிய நிறத்தைக் குறியாது அவன்து வெகுட்சியைக் குறித்தலின் குறிப்பாயிற்று. பண்பால் புலப்பட்டது — வெகுளிக்குக் கண்சிவக்கும் என்பது. கண்ணின் சிவப்பு அது சிவத்தற்குக் காரணமாகிய வெகுட்சியின் மேல் வந்தது.

இவையிற்றை வடநூலாசிரியர், கௌணம்...................... பொருள்படுவழிச் சொல்லானும் குறிப்பானும் குணத்தானும் பொருள் படூஉம் என்பதும் ஈண்டுக் கூறப்படுகின்ற உரிச்சொல் இம்மூவகையானும் பொருள் வேறுபடும் என்பதூஉம் கூறியவாறும்.

''பெயரினும் வினையினும் மெய்தடுமாறி'' என்பது உரிச்சொல்லாகிய உருபு பெயரின் கண்ணும் வினையின் கண்ணும் தடுமாறி என்றவாறு.

அவை தடுமாறுங்கால் பெயர்வினைகளைச் சார்ந்தும், அவற்றிற்கு அங்கமாகியும் வரும்.

'உறுவளி' என்பது பெயரைச் சார்ந்து வந்தது. உறக் கொண்டான் என்பது வினையைச் சார்ந்து வந்தது. உறுவன் என்றவழிப் பெயர்க்கு அங்கமாயிற்று. உற்றுன் என்றவழி வினைக்கு அங்கமாயிற்று.

'ஒருசொற் பல பொருட் குரிமை தோன்றினும் பல சொல் ஒருபொருட் குரிமை தோன்றினும்' என்பது ஒருசொல் பல பொருட்கு உரித்தாகித் தோன்றினும் பலசொல் ஒருபொருட்கு உரித்தாகித் தோன்றினும் என்றவாறு.

ஒரு சொல் ஒருபொருட் குரித்தாகி வருதல் சொல்லாமல் முடிந்ததாம். 'பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தித் தத்தம் மரபிற் சென்று நிலை மருங்கின்' என்பது உரிச்சொற்கள் தந்தம் மரபினுற் சென்று நிற்குமிடத்து, வழக்கின்கண் பயின்று நடவாத சொற்களை பயின்ற சொற்களோடு சேர்த்தி என்றவாறு.

பயிலாத சொல்லாவன, உறு, தவ, நனி, பயின்ற சொல்லாவன, மிகுதல் உட்கு, உயர்வு என்பன. சேர்த்துதலாவது, இச்சொற்கள் இச்சொல்லின் பொருள்படும் எனக் கூட்டுதல்.

'எச்சொல்லாயினும் பொருள்வேறு கிளத்தல்' என்பது, யாதானும் ஒரு சொல்லாயினும் பொருள் வேறுபடுத்திக் காட்டுக என்றவாறு.

'தோன்றித் தடுமாறி' என்னும் செய்தென் எச்சம் உரிமை தோன்றினும், என்னும் செயின் எச்சத்தினோடு ஒன்றிக் கிளக்க, என்னும் வியங்கோளோடு முடிந்தது.

உரிச்சொல் கிளவியை விரித்துரைக்கும் காலத்துச் சொல்லானும் குறிப்பானும் பண்பானும் பொருள் புலப்பட்டுப் பெயர்க்கண்ணும் வினைக்கண்ணும் உருபு தடுமாறி, ஒருசொற் பல பொருட்கு உரிமையாகித் தோன்றினும் பல சொல் ஒரு பொருட்கு உரிமையாகித் தோன்றினும் தத்தம் மரபிற் சென்று நிற்குமிடத்துப் பயிலாத சொற்களைப் பயின்ற சொல்லோடு சேர்த்தி யாதானுமொரு சொல்லாயினும் பொருள்வேறு படுத்து உரைக்க, அறிவோர் என்றவாறு.

சூ 2 வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா உரிச்சொல் மேன

ஈண்டு ஓதுகின்ற உரிச்சொல் இவை" என்பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- வழக்கின்கண் எல்லாரானும் அறியப்பட்ட சொல் ஈண்டு எடுத்து ஓதவேண்டா. அறியப்படாத உரிச்சொன்மேல், வருகின்ற சூத்திரங்கள்.

உதாரணம் :- வெளிப்படு சொல்லாவன உண்டல் என்பதற்கு அயிறல், மிசைதல், எனவும், உறங்குதல் என்பதற்குத் துஞ்சல் எனவும் இணை

விழைத்தி என்பதற்குப் புணர்தல், கலத்தல், கூடல் எனவும் அச்சம் என்பதற்கு வெரூஉதல் எனவும் இவ்வாறு வருவன வெளிப்பட வழங்காதன கூறப்படுகின்றன.

சூ 3 உறுதவ நனியென வரூஉம் மூன்றும்
மிகுதி செய்யும் பொருள என்ப

இது உரிச்சொற்களில் சில சொற்பொருள் உணர்த்துமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இக்கருத்து வருகிறன் சூத்திரங்கட்கும் ஒக்கும்.

உரை :- உறு, தவ, நனி என்று சொல்லப்பட்ட மூன்று சொல்லும் மிகுதி என்னும் சொல்லான் அறியப்படும் பொருளை உணர்த்தும் என்றவாறு.

உதாரணம் :-

1 "உறுபுனல் தந்துல கூட்டி"

2 "ஈயாது வீயும் உயிர்தவப் பலவே"

3 "வந்துநனி வருந்தினை வாழியநெஞ்சே"

இவை மிகுதி உணர்த்தியவாறு கண்டுகொள்க

சூ 4 உருவுட் காகும்

உரை :- உரு என்றும் சொல் உட்கு என்பதன் பொருள்படும்.

உதாரணம் :- "உருகெழுகடவுள்" உட்கு மிக்க கடவுள் என்றவாறு.

சூ 5 புரை யுயர் பாகும்

உரை :- புரை என்பது உயர்வு என்னும் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- 4 புரைய மன்ற புரையோர் கேண்மை'

சூ 6 குருவும் கெழுவும் நிறனாகும்மே

உரை :- குரு என்பதூஉம் கெழு என்பதூஉம் நிறம் என்பதன் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- 5 'குருமணத்தாலி' 'செங்கேழ்மென்கொடி' கெழு என்பது கேழ் எனவும் வரும்.

---

1. நாலடி-185 2. புறம்-235 3. அகம்-19 4. நற்-1 5. அகம் 80

சூ 7 செல்லல் இன்னல் இன்னாமையே

உரை :- செல்லல் என்னும் சொல்லும் இன்னல் என்னும் சொல்லும் இன்னாமைப் பொருளில் வரும் என்றவாறு.

உதாரணம் :- 1 'மணங்கமழ் வியன் மார்ப் பணங்கிய செல்லல்' வெயில் புறந்தரூஉம் இன்னல் இயக்கத்து.

சூ 8 மல்லல் வளனே

உரை :- மல்லல் என்னும் சொல் வளப்பம் என்னும் பொருள் தரும்.

உதாரணம் :- 2 'மல்லல் மால்வரை'

சூ 9 ஏ பெற்றாகும்

உரை :- ஏ என்னும் சொல் பெற்றுதல் என்னும் பொருள் படும் என்றவாறு.

உதாரணம் :- 3 'ஏகலடுக்கம்' பெற்றுதல் என்பது இக்காலம் பற்றுதல் என்வரும்.

சூ 10 உகப்பே உயர்தல்

உரை :- உகப்பு என்னும் சொல் உயர்தல் என்னும் பொருள் படும்.

உதாரணம் :- 'விசும்பு உகந்து ஆடாது'

சூ 11 உவப்பே உவகை

உரை :- உவப்பு என்னும் சொல் உவகை என்னும் பொருள் படும்.

உதாரணம் :- 4 ''உவந்துவந் தார்வ நெஞ்சமொடு''

சூ 12 பயப்பே பயனாம்

உரை :- பயப்பு என்னும் சொல் பயன் என்னும் பொருள் படும் என்றவாறு.

உதாரணம் :- 5 'பயவாக்-களரனையர் கல்லாதவர்'

சூ 13 பசப்பு நிறனாகும்

உரை :- பசப்பு என்னும் சொல் நிறத்தை உணர்த்தும் என்றவாறு.

உதாரணம் :- 6 'மையில் வாண்முகம் பசப்பூரும்மே'

---

1. மலைபடு 374 2. அகம்-52 3. நற்-116 4. அகம்-35 5. குறள் 406 6. கலி-7

சூ 14 இயைபே புணர்ச்சி

உரை:- இயைபு என்னும் சொல் புணர்தல் என்பதன் பொருள்படும்.

உதாரணம்:- 'இயைந் தொழுகும்'

சூ 15 இசைப்பு இசையாகும்

உரை;- இசைப்பு என்னும் சொல் இசைத்தல் என்பதன் பொருள்படும்.

உதாரணம்:- 'யாழிசையூஉப் புக்கும்' 'இசைத்தலுமுரிய' 'வாயிலிசை' என ஒலிப்பொருட் கண் வந்தன.

சூ 16 'அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி'

உரை:- அலமரல் என்னும் சொல்லும் தெருமரல் என்னும் சொல்லும் சுழலல் என்பதன் பொருள்படும் என்றவாறு.

உதாரணம்:- 1 'அலமரலாயம்' 'தெருமரல் உள்ளமோ டன்னை துஞ்சாள்'

சூ 17 மழவும் குழவும் இளமைப் பொருள

உரை:- மழ என்னும் சொல்லும் குழ என்னும் சொல்லும் இளமை என்பதன் பொருள்படும் என்றவாறு.

உதாரணம்:- 2 'மழகளிறு' 3 'குழக்கன்று'

சூ 18 சீர்த்தி மிகுபுகழ்

உரை:- சீர்த்தி என்னும் சொல் மிகுபுகழ் என்பதன் பொருள் படும்.

உதாரணம்:- 3 'வயக்கம் சால் சீர்த்தி'

சூ 19 மாலை இயல்பே

உரை:- மாலை என்னும் சொல் இயல்பு என்னும் பொருள் படும் என்றவாறு.

உதாரணம்:- 4 'குறிப்பேவல் செயல்மாலை கொளை நடை அந்தணிர்'

சூ 20 கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும்

---

1. ஐங்-64 2. புறம்.38 3. நாலடி-101 4. கலி-9

உரை:- கூர்ப்பு என்பதும் கழிவு என்பதும் முன்புள்ள தன்கண் மிகுதியைக் குறித்துவரும்.

உதாரணம்:- 1 "துனிகூரெவ்வமொடு"

2 "கழிகண்ணோட்டம்"

சூ 21 *கதழ்வும் துனைவும் விரைவின் பொருளே*

உரை:- கதழ்வு என்னும் சொல்லும் துனைவு என்னும் சொல்லும் விரைவு என்பதன் பொருள்படும்.

உதாரணம்:- கதழ், துனை என்னும் சொற்களை இனிது விளக்குதற்குப் பெயராக்கி ஓதினர். மேற்சொல்லப்பட்ட வற்றினும் இனிவரு வற்றினும் குறைச் சொல்லாகி இவ்வாறு வருவன அறிந்து கொள்க.

உதாரணம்:- 3 'கதழ் பரிநெடுஞ்தேர்' துனைபரிதுரக்கும் துஞ்சாச் செலவின்'

சூ 22 *அதிர்வும் விதர்வும் நடுக்கம்செய்யும்*

உரை:- அதிர்வு என்பதூஉம், விதிர் என்பதூஉம் நடுக்கம் என்பதன் பொருள் உணர்த்தும்.

உதாரணம்:- 4 'எதிரதாக் காக்கும் அறிவினார்க்கில்லை அதிரவருவதோர் நோய்' 5 'விதிர்ப்புறவறியா வேமக்காப்பினை'

சூ 23 *'வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்*
*நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள்*

உரை:- வார்தல், என்னும் சொல்லும் போகல் என்னும் சொல்லும் ஒழுகல் என்னும் சொல்லும் நேர்பு என்பதன் பொருண்மையும் நெடுமை என்பதன் பொருண்மையும் உணர்த்தும் என்றவாறு.

உதாரணம்:- 6 'வார்ந்திலங்கு வையெயிற்று' 'போகு கொடிமருங்குல்' இவை நேர்மை.

7 'வார்கையிற் றெழுகை

8 'வெள்வேல் வலத்தரொடு காருடைபோகி'

9 'மால்வரை ஒழுகிய வாழை"

---

1. சிறுபாண்-59 2. பதிற்-22 3. நற்-203 4. குறள் 429 5. புறம்-20 6. குறு 14 7. அகம்-173
8. பதிற்-13 9. சிறுபாண்-22

சூ 24 *தீர்தலும் தீர்த்தலும் விடற்பொருட்டாகும்*

உரை :- தீர்தல் என்னும் சொல்லும் தீர்த்தல் என்னும் சொல்லும் விடுதல் என்பதன் பொருளாம் என்றவாறு.

உதாரணம் :- 'ஊரிற்றீர்ந்தான்'
'பேய்தீர்ந்தான்'

சூ 25 *கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு*

உரை :- கெடவரல் என்னும் சொல்லும் பண்ணை, என்னும் சொல்லும் விளையாட்டு என்பதன் பொருளாம் என்றவாறு.

உதாரணம் :- 'கெடவரலாயம்'
1 'பண்ணைத்தோன்றிய எண்ணான்கு பொருளும்'

சூ 26 *தடவும் கயவும் நளியும் பெருமை*

உரை :- தட என்னும் சொல்லும் கய என்னும் சொல்லும் நளி என்னும் சொல்லும் பெருமை என்பதன் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- 2 ''தடக்கை''
3 ''கயவாய்''
4 ''நளிமலை''

சூ 27 *அவற்றுள்*
*தடவென் கிளவி கோட்டமும் செய்யும்*
*கயவென் கிளவி மென்மையும் செய்யும்*
*நளியென் கிளவி செறிவும் ஆகும்*

உரை :- மேற்சொன்ன வற்றுள் தட என்னும் என்னும் சொல் கோடுதல் என்பதன் பொருண்மையும் கய என்னும் சொல் மென்மை என்பதன் பொருண்மையும் நளிதல் என்பது செறிதல் என்பதன் பொருண்மை-யும் படும்.

உதாரணம் :- 5 'தடமருப் பெருமை'
'கயந்தலைக்குழவி'
'நளியிருள்'

1. தொல மெய்ப்-1  2. புறம்-394  3. அகம்-188  4. புறம்150  5. நற்-120

சூ 28 *பழுது பயனின்றே*

உரை : பழுது என்னும் சொல் பயனின்மை என்னும் பொருள் உணர்த்தும் என்றவாறு.

உதாரணம் :- 'பழுதுகழி நாள்'

சூ 29 *சாயல் மென்மை*

உரை :- சாயல் என்னும் சொல் மென்மை என்பதன் பொருள்படும்.

உதாரணம் :- 'சாயல்மயில்'

சூ 30 *முழுதென் கிளவி எஞ்சாப் பொருட்டே*

உரை :- முழுது என்னும் சொல் ஒழியாமையை உணர்த்தும் என்றவாறு

உதாரணம் :- 'உலகமுழுதாண்ட'

சூ 31 *வம்பு நிலையின்மை*

உரை :-வம்பு என்னும் சொல் நிலையின்மையை உணர்த்தும் என்றவாறு.

உதாரணம் :- 'மாதர் நோக்கு'

சூ 32 *மாதர் காதல்*

உரை :- மாதர் என்னும் சொல் காதல் என்பதன் பொருள் படும் என்றவாறு.

உதாரணம் :- 'மாதர் வண்டொடு கரும் பிசைத்தது'

சூ 33 *நம்பும் மேவும் நசையாகும்மே*

உரை :- நம்பு என்னும் சொல்லும் மேவு என்னும் சொல்லும் நசை என்பதன் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- 1 ''நயந்து நாம் விட்ட நன்மொழி நம்பி''
2 ''பேரிசை நவிர மேஎயுறையும்''

சூ 34 *ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்(தல்)*
*ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்*

உரை :- ஓய்தல் என்னும் சொல்லும் ஆய்தல் என்னும் சொல்லும் நிழத்தல் என்னும் சொல்லும் சாஅய் என்னும் சொல்லும் ஆகிய

1. அகம்-198 2. மலைபடு 82

அந்நான்கு சொல்லும் ஒருபொருட்குள்ள நுணுக்கத்தைக் காட்டும் என்றவாறு.

உதாரணம் :- 1 'வேனில் உழந்த வறிதுயங்கு ஒய்களிறு'

2 'பாய்ந்தாய்ந்த தானைப் பரிந்தானாமைந்தினை'

3 'நிழத்த யானை மேய்புலம்படர'

4 'கயலற லெதிரகடும்புறைசாய்'

சூ 35 *புலம்பே தனிமை*

உரை :- புலம்பு என்னும் சொல் தனிமை என்னும் பொருள் படும் என்றவாறு.

உதாரணம் :- 5 'புலிப்பல் கோத்த புலம்பு மணித்தாலி'

சூ 36 *துவன்று நிறைவாகும்*

உரை :- துவன்று என்பது நிறைவு என்பதன் பொருள் படும் என்றவாறு.

உதாரணம் :- 6 'ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்'

சூ 37 *முரஞ்சல் முதிர்வே*

உரை :- முரஞ்சல் என்னும் சொல் முதிர்வு என்னும் பொருள் படும் என்றவாறு.

உதாரணம் :- 'கோடுபல முரஞ்சிய கோளிவாலம்'

சூ 38 *வெம்மை வேண்டல்*

உரை :- வெம்மை என்னும் சொல் வேண்டல் என்பதன் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- 'நீ வெய்யோளொடு'

சூ 39 *பொற்பே பொலிவு*

உரை :- பொற்பு என்னும் சொல்பொலிவு என்னும் பொருள் படும் என்றவாறு.

7 'பெருவரை அடுக்கம் பொற்ப'

சூ 40 *வறிது சிறிதாகும்*

---

1. கலி-7 2. கலி-96 3. மதுரை-208 4. நெடுந -10 5. அகம்-7 6. நற்-170
7. நற்-34

உரை :- வறிது என்னும் சொல் சிறிது என்னும் பொருள் படும்.

உதாரணம் :- 'வறிது நெறிஒரீஇ'

சூ 41 ஏற்றம் நினைவும் துணிவும் ஆகும்

உரை :- ஏற்றமென்னும் சொல் நினைவு, துணிவு என்பவற்றின் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- 1 ''கானலஞ் சேர்ப்பன் கொடுமையேற்று'' இது நினைவு. ''ஏற்றென் றிரங்குவ செய்யற்க'' இது துணிவு.

சூ 42 பிணையும் பேணும் பெட்பின் பொருள

உரை - பிணை என்னும் சொல்லும் பேண் என்னும் சொல்லும் பெட்பு என்பதன் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- ''அரும்பிணை அகற்றி வேட்ட ஞாட்பினும்''
2 ''அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும்'

சூ 43 பணையே பிழைத்தல் பெருப்பு மாகும

உரை :- பணை என்னும் சொல் பிழைத்தல் என்பதன் பொருளும் பெருப்பு என்பதன் பொருளும்படும் என்றவாறு.

உதாரணம் :- 3 'பணைத்து வீல்பகழி' இது பிழைப்பு
''பணைத்தோள்'' இது பெருமை.

சூ 44 படரே உள்ளல் செலவும் ஆகும்

உரை :- படர் என்பது நினைத்தல் என்பதன் பொருளும் செலவு என்பதன் பொருளும்படும் என்றவாறு.

உதாரணம் :- 4 ''வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற்போகி' இது நினைவு.
5 ''கறவை கன்று வயிற்படர்'' இது செலவு.

சூ 45 பையுளும் சிறுமையும் நோயின் பொருள

உரை : பையுள் என்னும் சொல்லும், சிறுமை என்னும் செல்லும் நோய் என்பதன் பொருள்படும் என்றவாறு.

---

1. குறுந்-145 2. புற-96 3. அகம்-1 4. புறம்-47 5. குறுந் 108

உதாரணம் :- 1 'பையுள் மாலை'

2 'சிறுமை யுறுபவோ செய்பறியலரே'

சூ 46 *எய்யாமை அறியாமை*

உரை :- எய்யாமை என்னும் சொல் அறியாமை என்னும் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- 3 'எய்யாமையலை'

சூ 47 *நன்று பெரிதாகும்*

உரை :- நன்று என்பது பெரிது என்பதன் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் : 4 'நன்று மரிதுற் றனையால் பெரும'

சூ 48 *தாவே வலியும வருத்தமுமாகும்*

உரை :- தாவு என்னும் சொல் வலி என்பதன் பொருண்மையும் வருத்தம் என்பதன் பொருண்மையும் படும் என்றவாறு

உதாரணம் :- 5 'தாவி னன்பொன் றைஇய பாவை' இது வலி. 6 'கருங்கட் டாக்கலை பெரும்பிறிதுற்றென' இது வருத்தம்.

சூ 49 *தெவுக்கொளற் பொருட்டே*

உரை :- தெவு என்னும் சொல் கொள்ளுதல் என்பதன் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- 6 'நீர்த்தெவ்வு நிரைத்தொழுவர்'

சூ 50 *தெவ்வுப் பகையாகும்*

உரை :- தெவ்வு என்னும் சொல் பகை என்னும் பொருள் படும் என்றவாறு.

உதாரணம் :- 'தெவ்வுப் புலம்'

சூ 51 *விறப்பும் உறப்பும் வெறுப்பும் செறிவே*

உரை :- விறப்பு என்னும் சொல்லும் உறப்பு என்னும் சொல்லும் வெறுப்பு என்னும் சொல்லும் செறிவு என்பதன் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- 'விறந்த காப்போ டுண்ணின்று வலியுறுத்தும்

1. குறுந்-195 2 நற்-1 3. அகம்-10 4. அகம்-212 5. குறுந் 69 6. மதுரை-89

'உறந்த விஞ்சி'

1 'வெறுத்தகேள்வி விளங்கு புகழ்க்கபிலன்'

சூ 52 அவற்றுள்,
விறப்பே வெரூஉப் பொருட்டும் ஆகும்

உரை :- அவற்றுள் விறப்பு என்னும் சொல் வெரூஉதல் என்பதன் பொருளும்படும் என்றவாறு.

உதாரணம் :- 2 'அவலெறி யுவக்கைப் பாடுவிறந்தயல''

சூ 53 கம்பலை சும்மை கலியே யழுங்கல்
என்றிவை நான்கும் அரவப் பொருள

உரை :- கம்பலை என்னும் சொல்லும் சும்மை என்னும் சொல்லும் கலி என்னும் சொல்லும் அழுங்கல் என்னும் சொல்லும் இவை நான்கு சொல்லும் அரவம் என்னும் பொருளை உடைய என்றவாறு

உதாரணம் :- 3 'கம்பலை மூதூர்'
'ஒருபெருஞ் சும்மையொடு'
4 'கலிகொள் ஆயம்'
5 'உயவுபுணர்ந்தன்றிவ் வழுங்கலூரே'

சூ 54 அவற்றுள்,
அழுங்கல் இரக்கமும் கேடும் ஆகும

உரை :- மேற்சொல்லப்பட்டவற்றுள் அழுங்கல் என்பது இரக்கம் என்பதன் பொருண்மையும் கேடு என்பதன் பொருண்மையும் படும் என்றவாறு.

உதாரணம் :- 'மகவீழ்ந்தழுங்கிய' இது இரக்கம்.
6 'குணனழுங்கக் குற்ற முழைநின்று கூறும்' இது கேடு.

சூ 55 கழுமென் கிளவி மயக்கம் செய்யும்

உரை :- கழும் என்பது மயக்கம் என்பதன் பொருள்படும் என்றவாறு.

1. புறம்-53 2. பெரும்பாண் 226 3. புறம்-54 4. அகம்-11 5. நற் 213 6. நாலடி-353

உதாரணம் :- 1 'கழுமிய ஞாட்பின்'

சூ 56 செழுமை வளனும் கொழுப்பும் ஆகும்

உரை :- செழு என்பது வளன் என்பதன் பொருளும் கொழுப்பு என்பதன் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- 'செழும்பல் குன்றம்' இது வளம்.

'செழுந்தடி'-இது கொழுப்பு.

சூ 57 விழுமம்
சீர்மையும் சிறப்பும் இடும்பையும்
செய்யும

உரை :- விழுமம் என்பது சீர்மை என்பதன் பொருளும் கொழுப்பு என்பதன் பொருளும்படும் என்றவாறு.

உதாரணம் :- 2 'விழுமியோர் காண்டொறும் செய்வர் சிறப்பு'-இது சீர்மை.

3 'வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து' இது சிறப்பு

4 'நின்னுறு விழுமம் களைந்தோன்' இது இடும்பை.

சூ 58 கருவி தொகுதி

உரை :- கருவி என்னும் சொல் தொகுதி என்னும் பொருள் படும் என்றவாறு.

உதாரணம் :- 5 ''கருவி வானம்''

சூ 59 கமம் நிறைந் தியலும்

உரை :- கமம் என்னும் சொல் நிறைந்து என்பதனொடு இயலும் என்றவாறு.

உதாரணம் :- 6 ''கடஞ்சூல் மாமழை''

சூ 60 அரியே ஐம்மை

உரை :- அரி என்னும் சொல் ஐது என்னும் பொருண்மை படும் என்றவாறு.

உதாரணம் :- 7 'அரிமயிர் திரண் முன்கை'

1. களவழி-1 2. நாலடி-159 3. புறம் 27 4. அகம்-170 5. புறம்-159 6. அகம்-43. குறுந்-158, முருகு-7 7. புறம்-11

சூ 61 கவ வகத் திடுமே

உரை :- கவவு என்னும் சொல் அகத்திடுதல் என்பதன் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- 1 'கழூஉ விளங்காரம் கவைஇயமார்பே'

சூ 62 துவைத்தலும் சிலைத்தலும் இரங்கலும் இயம்பலும்
இசைப்பொருட் கிளவி என்மனார் புலவர்

உரை :- துவைத்தல் என்னும் சொல்லும் சிலைத்தல் என்னும் சொல்லும் இரங்கல் என்னும் சொல்லும் இயம்பல் என்னும் சொல்லும் ஓசைப் பொருண்மையை உடைய சொல் என்றவாறு.

உதாரணம் : வரிவளை துவைப்ப, 2 'ஆமா நல்வேறு சிலைப்ப', 3 'ஏறிரங்கிருளிடை' கடிமரம் தடியுமோசை தன்னூர், 4 'நெடுமதில் வரைப்பிற் கடிமனையியம்ப'

சூ 63 அவற்றுள்,
இரங்கல் கழிந்த பொருட்டுமாகும்

உரை :- மேற்சொல்லப்பட்டவற்றுள் இரங்கல் என்பது கழிந்தது என்னும் பொருளையும் உடைத்தாகும் என்றவாறு.

உதாரணம் :- 5 'செய்திரங் காவினை'

சூ 64 இலம்பா டொற்கம் ஆயிரண்டும் வறுமை

உரை :- இலம்பொடு என்னும் சொல்லும் ஒற்கம் என்னும் சொல்லும் வறுமை என்னும் சொல்லின் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- 6 இலம்படு புலவர் ஏற்ற கைந்நிறைய'
7 'ஒக்கலொற்கம் சொலிய'

சூ 65 ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தற்பொருள

உரை :- ஞெமிர்தல் என்னும் சொல்லும் பாய்தல் என்னும் சொல்லும் பரத்தல் என்னும்சொல்லின் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- 8 'தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து பாய்புனல்'

1. புறம்-19 2. முருகு-315 3. கலி 46 4. புறம்-36 5. புற :-10 6. மலைபடு.576 7. புறம்-327
8. நெடுநல்.90

சூ 66 *கவர்பு விருப்பாகும்*

உரை :- கவர்பு என்னும் சொல் அகலம் என்பதன் பொருள் படும் என்றவாறு.

உதாரணம் :- 1 'கவர்நடைப் புரவி'

சூ 67 *சேரே திரட்சி*

உரை :- சேர் என்னும் சொல் திரட்சி என்பதன் பொருள் படும் என்றவாறு.

உதாரணம் :- 2 'சேர்ந்து செறி குறங்கு'

சூ 68 *வியலென் கிளவி அகலப்பொருட்டே*

உரை :- வியல் என்னும் சொல் அகலம் என்பதன் பொருள் படும் என்றவாறு.

உதாரணம் :- 'வியலுலகம்'

சூ 69 *பேஎ நாம் உருமென வரூஉம் கிளவி*
*ஆமுறை மூன்றும் அச்சப் பொருள*

உரை :- பேஎ என்னும் சொல்லும் நாம் என்னும் சொல்லும் உரும் என்னும் சொல்லுமாகிய அம்முறைமையையுடைய மூன்று சொல்லும் அச்சப்பொருண்மையை உடைய என்றவாறு

உதாரணம் :- 3 'மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள்'
'நாம நல்லராக் கதுவியாங்கு'
4 'உருமில் சுற்றமோ மருந்தோர்க்குறுசி'

சூ 70 *வய வலியாகும்*

உரை :- வயவென்னும் சொல் வலி என்பதன் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- வயக்களிறு

சூ 71 *வாள் ஒளியாகும்*

உரை : வான் என்னும் சொல் ஒளி என்னும் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- 5 'வாணுதல்'

---

1. அகம்-130 2. நற்-170 3. குறுந்-81 4. பெரும்-447 5. முருகு-6

சூ 72 துயவென் கிளவி அறிவின் திரிபே

உரை :- துயவு என்னும் சொல் அறிவின் திரிபாகிய பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- ''துயவற்றேம் யாமாக'

சூ 73 உயாவே உயங்கல்

உரை :- உயா என்னும் சொல் உயங்கல் என்பதன் பொருள் படும் என்றவாறு.

உதாரணம் :- 1 'பருந்திருந்துயாவிளி பயிற்றும்'

சூ 74 உசாவே சூழ்ச்சி

உரை :- உசா என்பது சூழ்ச்சி என்பதன் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- ''யானென்று சாவுகோ ஐயசிறிது''

சூ 75 வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம்

உரை :- வயா என்னும் சொல் வேட்கைப் பெருக்கத்தினை உணர்த்தும் என்றவாறு.

உதாரணம் :- ——— 'மண்டு கடுவயா நாகுபோல் நோக்கி' வயா என்பது கன்றின் மேல் காதல் குறித்து நின்றது.

சூ 76 கறுப்பும் சிவப்பும் வெகுளிப்பொருள

உரை :- கறுப்பு என்பதும் சிவப்பு என்பதும் வெகுளி என்பதன் பொருளை உடைய என்றவாறு.

உதாரணம் :- 2 'நிற்கறுத் தோரரும் கடிமுனையாமைபோல், நீ சிவந்திறுத்த நீரழிபாக்கம்'

சூ 77 நிறத்துரு வுணர்த்தற்கும் உரியவென்ப

உரை :- மேற்சொல்லப்பட்ட கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருட்கண் வருதலன்றி, நிறத்துரு உணர்த்தற்கும் உரிய என்றவாறு.

உதாரணம் :- 3 கறுத்த காயா, சிவந்த காந்தள்.

சூ 78 நொசிவும் நுழைவும் நுணங்கும் நுண்மை

உரை :- நொசி என்பதூஉம் நுழைவு என்பதூஉம் நுணங்கு என்பதூஉம் நுண்மை என்பதன் பொருள்படும் என்றவாறு.

1. அகம்-16 2. ப. ற்-13 3. பதிற்-15

உதாரணம் :- நொசிமருங்குல். 1 'நுழைநூற் கலிங்கம்' 2 'நுணங்கிய கேள் வியவர்'

சூ 79 *புனிறென் கிளவியீன் றணிமைப் பொருட்டே*

உரை :- புனிறு என்பது ஈன்றணித்தென்னும் பொருட்டில் நிற்கும் என்றவாறு.

உதாரணம் :- 3 'புனிற்றுப் பாய்ந்தெனக் கலங்கி'

சூ 80 *நனவே களனும் அகலமும் செய்யும்*

உரை :- நனவென்பது களன் என்னும் பொருண்மையும் அகலம் என்பதன் பொருண்மையும் உணர்த்தும் என்றவாறு.

உதாரணம் :- நனவுப்புகு விறலியிற்றோன்றும் நாடன் இது களம். 4 'நனந்தலை உலகம்' இது அகலம்.

சூ 81 *மதவே மடனும் வலியு மாகும்*

உரை :- மத என்னும் சொல் மடம் என்பதன் பொருண்மையையும் வலி என்பதன் பொருண்மையும் உணர்த்தும் என்றவாறு.

உதாரணம் :- 5 'பதவுமேய மதவுடை நல்லான்' இது மடம். 6 'கயிறிடு கதச்சேப் போல மதமிக்கு' இதுவலி.

சூ 82 *மிகுதியும் வனப்பும் ஆகலும் உரித்தே*

உரை :- மேற்சொல்லப்பட்ட மத என்னும் சொல் மிகுதி என்பதன் பொருளும் வனப்பு என்பதன் பொருளும்படும் என்றவாறு.

உதாரணம் :- பொருநா கிளம்பாண்டில்-தேருறச் செம்மாந்து அதுபோல் மதையினள் இது மிகுதி. 7 'மாதர்வாண்முகம் மதைஇய நோக்கே' இது வனப்பு.

சூ 83 *புதிதுபடற் பொருட்டே யாணர்க் கிளவி*

உரை :- யாணர் என்னும் சொல் புதியது படுதல் என்னும் பொருண்மையை உடைத்து என்றவாறு.

உதாரணம் :- 8 'வித்தொடு சென்ற வட்டி பற்பல மீனொடு

---

1. மலைபடு.561 2. குறள்-419 3. அகம்-56 4. அகம்-82, பதிற் 63 5. அகம்-14 6. அக-36
7. அகம்-130 8. நற்-210

பெயரும் யாணரூர'

நாடொறும் புதியது படுகின்ற ஊர்.

சூ 84 அமர்தல் மேவல்

உரை :- அமர்தல் என்பது மேவல் என்பதன் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- 1 ''அகனமர்ந்து செய்யாளுறையும்''

சூ 85 யாணுக் கவினும்

உரை :- யாணு என்னும் சொல் கவின் என்பதன் பொருள் படும் என்றவாறு.

உதாரணம் :- யாணு விசும்பின் அமரர் உளப்படப்பேணிப் பெரிதெனைப் பெட்டபின் அழகிய விசும்பு என்றவாறு.

சூ 86 பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள

உரை :- பரவலும் பழிச்சலும் வாழ்த்தலின பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- ''கடவுட் பரவிக் கை தொழூஉப் பழிச்சி''

சூ 87 கடியென் கிளவி
வரைவே கூர்மை காப்பே புதுமை
விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே
அச்சம் முன்றேற் றுயி ரைந்தும்
மெய்ப்படத் தோன்றும் பொருட்டாகும்மே

உரை : கடி என்னும் சொல் வரைவு முதலாக முன்னேற்றீருக ஓதப்பட்ட பத்துச் சொல்லினும் தெளியத் தோன்றும் பொருளையுடைத்து என்றவாறு.

உதாரணம் :- 2 ''கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவை தாம், முடிந்தாலும் பீழைதரும்'' இது வரைவு. 'கடுநுனைப் பகழி' இது கூர்மை கடி என்னும் சொற்றுனே, கடு எனத் திரிந்து வந்தது 'கடியின்.........உள் கள்வன் போல்' இது காவல். 3 ''கடியுண் கடவுட் கிட்ட சிறுகுரல் அறியா துண்ட மஞ்ஞை'' இது புதிதுண்டகடவுள் 'கடுத்தேர் குழித்தஞெள்ள வாங்கண்'

1. குறள்-84 2. குறள்-658 3. குறு105

இது விரைவு. கடும்பகல் இது விளக்கம் 1 'கடுங்கால் ஒற்றலின்' இது மிகுதி 2 'கடிகாவற்பூச்சூடினன்' இது சிறப்பு. கடும்பாம்பு வழங்குந்தெரு இது அச்சம் 3 'கடுஞ்சூடகுருவனிளக்கே'-நீ தெளியுமாறு கூறுகின்றேன். இது முன்னேற்று

சூ 88 *ஐயமும் கரிப்பும் ஆகலும் உரித்தே*

உரை :- மேற்சொல்லப்பட்ட கடி என்னும் சொல் ஐயப் பொருண்மையும் கரித்தற் பொருண்மையும் ஆகலும் ஆம் என்றவாறு.

உதாரணம் : 4 'போற்றின் அரியவை போற்றல் கடுத்தபின் தேற்றுதல் யார்க்கும் அரிது' இது ஐயம். கடிமிளகு தின்ற கல்லா மந்தி-இது கரிப்பு.

சூ 89 *ஐ வியப்பாகும்*

உரை :- ஐ என்பது வியப்பு என்பதன் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- ஐ யென விம்மி யவற்கது கூறிய, பொய்யில் புகழோன்.........கைகூப்பி வியப்பென விம்மி.

சூ 90 *முனைவு முனிவாகும்*

உரை :- முனைவு என்பது, முனிதல் என்பதன் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- 5 'சேற்றுநில முனைஇய செங்கட்காரான்'

சூ 91 *வையே கூர்மை*

உரை :- வை என்னும் சொல் கூர்மை என்பதன் பொருள் படும் என்றவாறு.

உதாரணம் :- 6 'வைந்நுனைப்பகழி'

சூ 92 *எறுழ் வலியாகும்*

உரை :- எறுழ் என்பது வலி என்பதன் பொருள்படும் என்றவாறு.

உதாரணம் :- 7 'போரெறுழ்த் திணிதோள்'

சூ 93 *மெய்பெறக் கிளந்த உரிச்சொல் எல்லாம்*
*முன்னும் பின்னும் வருபவை நாடி*
*ஒத்த மொழியால் புணர்த்தனர் உணர்த்தல்*

1. அகம்-148 2. பதிற்-20 3. அகம்-110 4. குறள் 693 5. அகம்-46 6. முல்லைப்-73 7. பெரும்-63

*தத்தம் மரபிற் றோன்றுமன் பொருளே*

எடுத்து ஓதப்பட்ட உரிச்சொல் எல்லாவற்றிற்கும் புறனடை உணர்த்துதல் நுதலிற்று

உரை :- மேற்சொல்லப்பட்ட உரிச்சொல் எல்லாவற்றிற்கும் முன்னும் பின்னும் வந்த மொழியை அறிந்து அதற்கேற்பப் பொருளுரைக்க என்றவாறு.

உதாரணம் மேற்காட்டப்பட்டன.

சூ 94 *கூறிய கிளவிப் பொருணிலை யல்லது*
*வேறுபிற தோன்றினும் அவற்றொடுங் கொளலே*

இதுவுமது.

உரை :- மேல் ஓதப்பட்ட உரிச்சொற்கு ஓதப்பட்ட பொருள் நிலையல்லது. பிற பொருள் தோன்றினும் சொல்லப்பட்டனவற்றோடு ஒரு நிகரனவாகக் கொள்க. என்றவாறு.

உதாரணம் :- 'பேநாறுந் தாழ்நீர்ப் பனிச்சுனை' என்றவழிப் 'பேஎ' என்பது மிகுதி குறித்து நின்றது.

'பொய்கை துவன்ற புனிறுதீர் பனுவல்' என்றவழிப் புனிறு என்பது புதுமையின்கண் வந்தது.

'தூவற் கலித்த தேம்பாய் புன்னை' என்றவழிக் கலித்தல் தழைப்பின் கண் வந்தது.

'அடர்பொன் அவிரேய்க்கும் அவ்வரிவாட' என்றவழி, அரி என்பது நிறத்தின கண் வந்தது. பிறவும் இவ்வாறு வருவன அறிந்து கொள்க.

சூ 95 *பொருட்குப் பொருள் தெரியின்*
***அதுவரம் பின்றே***

உரிச்சொற்கு உரியதோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- பொருட்குப் பொருள் தெரியின் எல்லையின்று என்றவாறு.

அஃதாவது, உறு என்பதற்குப் பொருள் மிகுதி என்றால், மிகுதி என்பதற்குப் பொருள் யாதெனில், அதற்கும் ஒருவாய்ப்பாட்டால் பொருளுரைப்பின், அதற்குப் பொருள் யாதெனப் பின்னும் வினவும்; அவ்வாறு

வினவ அவ்வாராய்ச்சி முற்றுப் பெறுதாம். அதனால் வினவுவானும் அவ்வாறு வினவற்க. செப்புவானும் அவ்வாறு செப்பற்க என்றவாறு.

வந்தது கண்டு வாராதது முடித்தல் என்பதனால் இவ்வாராய்ச்சி பெயர்ச் சொற்கும் ஒக்குமெனக் கொள்க. அஃதேல் அப்பொருண்மை உணரா-தான் அதனை உணருமாறு என்னையெனின், அது வருகின்ற சூத்திரத்தான் விளங்கும் என்க.

சூ 96 *பொருட்குத் திரிபில்லை உணர்த்த வல்லின்*

உரை : பொருட்குப்பொருள் வினவிய மாணாக்கன் அவ்வாறு வினவானும். அவன் கொள்ளுமாறு அஃது உணர்த்தவல்லனாயின் என்றவாறு

என்றது, ஈண்டுப் பயின்றவாக எடுத்தோதப்பட்ட சொற்களைப் பயிலாதரற்கு அவன் பயின்ற வாய்ப்பாட்டான், உணர்த்துக. உணர்த்தவே, பொருட்குப் பொருள் ஆராய்தலில்லை என்றவாறு

அஃதேல் ''உறு, தவ, நனி எனவரூஉம் மூன்றும், மிகுதி செய்யும் பொருள் என்ப'' என்பதனால் பயனின்றாம். அஃதறியாதாற்குப் பிற வாய்ப்பாட்டால் பொருளுணர்த்த வேண்டுதலின் எனின் அதற்கு விடை வருகின்ற சூத்திரத்தான் அடங்கும்

சூ 97 *உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே*

மாணார்க்கு உரியதோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- உணர்ச்சி என்பது உணர்வு வாயில் என்பது புலன். அஃதாவது உணரப்படுவது. உணர்வோர் வலித்து என்பது உணர்-வோரது வலிமையுடைத்து என்றவாறு.

என்றது பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்தி உணர்த்து கின்றவழி, பயின்றவாக ஓதப்பட்டன, யாதும் அறியாதாரை நோக்கின அல்ல உணர்வினால் உணரப்படுவன உணர்வாரை நோக்கிக் கூறப்பட்ட என்றவாறு எனவே மேற்கூறிய கடாவிடை பெற்றதாம்.

சூ 98 *மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்று*

உரிச்சொற்கு உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

வந்தது கண்டு வாராதது முடித்தல் என்பதனுல் பெயர்ச்சொற்கு உரிய இலக்கணமும் உணர்த்திற்றென்று கொள்ளப்படும்.

உரை :- இச்சொற்குப் பொருள் இதுவென நியமித்தற்குக் காரணம் விளங்கத்தோன்ரு என்றவாறு.

எனவே காரணம் உளதென்பதூஉம், அது புலனுகாதென்பதூஉம் கூறியவாறு

என்னை புலனுகாமை எனின் மிகுதல் என்பதற்குப் பொருளாவது முன்பு நின்ற நிலையிற் பெரிதாதல் அப்பொருண்மையைச் சேரக்காட்டுதற்குக் காரணம் உரைப்பரிது ஆதலான் அஃதேல், காரணம் உளபோலக் கூறியவதனுற் பயன் என்னையோ எனின், பொருள்மேல் சொல் நிகழ்தல் தொன்று தொட்டு நின்றதாகலின்! உலகினுள் மிக்காரெல்லாம் காரணமின்றி வழங்குபவோ என்னும் ஐயம் குறித்துக் கூறினர்.

அஃதேல் இன்ன எழுத்து இப்பொருள்படும் எனவும் இத்தன்மைத்து எனவும் இப்பயன்தரும் எனவும் மற்றை நூலகத்தும் பிருண்டும் உரைக்கப்படுமாகலான், காரணம் உரைப்பரிது என்பது குற்றமெனின் அதற்கு விடை வருகின்ற சூத்திரத்தான் விளங்கும்.

சூ 99 *எழுத்துப் பிரிந்திசைத்தல் இவணியல் பின்றே*

எல்லாச் சொற்கும் உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- ஒரு சொற்கு அங்கமாகிய எழுத்துப் பிரிந்து நின்று பொருள்பட ஒலித்தல் இத்தமிழகத்தில் இல்லை என்றவாறு

எனவே, மேல் எழுந்த கடா விடை பெற்றதாம். பொருட்குப் பொருள் தெரிதல் என்பது முதலாக இத்துணையும் கூறப்பட்ட உரிச்சொல் பொருள் உணர்த்துமாறும்.

சூ 100 *அன்னபிறவும் கிளந்த வல்ல*
*பன்முறை யானும் பரந்தன வரூஉம்*
*உரிச்சொல் எல்லாம் பொருட்குறைகாட்ட*
*இயன்ற மருங்கின் இனைத்தென அறியும்*
*வரம்பு தமக் கின்மையின் வழிநனி கடைப்பிடித்*

*தோம்படை ஆணையிற் கிளந்தவற்றியலால்*
*பாங்குற உணர்தல் என்மனார் புலவர்*

**இஃது உரிச்சொற்கெல்லாம் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.**

உரை :- 'அன்னபிறவும்'...எல்லாம் என்பது ஈண்டு ஓதப் பட்டனவல்லாத அத்தன்மைய பிறவுமாகிப் பல்லாற்றானும் பரந்து வரும் உரிச் சொல் எல்லாம் என்றவாறு.

'பொருட்குறை......இன்மையின்' என்பது, பொருட்குறை படாமல் கூட்டவழக்கியன்ற மருங்கில் இத்துணையென வரையறுக்கும் நிலைமை தமக்கு இல்லையாகலான் என்றவாறு.

இதனானே எடுத்தோதல் அரிதாயிற்று. 'வழிநனி கடை பிடித்து' என்பது, சான்றோர் செய்யுட்கண் வந்த நெறியை மிகவும் கடைப்-பிடித்து என்றவாறு.

ஓம்படை என்பது பாதுகாவல். ஆணை என்பது விதி. பாது காத்தலாக எடுத்தோதப்பட்ட புறனடைச் சூத்திரவிதியினால் என்றவாறு.

அஃதாவது, 'முன்னும் பின்னும் வருபவை நாடி ஒத்தமொழி யாற் புணர்த்தல்' என மேற்கூறப்பட்டது. 'கிளந்தவற்றியலான்' என்பது பொருளுணர்த்துதற்குக் கருவியாகக் கூறப்பட்ட சொல்லானும் குறிப்பானும பண்பானும் என்றவாறு.

'பாங்குற உணர்தல் என்மனார் புலவர்' என்பது பாங்குபட அறிக என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.

இதன்பொழிப்பு : எடுத்தோதப்படாத உரிச்சொல் எல்லாம் ஈண்டுப் பொருட்குறைபடாமல் எடுத்தோதக் கருதின், அவை எல்லையிலவாக-லான், அவை செய்யுளகத்து வழங்கிய நெறியைக் கடைப்பிடித்து, நாம் அதிகாரப் புறனடையாகச் சொன்ன முன்னும் பின்னும் வருபவை நாடி, ஒத்த மொழியாற் புணர்த்தனர் உணர்த்தல்' என்றும் விதியினால்......குறிப்பானும் பண்பானும் பொருள்படுமாறு அறிந்து கொள்க என்றவாறு.

''கமழுநவின கஞலிலையன கழிமடலின கைதை'' என்றவழி, கஞல்என்பது நெருக்கம் குறித்து நின்றது.

'ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே' என்றவழி, ஒல்லென்பது செயற்படும் என்பது குறித்து நின்றது.

'மன்னுவுலகத்து மன்னுதல் குறித்தோர்' என்றவழி, மன்னென்பது...... 'இரும்பிடித் தொகுதியொடு பெரும் கயம்படியா'' என்றவழி இருமை என்பது பெருமை குறித்து நின்றது.

'அஞ்செங் குவளைக்......' என்பது, அழகு குறித்து நின்றது.

'வானமூர்ந்த வயங்கொளி மண்டிலம் நெருப்பெனச் சிவந்த உருப்பவிரங்காட்டு'' என்றவழி வியங்கென்பதூஉம் அவிரென்பதூஉம்....... அம்மென்பது நுணுக்கம் குறித்தது.

உருப்பென்பது வெம்மை குறித்தது. 1 ''ஊரவர் கவ்வை எருவாக'' என்றவழி கவ்வை என்பது அலர் குறித்து நின்றது.

2 ''பொருளாகு மெல்லற மென்றீயாதிவறும்'' என்றவழி இவறென்பது, லோபம் குறித்தது.

'பின்னென்று பெயர்த்தாற்றும் பீடுடையாளர்போல்' என்றவழிப் பீடென்றது, பெருமை குறித்து நின்றது.

'நொறிலியற் புரவி யதிபற் கோமான்' என்றவழி, நொறில் என்பது, நுடககத்தின்கண் வந்தது.

'நொறிலியற் புரவி கழற்கரலிளையோன்' என்றவழி நொறில் என்பது விரைவின்கண் வந்தது.

'கவரியாளினம் கல்லென்று தெவிட்ட' என்றவழித் தெவிட்ட என்பது, அடைய என்பது குறித்து நின்றது.

'களிறு வழங்கதர் கானத் தல்கி' என்றவழி அல் குதல்தங்குதற் கண் வந்தது.

'நெடும்பெருங் குன்றத் தமன்ற கரந்தை' என்றவழி, நீடுதல் ஆராய்தற்கண் வந்தது.

3 'தணக்குங்கால் கலுழ்பானுக் கண்ணெனவும் உளவன்றே' என்றவழித் தணத்தல் நீக்கம் குறித்து நின்றது.

1. குறள் 1147 2. குறள்-1002 3. கலி 25

"குரலோர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பின் நாலெயிவர்வுறீஇ" என்றவழி நாலெ குற்றம் குறித்தது. இவர்தல் என்பது, பரத்தல் குறித்தது. 'வந்தாற் செத்தோய் என வாங்கே எடுத்தன்ன' என்றவழிச் செத்தென்பது குறிப்புணர்த்திற்று பிறவும் அன்ன.

உரிச்சொல்லோத்து முடிந்தது

இவ்வோத்தினுட் சூத்திரமுட்பட உரையினதளவு கிரந்தவகையான் இருநூற்றெண்பது.

# (9) எச்சவியல்

ஆ 1 *இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்*
*றனைத்தே செய்யுள் ஈட்டச்சொல்லே*

என்பது சூத்திரம். இவ்வோத்து என்ன பெயர்த்தோ எனின் எச்ச இயல் என்னும் பெயர்த்து. கிளவி ஆக்கம் முதலாக உரிச்சொல் ஓத்து ஈருகக் கிடந்த எட்டு ஒத்தினுள்ளும் உணர்த்தாத பொருளை ஈண்டு உணர்த்தலால் பெற்றபெயர்.

இதன் தலைச்சூத்திரம் என் நுதலிற்றோ எனின் ஒருவகையால் செய்யுட்கு உரிய சொல்லின் பாகுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- இயற்சொல்லும் திரிசொல்லும் திசைச்சொல்லும் வடசொல்லும் எனவரும். நால்வகைத்து, செய்யுள் ஆக்குதற்குரிய சொல்.

அவை ஆமாறு தத்தம் சிறப்புச் சூத்திரத்தான் உணரப்படும்

ஆ 2 *அவற்றுள், இயற்சொல் தாமே,*
*செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்*
*தம்பொருள் வழாமல் இசைக்கும் சொல்லே*

நிறுத்த முறையானே இயற்சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன்பொருள் : இயற்சொல்லாவனதாம் செந்தமிழ் நாட்டு வழக்கொடு பொருந்தித் தம்பொருள் வழாமல் இசைக்கும் சொற்கள் என்றவாறு.

செந்தமிழ் நாடாவது, வையையாற்றின் வடக்கும் மருதயாற்றின் தெற்கும் கருவூரின் கிழக்கும் மருவூரின் மேற்கும் என்ப. இவ்வாறு

உரைத்தற்கு ஓர் இலக்கணம் காணாமையானும் வையையாற்றின் தெற்காகிய கொற்கையும் கருவூரின் மேற்காகிய கொடுங்கோளூரும் மருதயாற்றின் வடக்காகிய காஞ்சியும் தமிழ்திரி நிலமாதல் வேண்டும் ஆதலானும் அஃது உரையன்று என்பார் உரைக்குமாறு :

''வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்கும் செய்யுளும் ஆயிருமுதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி''

என்றமையானும் இதனுள் தமிழ் கூறும் நல்லுலகம் என விசேஷித்தமையானு கிழக்கும் மேற்கும் எல்லை கூறாது தெற்கெல்லை கூறியவதனால் குமரியின் தெற்காகிய நாடுகளை ஒழித்து வேங்கடமலையின் தெற்கும் குமரியின் வடக்கும் குணகடலின் மேற்கும் குடகடலின் கிழக்குமாகிய நிலம் செந்தமிழ் நிலம் என்று உரைப்ப

அந்நிலத்து வழக்கொடு சிவணித் தம்பொருள் வழாமல் இசைக்கும் சொல்லாவன : சோறு, கூழ், மலை, மரம், உண்டான், நின்றான், ஓடினான் என்னும் தொடக்கத்தன.

இவை அந்நிலத்துப்பட்ட எல்லா நாட்டிலும் ஒக்க இயறலின் இயற்சொல்லாயின இவற்றைச் செஞ்சொல் எனினும் அமையும்

சூ 3 ஒருபொருள் குறித்த வேறுசொல்லாகியும்
வேறு பொருள் குறித்த ஒருசொல்லாகியும்
இருபாற் றென்ப திரிசொற் கிளவி

திரிசொல்லாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- ஒருபொருள் குறித்த வேறுவேறு சொல்லாகியும் வேறுவேறு பொருள் குறித்த ஒருசொல்லாகியும் அவ்விருபகுதியது என்ப திரிச்சொல்.

எனவே இயற்சொல்லால் உணர்த்தப்படும் பொருள்மேல் வேறுபட்ட வாய்பாட்டான் வருவன திரிசொல்லாகும் என்றவாறும். அஃதேல் உரிச்சொல்லோடு இதனிடை வேறுபாடு என்னையெனின், உரிச்சொல் குறைச்

சொல்லாகிவரும். திரிசொல் முழுச்சொல்லாகி வரும் என்க.

இதனை இயற்சொல்லைச் சாரவைத்ததனுல் செந்தமிழ் நாட்டுப் பட்ட தேயந்தோறும் தாம் அறிகுறியிட்டு ஆண்டசொல்லென்று கொள்க.

அவையாவன: மலை என்பதற்குக் குன்று, வரை எனவும் குளம் என்பதற்கு மூழி, பாழி எனவும் வயல் என்பதற்குச் செய், செறு எனவும் வருவன. இவை ஒருபொருள் குறித்தன.

அரங்கம் என்பது யாற்றிடைக்குறையையும், ஆடுமிடத்தை யும், இல்லின்கண் ஒருபக்கத்தினையும் உணர்த்தும். துருத்தி என்பதுயாற்றி- டைக் குறையையும் தோற்கருவியையும் உணர்த்தும். இவை வேறுவேறு பொருள் குறித்தன. இவ்வாறு திரிந்து வருதலின் திரிசொல்லாயிற்று.

சூ 4 *செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்*
*தங்குறிப் பினவே திசைச் சொற்கிளவி*

திசைச் சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- செந்தமிழ்நாட்டைச் சேர்ந்த பன்னிரு நிலத்தும் உள்ளார் தத்தம் குறிப்பினையுடைய திசைச் சொல்லாகிய சொல்.

பன்னிருநிலமாவன : வையையாற்றின்..............ஒளிநாடு, தென்பாண்டிநாடு, கருங்குட்டநாடு, குடநாடு, பன்றிநாடு, கற்காநாடு, சிதை நாடு, பூழிநாடு, மலாடு, அருவாநாடு, அருவாவடதலை என்ப. இவை, செந்- தமிழ் நாட்டகத்த செந்தமிழ் நாடென்றமையால் பிறநாடாகல் வேண்டுமென்- பார், உதாரணம் காட்டுமாறு.

கன்னித் தென்கரைக் கடற்பழந்தீபம், கொல்லம், கூபகம், சிங்களம் என்னும் எல்லையின் புறத்தவும் கன்னடம், வடுகம், கலிங்கம், தெலிங்- கம், கொங்கணம், துளுவம், குடகம், குனறகம், என்பன.

குடபால் இருபுறச்சையத்துடன் உறைபு கூறும் தமிழ்திரி நிலங்களும், முடியுடையவர் இடுநிலவாட்சியின அரசு மேம்பட்ட குறுநிலக் குடுமிகள் பதின்மரும் உடனிருப்பிருவரு(மாகிய) பன்னிருவர் அரசரும் படைத்த பன்னிருதேயத்தினும் தமிழ்ச் சொல்லாதற்கு விருப்புடைமான என்றமையாலும், "தமிழ்கூறு நல்லுலகத்து, வழக்கும் செய்யுளும் ஆயிருமுதலின், எழுத்தும்

சொல்லும் பொருளுஞ் நாடி'' என நிறுத்துப் பின்னும் ''செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு முந்து நூல்கண்டு'' என ஓதியவதனுல் சிவணிய நிலமாவது எல்லைகுறித்த நிலத்தைச் சார்ந்த நிலமென வேண்டுதலானும் பன்னிரு நிலமாவன குமரியாற்றின் தென்கரைப்பட்ட பழந்தீபமும் கொல்லமும் கூபகமும் சிங்களமும் சையத்தின் மேற்குப்பட்ட கொங்கணமும் துளுவமும் குடகமும் குன்றகமும் கிழக்குப்பட்ட கருநாடமும் வடுகும் தெலிங்கமும் கலிங்கமும் என்று கொள்ளப்படும்.

இவற்றுள் கூபகமும் கொல்லமும் கடல் கொள்ளப்படுதலின் குமரியாற்றின் வடகரைக் கொல்லமெனக் குறியிட்டோதினுர்போலும் பஞ்சத்திராவிடம் எனவும் வடநாட்டார் உரைப்பவாகலான் அவை ஐந்தும் வேங்கடத்தின் தெற்காதலும் கூடாமை உணர்க. அந்நிலத்து வழங்கும் சொல்லாகிச் செஞ்சொல்லின் வேறுபட்டுச் சான்ருேர் செய்யுளகத்து வருவன நீக்கப்படா.

குடாவடியுளியம் என்றவழி, 'குடா' என்பது குடகத்தார் பிள்ளைகட்கு இட்டபெயர் 'அந்தோ' என்பது சிங்களவர் ஐயோ என்பதற்கு இட்டபெயர். 'யான் தற்கரைய வருது' என்றவழி, கரைதல் என்பது கருநாடர் விளிப்பொருள் உணரக்கூறுவது. செப்பு என்பது வடுகர் சொல்லுதற்குப் பெயராகி வழங்கும். பாண்டில் என்பது தெலிங்கர் பசுவுக்கும் எருதுக்கும் பெயராக வழங்குப கொக்கு என்பது துளுவர் மாவுக்குப் பெயராக வழங்குப பிறவும் இவ்வாறு வருவன பலவற்றையும் வந்தவழிக் கண்டுகொள்க.

சூ 5 வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா குும்மே

வடசொற்கிளவி ஆமாறு உணர்த்திற்று.

உரை :- வடசொல்லாகிய சொல்லாவது வடமொழிக்கே உரியவாகிய எழுத்தை நீக்கித் தமிழ்மொழிக்குரிய எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்.

எல்லா நாட்டிற்கும் பொதுவாயினும் வடநாட்டில் பயில வழங்குதலின் வடசொல் என்ருயிற்று. இன்னும் வடசொல் என்றதனுல் தெய்வ வழக்காகிய பாகதச் சொல்லாகி வருவனவும் கொள்க. வடமொழியாவன; வாரி, மணி, குங்குமம், என்னும் தொடக்கத்தன. வட்டம், சட்டம், பட்டினம் என்பன பாகதம். பிறவுமன்ன.

ஆ 6 *சிதைந்தனவரினும் இயைந்தன வரையார்*

**மேலதற்கோர் புறனடை உணர்த்திற்று.**

எழுத்தொடு பொருந்திய சொல்லேயன்றிச் சிதைந்த சொற்கள்வரினும் தமிழ் வழக்கிற்குப் பொருந்தினவை நீக்கப்படா. அவையாவன தத்தம் திசை நான்கு, சாகரம், சத்தியம், முத்து, பவளம் எனவரும். பாகதச் சிதைவாகி வருவனவும் கொள்க.

இவை நான்கு சொல்லினும் இயற்சொல் பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் இடைச்சொல்லும் உரிச்சொல்லுமாகி வரும். திரிசொல்லும் திசைச்சொல்லும் பெரும்பான்மை பெயரும் சிறுபான்மை வினையுமாகி வரும். வடசொல் பெயராயல்லது வாராது.

ஆ 7 *அந்நாற் சொல்லும் தொடுக்குங்காலை*
*வலிக்கும்வழி வலித்தலும் மெலிக்கும்வழி*
*மெலித்தலும்*
*விரிக்கும்வழி விரித்தலும் தொகுக்கும்வழி*
*தொகுத்தலும்*
*நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழி குறுக்கலும்*
*நாட்டல் வலிய என்மனார் புலவர்*

மேற்சொல்லப்பட்ட நால்வகைச் சொல்லும் செய்யுளகத்து விகாரப்படுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- அந்நாற்சொல்லும் ஆவன, இயற்சொல்லும் திரிசொல்லும் திசைச்சொல்லும் வடசொல்லும் என்றவாறு.

வலிக்கும்வழி வலித்தல் என்பது மெல்லெழுத்தினை வல்லெழுத்தாகத் தொடுக்கவேண்டும்வழி வல்லெழுத்தாகத் தொடுத்தல் மெலிக்கும்வழி மெலித்தல் என்பது வல்லெழுத்தினை மெல்லெழுத்தாகத் தொடுக்கவேண்டும்வழி மெல்லெழுத்தாகத் தொடுத்தல், விரிக்கும்வழி விரித்தல் என்பது பொருளுணர்த்தும் சொல்லின்மேல் ஒன்றும் இரண்டும் எழுத்துவிரிக்க வேண்டுவழி விரித்துத் தொடுத்தல் தொகுக்கும்வழி தொகுத்தல் என்பது, பொருளுணர்த்தும் சொல்லின்கண் ஒன்றும் இரண்டும் எழுத்துத் தொகுத்துத் தொடுக்கவேண்டும்வழி

தொகுத்துத் தொடுத்தல்; நீட்டும்வழி நீட்டல் என்பது. குற்றெழுத்தாகி நின்று பொருள்படும் சொல்லை நெட்டெழுத்தாகத் தொடுக்க வேண்டும்வழி நெட்டெழுத்தாகத்தொடுத்தல், குறுக்கும்வழி குறுக்கலாவது நெட்டெழுத்தாகி நின்று பொருள்படும் சொற்களைக் குற்றெழுத்தாகத் தொடுத்தல். நாட்டல் வலிய என்மனார் புலவர் என்பது இவ்வாறாகச் செய்யுட்கண் வைத்தல் வலியுடைய என்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு, குற்றமில என்றவாறு, விகாரப்படாமல் தொடுத்தல் சொல்லாமல் முடிந்ததாம்.

1 ''தத்தம் கிளவி தம்மகப்பட்ட
முத்தை வரூஉம் காலம் தோன்றின்
ஒத்த தென்ப ஏயென் சாரியை''

என்றவழி முந்தை என்பது முத்தை என வல்லெழுத்தாயிற்று. ''தண்டை இனக் கிளி கடிவோள்'' என்பதனுள் தட்டை எனற்பாலது தண்டை என மெல்லெழுத்தாயிற்று. ''தண்ணந்துறைவர் தகவிலர்'' என்றவழித்தண் என்பது தண்ணம் என விரிந்து நின்றது. வேண்டார் வணக்கி விறல் மதில்தான் கோடல்' என்றவழி வேண்டாதாரை என்பது வேண்டார் எனத்தொக்கு நின்றது. தொகுத்தல் என்பது சுருக்குதல். அஃதேல் 'அந்நா' என்பது இவ்விலக்கணத்தால் தொகுக' ,ஐ' என்பது ''உருபு தொக வருதல்'' என அடங்காதோ எனின், ஐகாரம் 2 ''உயர்திணை மருங்கின் ஒழியாது வருதலும்'' என ஓதப்படுதலின், அஃது உயர்திணைக்கட் தொகாது நிற்கவேண்டுமாயினும் செய்யுளின் பம் வேண்டித் தொகப் பெறுமென்பது இவ்விலக்கணத்தாற் கொள்ளப்படும். ''பாசிழை யாகம் பசப்பித்தான்'' என்றவழி பச்சிழை எனற்பாலது பாசிழை என நீண்டு நின்றது. ''திருத்தார் நன்றென்றேன்தியேன்'' இதனுள் தீயென்பது தியெனக் குறுகி நின்றது. அந்நாற்சொல்லும் இவ்வாறு விகாரப்படும் என்றமையான் ஒரு மொழிக்கண்ணே இவை வருவன என உணர்க.

சூ 8 *நிரனிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்*
*றெனநான் கென்ப பொருள்புணர் இயல்பே*

செய்யுளகத்துப் பொருளுணரச் சொற்றொடுக்குமாறு உணர்த்திற்று.

உரை:- நிரனிறையும் சுண்ணமும் அடிமறியும் மொழி

1. எழுத்.164 2. எழுத்.157

மாற்றும் என நான்கென்று சொல்லுப பொருள் புணருமென மொழிபுணர்க்கும் இயல்.

செய்யுளகத்துத் திரிந்து பொருள்படும் சொல் எடுத்தோதினர் வழக்கின்கண் இயல்பாகிச் செய்யுட்கண்ணும் இயல்பாகி நடக்கும் பொருள்கள் ஓதவேண்டாமையின அவையாமாறு தத்தம் சிறப்புச் சூத்திரத்துட் காட்டுதும்.

சூ 9 *அவற்றுள், நிரனிறை தானே*
*வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்*
*சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல்*

நிரனிறை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று

உரை :- மேற்சொல்லப்பட்டவற்றுள் நிரனிறையாவது வினை-யானும் பெயரானும் ஆராயப் புலப்படும் சொற்களைச் சேர நிறுத்தி அவற்றிற்கு முடிபாக வருஞ்சொற்களைச் சேர நிறுத்துதல் என்றவாறு.

"அடல்வேல் அமர்நோக்கி நின்முகம் கண்டே
உடலும் இரிந்தோடும் ஊழ்மலரும் பார்க்கும்
கடலும் கனையிருளும் ஆம்பலும் பாம்பும்
தடமதியம் ஆமென்று தாம்"

என்பதனுள் உடலும் ஓடும் ஊழ்மலரும் பார்க்கும் என்னும் வினை கடல் இருள் ஆம்பல், பாம்பு என்பனவற்றோடு கடல் உடலும், இருள் ஓடும், ஆம்பல் மலரும், பாம்பு பார்க்கும் என அடைவே முடிந்தவாறு கண்டுகொள்க.

"கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி" என்றவழி, கொடி, குவளை, கொட்டை என்னும் பெயர் நுசுப்பு, உண்கண், மேனி, என்னும் பெயரோடு கொடிநுசுப்பு, குவளைக்கண் கொட்டைமேனி என அடைவே முடிந்தவாறு காண்க.

வினையும் வினையுமாகி வருவன உளவேல் வந்தவழிக் கண்டு கொள்க. நினையத்தோன்றி என்றமையால் பொருள் விளங்கி நில்லாது நினை-யுங்காற்றோன்றுமாறாக மயங்கி வருவனவும் கொள்க.

"களிறுங் கந்தும் போல
நளிகடற் கூம்பும் கலனும் தோன்றும்"

என்றவழி களிற்றிற்குக் கூம்பும் கந்திற்குக் கலனும் உவமையன்மையின் களிறு போலும் கலம் கந்துபோலுங் கூம்பு எனவும் மயங்கி வந்தவாறு கண்டுகொள்க.

ஆ 10 *சுண்ணந் தானே*
*பட்டாங் கமைந்த ஈரடி எண்சீர்*
*ஒட்டுவழி யறிந்து துணித்தன ரியற்றல்*

சுண்ணமாகிய பொருள்கோள் உணர்த்துதல் நுதலிற்று.

உரை:- சுண்ணமாவதுதான் அளவடியான் அமைந்த ஈரடிக் கண் எண்சீரும் ஒரோவொரு சீராகத் துணித்துப் (படுமியல்) பறிந்து கூட்டிப் பொருளுரைக்க என்றவாறு.

பட்டாங்கு என்பது இயல்பு. அது மிகுதலும் குறைதலும் இல்லாத அளவு என்று பொருளாயிற்று.

''சுரையாழ அம்மி-மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்தும் முயற்கு நிலையென்ப
கானக நாடன்கனே''

இதனுட் சுரை மிதப்ப அம்மி ஆழ யானைக்குநிலை முயற்கு நீத்து எனத் துணித்து ஒட்டப் பொருள் விளங்கியவாறு கண்டு கொள்க. இது நாற் சீர்க்கண்ணே துணித்து ஒட்டிற்று

''தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை உடைத்தன்ன மாமேனி
அஞ்சனத்தன்ன பசலை தணிவேமே
வங்கத்துச் சென்றார் வரின்''

இதன் பொருள்: அஞ்சனத்தன்ன பைங்கூந்தல்! மாமை பொருந்தின மேனிமேல் தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட கோழி முட்டை உடைத்தா லொத்த பசலை, வங்கத்துச் சென்றார் வரின் தணிவேம் என்றவாறு. இதனுள் எண்சீரும் ஒட்டி வந்தது. எண்சீரென வரையறுத்தமையான் அதன் மேற் சென்று ஒட்டாது எனக.

ஆ 11 *அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து*
*சீர்நிலை திரியாது தடுமா றும்மே*

அடிமறியாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- அடிமறி என்பதன் செய்தி சீர்நிலை திரியாது அடி நிலைமை திரிந்து தடுமாறும் என்றவாறு.

' சூரல்பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளிர் ஆரணங்கினரே
சாரல் நாட நீ வரலாறே
வார லெனினே யானஞ்சுவலே''

இது ''சாரல்நாட, நீ வருகின்ற நெறி சூரல் பம்பிய சிறுகான்யாறு. சூரரமகளிர் வருத்தம் செய்வர். வாராதொழியென யான் அஞ்சா நின்றேன்'' என அடிமறிப் பொருள்கோள் உணர்த்தியவாறு கண்டுகொள்க.

அஃதேல் இதனை யாப்பிலக்கணத்துள் ஆராய்தல் வேண்டும். சொல்நிலைதிரியாமையால் எனின், இது தொடர்மொழித் திரிபாதலான் ஈண்டு கூறப்பட்டதென்க.

சூ 12 *பொருள்தெரி மருங்கின் ஈற்றடியிறுசீர்*
*எருத்துவயிற் றிரியும் தோற்றமும் வரையார்*

மேலதற்கோர் புறனடை உணர்த்திற்று

உரை :- பொருள் ஆராயும்வழி ஈற்றடிக்கண் வரும் இறுதிச் சீர் ஈற்றயலடிக்கண் திரிந்து பொருள்படும் நிலைமையும் நீக்கார்.

இவ்வாறு வருதும் அடிமறி என்றவாரும் உதாரணம் வந்த வழிக் கண்டு கொள்க.

சூ 13 *மொழி மாற்றியற்கை,*
*சொன்னிலை மாற்றி பொருளெதிர் இயைய*
*முன்னும் பின்னும் கொள்வழிக் கொளாஅல்*

மொழி மாற்றினது இயல்பு உணர்த்திற்று.

உரை :- மொழி மாற்றின்கண் நின்ற நிலையை மாற்றி, முன்னும் பின்னும் பொருள் இயைய ஏற்கும்வழி கொளுவுதல்.

மேல், அடிமொழிமாற்று என ஓதினமையானும் சுண்ண மொழி மாற்று ஈரடி எண்சீர் என ஓதுதலானும் ஈண்டுச் சொன்னிலை மாற்றி

எனப் பொதுப்பட ஓதினமையானும் ஓரடிக்கண் நின்ற சொல்லை அவ்வடிக் கண்ணும் முன்பாயினும் பின்பாயினும் ஏற்கும்வழி கொளுவப்பெறும்.

''பன்மையும் ஒருமையும் பாலறி வந்த
அந்நா லைந்தும் மூன்று தலையிட்ட
முன்னுறக் கிளந்த உயர்திணை யவ்வே''

என்றவழி மூன்று தலையிட்ட அந்நாலைந்தென ஓரடிக்கண் மொழிமாற்றி நின்றது

'ஆலத்துமேல குவளை
குளத்துள வாலினெடிய குரங்கு'

என்றவழிக் குரங்கு ஆலத்துமேல எனப்பிற அடிக்கண் மொழி மாறிநின்றது. பிறவும் அன்ன.

அஃதேல் பூட்டுவிற் பொருள்கோள், புனல்யாற்றுப் பொருள் கோள், தாப்பிசைப் பொருள்கோள், அளைமறிபாப்புப் பொருள்கோள், கொண்டு கூட்டுப் பொருள்கோள் எனவும் ஒரு சாராசிரியர் உரைப்பவாலெனின் அவற்றுள் யாற்றொழுக்கும் அளைமறியாப்புப் பொருள்கோளும் திரிபின்றிப் பொருள்படு தலின் இயல்பாம். கொண்டு கூட்டுச்சுண்ண மொழிமாற்றும் பூட்டுவிற் பொருள் கோள் மொழிமாற்றுள் அடங்கும் தாப்பிசைப் பொருள்கோள்கண் முன்னொரு சொல் வருவிக்க வேண்டுதலின் இது பிரிநிலைவினை, என்னும் சூத்திரத்துள் அடங்கும்.

சூ 14 *த ந நு எ எனும் அவைமுத லாகிய*
*கிளைநுதற் பெயரும் பிரிப்பப் பிரியா*
ஒட்டுப்பெயர்க்கு உரியதோர் மரபு உணர்த்திற்று.

உரை :- த ந நு எ. என்னும் அவை முதலாகியவும் கிளைமை நுதலிய பெயரும் பொருள் நிலையாற் பிரிக்க நினைக்கின் பிரிந்து பொருள்படா. ஒட்டி நின்றே பொருள்படும் ஆகியவும் என்னும் உம்மை தொக்கு நின்றது.

த, ந, நு, எ என்னும் அவை முதலாகியவாவன, தான், தாம், நாம், யாம், யான், நீ, நீர், நீவிர் என மூன்றிடத்துப் பெயர்கள் ஆறும் வேற்றுமைக் கிழமைப் பொருள் குறித்து முன்னிலை குறுகியும் திரிந்தும் வந்து கிழமைப் பொருள் உணர்த்தும் சொல்லின் ஈற்றெழுத்தோடு ஒட்டிநின்றன.

தமன், தமள், தமர், தமது, தம எனப்படர்க்கையிலும் நுமன், நுமள், நுமர், நுமது, நும என முன்னிலையிலும் நமன், நமள், நமர், நமது, நம, எமன், எமள், எமர், எமது, எம எனத்தன்மையிலும் வரும் கிளை நுதற் பெயராவன: இம்மூன்றிடத்தும் ஒட்டுப்பட்ட பெயர்கள், ஆறும் வேற்றுமை முறைமையைக் குறித்து மேற்சொல்லியவாற்றான், தந்தை, நுந்தை, எந்தை, எனவும் தாய், ஞாய், யாய் எனவும் தம்முன், நும்முன், எம்முன் எனவும் தம்பி, நும்பி, எம்பி எனவும் முதல்வினையும் ஈன்றாளையும் முன்பிறந்தானையும் உணர்த்-தும் பன்மைச் சொற்களெல்லாம் பொருள்முகத்தாற் தம்மையும் பிறரையும் உணர்த்தினும் ஏனைய போலப் பிரிக்கப்படா. ஒட்டி நின்றே பொருள்படும்.

வந்தது கண்டு வாராதது முடித்தல் என்பதனால் காரணப் பெயராகி வரும் தொழிற்பெயரும், உடையபெயரும், பண்பப்பெயர் முதலாயின-வும் பிரிப்பப் பிரியா என்றுகொள்க பிறன், பிறள், பிறர் என்பவை எனின் அவை ஒட்டுப் பெயர் அல்ல என்க

சூ 15 *வேற்றுமைத் தொகையே உவமைத் தொகையே*
*வினையின் தொகையே பண்பின் தொகையே*
*உம்மைத் தொகையே அன்மொழித் தொகை*
*யென்று*
*அவ்வா றென்ப தொகைமொழி நிலையே*

தொகைச்சொல் ஆமாறு உணர்த்திற்று.

உரை: வேற்றுமைப் பொருள் குறித்த தொகையும் உவமைப் பொருள் குறித்த தொகையும் வினைத் தொழில் குறித்த தொகையும் பண்பு குறித்த தொகையும் உம்மைத் தொகை செய்யும் தொகையும் அல்பொருள் குறித்த தொகையும் என அறுவகைப்படும் தொகைச் சொல்லது நிலைமை.

தொகைச் சொல்லாவது பொருளுணர்த்தும் சொல்லாயினும் தொழிலுணர்த்தும் சொல்லாயினும் இரண்டு சொல் விட்டிசைத்து நில்லாது ஒட்டி நிற்பது. இஃது ஒட்டுப்பெயர் என்னும் குறியும் பெறும், உதாரணம் வருகின்ற சூத்திரத்துட் காட்டுதும்.

சூ 16 *இசைநிறை யசைநிலை பொருளொடு புணர்தல்என்று*

*அவை மூன்றென்ப ஒருசொல் லடுக்கே*
*அவற்றுள், வேற்றுமைத்தொகையே வேற்றுமை இயல*

இது வேற்றுமைத் தொகை ஆமாறு உணர்த்திற்று.

வேற்றுமை இயல என்றதனால் வேற்றுமைகட்கு ஓதிய செயப்படு பொருள் முதலாக இடம் ஈறாக வரும் பொருண்மைக்கண் தொகும் சொல் வேற்றுமைத் தொகையாம் என்று கொள்க முதல் வேற்றுமை பெயர்ப்பயனிலை கொள்வழியும் விட்டிசைத்தே நிற்றலானும் எட்டாவது விரிந்து நிற்றலானும் இவையிற்றை ஒழித்து ஏனைய தொகுமென்று கொள்க ஏகாரம் தேற்றேகாரம்.

அவை தொகுமாறு படையைப் பிடித்தகை, குழையையுடைய காது குதிரையைப் பூட்டப்பட்டதேர், தாயொடுகூடமூவர், கடிசூத்திரத்திற்கு வைத்த பொன், வரையினின்றும் வீழா நின்ற அருவி யானையது கோடு, குன்றத்துக்கண் வாழா நின்ற கூகை என்பன, படைக்கை, குழைக்காது, குதிரைத்தேர், தாய்மூவர். கடிசூத்திரப்பொன், வரையருவி. யானைக்கோடு, குன்றக்கூகை எனத்தொகும். நிலத்தைக் கடந்தான் வாளால் வெட்டினன், கொலைக்கு உடம்பட்டான், வரையினின்றும் பாய்ந்தான், குன்றத்துக்கண் இருந்தான், என்ற வழி இறுதிநின்ற சொல் தொழில் உணர்த்தாது. அதுசெய்தார்க்குப் பெயராகி வந்துழி, நிலங்கடந்தான், வாள் வெட்டினன், கொலையுடம் பட்டான், வரை பாய்ந்தான் குன்றத்திருந்தான் என இரண்டு பெயரும் ஒட்டி ஒருசொல்லாகி வரும். கள்ளையுண்டல், வாளால் வெட்டல் கொலைக்குடம்படுதல், வரையினின்றும் பாய்தல் மாடத்துக்கண் இருத்தல் என்பன, கள்ளுண்டல், வாள்வெட்டல், கொலையுடம்படுதல், வரைபாய்தல், மாடத்திருத்தல் எனத் தொகும்.

அஃதேல் இவ்வாறு வருவன உருபு, தொகை என அடங்காவோ எனின் ஆண்டு அவ்வேற்றுமைகட்கு ஓதிய வாய்பாட்டில் தொழிலோடும் பெயரோடும், முடிவுழி உருபு மாத்திரம் தொக்கு இரண்டு சொல்லாகி நிற்கும். ஈண்டு ஒரு சொல்லாகி வரும். ஆறுவதன் கண்வரும் தொகை உருபுதொகையும் பொருட்டொகையும் என வேறுபாடின்றால் எனின் ஆண்டும் வேறுபாடு உள. மரக்கோடு என்றவழி ஒட்டுப்பட்டுப் பொருட்டொகையாகி நின்றது மரத்தின்கோடு என்ற

வழி உருபு தொகையாகி இரண்டு சொல்லாகி நின்றது. இவை சொல் நோக்-கான் உணர்க.

"வேற்றுமைத் தொகையே வேற்றுமையியல" என்றதனால் அவ்வேற்றுமைமொழி மாறி நிற்குமாதலின், அத்தொகைச் சொல் மொழி மாறி நின்றுஒட்டுப்படுதலும் கொள்க. மலையதிடை, மலையதகம் என்பன இடைமலை, அகமலை எனவும் வரும். பிறவும் அன்ன.

அஃதற்றுக * "உலகம் உவப்ப வாணுதல் கணவன்" என்பது பல சொல்லாகி வந்து கணவன் என்பதனோடு முடிந்து கிடத்தலான் இரண்டு சொல் ஒரு தொகையாம் என்றல் பொருந்தாதாம் எனின், எவ்வாறுவரினும் இரண்டு சொல்லாகி வந்தல்லது ஒட்டுப்படா தென்று கொள்க. அஃது ஆயவாறு என்னையெனின் பூத்தொடை போலக் கொள்க. அஃது இரண்டாயவாறு என்னை யெனின் முற்பட இரண்டு பூவை எடுத்து ஒன்றாகக்கட்டும் அதன் பின் அவ்விரண்டும் ஒன்றாகி நின்ற தொடையோடே கூடப்பின்னும் ஒரு பூவைஎடுத்துக்கட்டும். அதன் பின் அம்மூன்று பூவும் ஒன்றாகக் கட்டப்பட்ட தொடையோடே பின்னும் ஒரு பூவை எடுத்துக்கட்டும், அவ்வாறு கட்டப்பட்ட தொடைகளைப் பின்னும் இரண்-டொன்றாகக் கோத்து ஒன்றாக்கும். இவ்வாறே எல்லாப்பூவும் இரண்டொன்றாக இணைத்தாம். சொற்றொடையும் ஒட்டுப்படுங்கால் அவ்வாறு வருமென்று கொள்க

உலகம் என்பது உலகத்துள்ளார்க்குப் பெயராகி உவப்ப என்னும் செயவென்னெச்சத்தோடு முடிந்தது. வலனாக என்னும் எச்சத்துக்கண் ஆக என்-பது செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது. தொக்கு நின்ற காலத்தும் அதற்கு இயல்பு முற்பட்ட நிலைமை என்று கொள்க. என்போல எனின், வாலும் செவியும் இழந்த ஞமலியைப் பின்னும் ஞமலி என்றே வழங்கினாற்போல, உவப்ப, வலனாக என்னும் செயவென்னெச்சமும் ஏர்பு என நிகழ்காலம் குறித்த செயவென்னச்-சமும் திரிதருவென்னும் பெயரெச்சத்தோடு முடிந்தன பலரால் என்னும் மூன்றும் வேற்றுமைப் பெயர் உருபு தொகவருதல் என்னும் இலக்கணத்தால் தொக்குப் பலரென நின்றது. அது புகழ்ப்பட்ட என்பதற்கு அடையாகி நின்றது. அடை-யெனுறும் விசேடணம் எனினும் ஒக்கும். புகழப்பட்ட என்னும் பெயரெச்சம் உண்சோறு என்றாற்போல பொருள்மேல் வந்து வினைத்தொகையாகிப் புகழ்

* முருக.

ஞாயிறென ஒட்டி ஒருசொல்லாகி நின்றது. அது திரிதரும் என்னும் பெயரெச்சத்திற்கு முடிபாயிற்று ஞாயிறு என்பதற்கு முன்உள்ள சொல் எல்லாம் தொகுத்து நோக்க ஞாயிற்றிற்கு அடையாகி நின்றது.

ஞாயிற்றையென்னும் உருபு தொக்குநின்றது கடலின்கண் என்னும் உருபு தொக்கு நின்றது கண்டாங்கு என்பது, கண்டாற்போலும் என்னும் உவமப்பொருள் உணரநின்றது. இத்துணையும் உணர்த்தப்பட்டது. உதயஞாயிறு போல என்னும் பொருண்மை.

ஓவற என்பது ஓவு ஒழிவு, அற என்பது இல்லையாக என்னும் செயவெனச்ச வாய்ப்பாடு. அதற்கு ஓவு என்பது அடையாகி நின்றது. அற வென்பது இமைக்கும் என்னும் பெயரெச்சத்தோடு முடிந்தது சேணின் கண் என்பது சேண் என உருபு தொக்கு நின்றது. அது விளங்கும் என்பதற்கு அடையாகி நின்றது. அவிர் என்பது விளக்கத்தின் மிகுதியைக் குறித்து வந்து ஒளியென்னும் பெயரோடு வினைத்தொகையாகி அவிரொளி என ஒரு சொல்லாயிற்று.

அது விளங்கு என்பதனோடு ஒட்டி, வினைத்தொகையாகி, விளங்கவிரொளி என ஒருசொல் நீர்மைப்பட்டது. அஃது இமைக்குமென்னும் பெயரெச்சத்திற்கு முடிபாயிற்று உலகம் என்பது முதலாக இத்துணையும் கூறப்பட்டது

ஞாயிறு போல் விளங்கும் ஒளி என ஒளிக்கு அடைகூறுதலான் அவ்வொளியோடே எல்லாச் சொல்லும் முற்றி நின்றன. 'உறுநரை' என்பது உறுநர் என உருபு தொக்கு நின்றது. தாங்கிய என்பது பெயரெச்சம். அதற்கு உறுநர் என்பது அடையாகி நின்றது. மதன் என்பது வலி. அது மத 'என் னும் உரிச்சொல் ஈறு திரிந்து நின்றது. மதனை என்னும் ஐகாரம் தொக்குநின்றது. நோன்மை, பொறை; திருவடி அடைவார் பலராதலின் அவரெல்லாரையும் பொறுக்க வல்லதாள் என்னும் பொருண்மைத்தாகி, நோன்றாள் என வேற்றுமைத் தொகையாகி ஒருசொல் நீர்மைப்பட்டது.

அது மதனுடைய நோன்றாள் என அடை அடுத்து உறுநர்த்தாங்கிய என்னும் பெயரெச்சத்திற்கு முடிபாயிற்று. செறுநரை என்பது செறுநர் என

உருபு தொக்கு நின்றது. தேய்த்த என்பது பெயரெச்சம். அதற்குச் செறுநர் என்பது அடையாகி நின்றது.

செல் என்பது மழை, உறழ்தல் என்பது ஒத்தல் அது தடக்கை என்பதற்கு உவமநிலையின் அடையாகி நின்று, செல்லுறழ் தடக்கை என்று ஒருசொல் நீர்மைப்பட்டது. அது தேய்த்த என்னும் பெயரெச்சத்திற்கு முடிபாயிற்று. மறு என்பது குற்றம். இல் என்பது இல்லாமை. குற்றமில் கற்பெனக் கற்பிற்கு அடையாயிற்று. வாள் என்பது ஒளி அது ஒளிறுதல் என அடையடுத்து நின்றது. சினையிற்கூறு முதலறி கிளவியாகி அதனை உடையாட்குப் பெயராகி நின்றது.

அது மறுவில் கற்பின் வாணுதல் எனப்பண்புத் தொகையாகி ஒருசொல் நடையாயிற்று. அது கணவன் என்னும் பெயரோடு கிழமைப் பொருட்டாகியவாரும் வேற்றுமைத் தொகையாகி, மறுவில் கற்பின் வாணுதல் கணவன் என இரண்டாம் வேற்றுமைத் தொகையாகிய ஒரு பெயராயிற்று அது செல்லுறழ் தடக்கைக் கணவன் என இரண்டாம் வேற்றுமைத் தொகையாகி ஒருசொல் நீர்மைப்பட்டது அது மதனுடை நோன்றாள் என்பதனோடும், அவ்வாறே ஒட்டி நோன்றாட்டடக்கை கணவன் என ஒரு சொன்னடையாயிற்று. அது சேண் விளங்கவிரொளி என்பதனோடும் அவ்வாறே ஒட்டிச் சேண் விளங்கவிரொளி நோன்றாட்டடக்கைக் கணவன் என ஒரு சொன்னடையாயிற்று. இவ்வாறு சொன்னிலைமை உணர்க. இரண்டு சொல்லே தொகையாகிவாறு கண்டு கொள்க. * ''எல்லாத் தொகையும் ஒரு சொல் நடைய'' என்றோதினமையானும் ஆசிரியர் கருத்திதுவென்று கொள்க

## சூ 17 உவமத் தொகையே உவமவியல

உவமத்தொகை ஆமாறு உணர்த்திற்று.

உரை :- உவம இயல்புடையன உவமத்தொகையாம்.

உவமையாவது தொழிலினான் ஆதல், பயனான் ஆதல், வடிவினான் ஆதல், வண்ணத்தினான் ஆதல், இதுபோலும் இது என ஒன்றோடொன்று உவமை கூற வருவது. அவ்வுவமையும் உவமிக்கப்படும் பொருளும் விட்டிசைத்து நில்லாது செறிய நிற்பது உவமைத் தொகையாம்.

* தொல்-எச் 23

புலியன்ன பாய்த்துள், மழையன்ன வண்கை, துடியன்ன இடை, பொன்னன்னமேனி, என்பன புலிப்பாய்த்துள், மழைவண்கை, துடியிடை பொன்மேனி எனவரும். பிறவும் அன்ன இவை விரியும் காலத்து புலியை ஒக்கும் பாய்த்துள் மழையை ஒக்கும் வண்கை, எனவும் விரித்தலானும் காப்பி-ஞைப்பன் என இரண்டாவதன்கண் ஒப்பாதலானும் உவமத்தொகை என்ப-தொன்றில்லை, இவையும் வேற்றுமைத் தொகையாம எனின் ஒக்கும். மழையன்ன வண்கை என்றவழி இரண்டாமுருபு விரியாமலும் தானின்று உவமிக்கப்படும் பொருளைக் காட்டுதலின் இவ்வாறு வரும் சொற்களை நோக்கி உவமத் தொகை என்றார்.

அதனானே அன்றே, உவம இயல்புடையன உவமத்தொகை-யென ஓதுவாராயினர். இன்னும் உவம இயல உவமைத்தொகை என்றதனால் உவமையும் உவமிக்கப்படும் பொருளும் மாறி நிற்றலும் கொள்க. முகத்-தாமரை, கைம்மாரி எனவரும். இவை உருவகம் அன்றோ எனின், உருவகத் தொகையுள் அடங்காமையானும் உவமையுள் அடங்கும். இத்தொகையை வேற்றுமைத் தொகையொடு சேர ஓதியவதனான், அதனோடு இதற்கு ஒற்றுமை உண்டென்று கொள்க

சூ 18 *வினையின் தொகுதி காலத்தியலும்*

வினைத்தொகை ஆமாறு உணர்த்திற்று

உரை :- வினையின தொகுதி காலச் சொல்லோட நடக்கும்.

வினைச்சொல்லாவது தொழிலும் காலமும் பாலும் உணர்த்-தலின், பால் உணர்த்தும் சொல் முற்றுச் சொல்லாகி நின்று தொகைநிலை ஆகாமையானும், பால் காட்டாத வினையெச்சம் பெயரெச்சம் என்னும் இரண்டி-னுள்ளும், வினையெச்சம் முற்று வினைச்சொல்லோடல்லது முடியாமையானும் ஈண்டுத் தொகுவதும் விரிவதும் பெயரெச்சம் என்று கொள்க. அது தொகும் காலத்துக் காலப் பொருண்மை உணர்த்தும் சொல்லே தொகுவதும் விரிவதும் என்று கொள்க.

தொழிலும் பொருளும் விட்டிசைத்து நில்லாது ஒற்றுமைப் பட்டதனை வினைத்தொகை என்றார்.

கொல்லும் யானை

கொன்ற யானை

உண்ணும் நீர்
உண்ட நீர்
அரியும் வாள்
அரிந்த வாள்
செல்லும் இடம்
சென்ற இடம்
உண்ணும் பொழுது
உண்ட பொழுது
கொல்லும் கொலை
கொன்ற கொலை

என்பன கொல் யானை, உண்ணீர், அரிவாள், செல்லிடம், உண்பொழுது, கொல், கொலை, எனத்தொகும். பிறவும் அன்ன.

சூ 19 வண்ணத்தின் வடிவின் அளவிற் சுவையின்
என்று, அன்னபிறவும் அதன் குணம் நுதலி
இன்னது இதுவென வரூஉம் இயற்கை
என்ன கிளவியும் பண்பின் தொகையே

பண்புத் தொகை ஆமாறு உணர்த்திற்று.

உரை :- வண்ணம், வடிவு, அளவு, சுவை என்பனவற்றினும் அத்தன்மைய பிறவுமாகி, ஒரு பொருளினது குணத்தைக் கருதி இன்னது என ஒன்றை ஒன்று விசேடித்து வரும் இயல்பினை உடைய எல்லாச் சொல்லினும் பண்புத் தொகையாம்.

உதாரணம் :- கரியது குதிரை, வட்டம்பலகை, நெடியது கோல், தீவ்விது கரும்பு என்பன, கருங்குதிரை, வட்டப்பலகை, நெடுங்கோல், தீங்கரும்பு எனத்தொகும். அன்னபிறவும் என்றதனால் தண்ணீர், வெந்நீர், என்பன முதலாயின கொள்க. அஃதேல் இவை கரியகுதிரை, நெடியகோல் எனப் பெயரெச்ச வாய்பாட்டானும், பண்புபற்றி வருஞ்சொல் வினைக்குறிப்பாகி முடிதலானும் வினைத்தொகையுள் அடங்குமெனின், பண்புத்தொகை ஒரு வாய்பாட்டான் விரிககப்படாதென்பது எழுத்ததிகாரத்துட் கூறுதலின், பெயரெச்ச வாய்பாடும் வரும் வினைக் குறிப்பாதலானேயன்றே வினைத்தொகையோடு சேர ஓதுவாராயிற்று என உணர்க.

கருமையையுடைய குதிரை என வேற்றுமைத் தொகையாயும் அடங்குமால் எனின், இன்னது இதுவென ஒன்றை ஒன்று விசேடித்து வருதல் வேண்டும். அவ்வாறு வருங்கால் வேற்றுமைத் தொகை ஆகாது என்க.

வேற்றுமைத் தொகை, உவமத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, என்பன தம்முள் ஒருபுடை ஒப்புமையுடையவாதலிற், பாணினியார் இவற்றை தற்புருடசமாசம் என்று குறிப்பிட்டார்.

இனி, ''இன்னது இதுவென வரூஉம்
இயற்கை என்ன கிளவியும்''

என்றதனால், பண்புபற்றி வருதலேயன்றி பெயரினால் ஒன்றை ஒன்று விசேடித்து வந்து ஒட்டுப்படினும் பண்புத் தொகையாம் என்று கொள்க. வாணிகச் சாத்தன் சாரைப்பாம்பு, எனவரும். ஆயன் சாத்தன், ஆசிரியநல்லந்துவன் என எழுவாயும், பயனிலையுமாகி வருதலின்றி ஒட்டுப்படாத நிலைமையவாயினும் முதற்பெயர் விசேடணமாகிவரின் அதுவும் பண்புத் தொகையாமென்று கொள்க.

ஆ 20 *இருபெயர் பலபெயர் அளவின் பெயரே*
*எண்ணியற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி*
*எண்ணின் பெயரொடு இவ்வறு கிளவியும்*
*கண்ணிய நிலத்தே உம்மைத் தொகையே*

உம்மைத் தொகை ஆமாறு உணர்த்திற்று.

உரை :- இருபெயர் முதலாகச் சொல்லப்பட்ட அறுவகையும் உம்மைத் தொகை.

இருபெயராவது பொருட்பெயரும் தொழிற்பெயரும், அவை யாவன ; கபிலன், பரணன், ஆடல், பாடல், பல சொல்லாவது பன்மை குறித்த பெயர். அவை பார்ப்பார், சான்றோர், என்பன. மேற்சொல்லப்பட்டன ஒருமை குறித்தலின் இது வேறோதப்பட்டது. அளவின் பெயராவது அளக்கப்பட்ட பொருளைக் குறியாது, அளவு தன்னைக் குறித்து நிற்பது அவை உழக்கு, நாழி, குறுணி, பதக்கு, தூணி, கலம் என்பன. கூப்பிடு, காதம் என்பனவும்.

எண்ணியற் பெயராவது, எண்ணினால் பொருள் குறித்தியலும் பெயர். அவையாவன பதின்மர், ஐவர், என்பன. நிறைப்பெயர்க்கிளவி என்பது,

நிறுக்கப்பட்ட பொருளைக் குறியாது, நிறையின் பெயராகி வருவது. அவை குன்றி, கால், அரை, கழஞ்சு என்பன. எண்ணின் பெயராவது எண்ணப்பட்ட பொருளைக்குறியாது எண் தன்னையே குறித்து நிற்பது. அவை ஒன்று, இரண்டு பத்து, நூறு, என்பன

'அவ்வறு கிளவியும் கண்ணிய நிலைத்தே உம்மைத் தொகையே' என்பது அறுவகைப்பட்ட பெயரையும் குறித்த நிலைமைத்து. உம்மைத் தொகை என்றவாறு.

வரையறை ஓதாமையால் இரண்டும் பலவும் வரப்பெறும் என்று கொள்க கபிலனும் பரணனும் வந்தார் எனற்பாலது கபிலர் பரணர் வந்தார் எனவரும். ஆடலும் பாடலும் தவிர்ந்தார் என்பது ஆடல் பாடல் தவிர்ந்தார் எனவரும். பார்ப்பாரும் சான்றாரும் வந்தார் எனற்பாலது, பார்ப்பார், சான்றார் வந்தார் எனவரும் தூணியும் பதக்கும் குறையும் எனற்பாலது தூணிப் பதக்குக் குறையும் எனவரும். பதின்மரும் ஐவரும் போயினர் எனற்பாலது பதினைவர் போயினர் எனவரும் கழஞ்சும் அரையும் குறையும் எனற்பாலது கழஞ்சரை குறையும் எனவரும் பத்தும் இரண்டும் குறையும் எனற்பாலது பன்னிரண்டு குறையும் எனவரும்.

இனி புலிவிற்கெண்டை, அந்தணர் அரசர் வாணிகர், தூணிப் பதக்கு முந்நாழி, மாகாணி, அரைக்காணி, நூற்றுமுப்பத்து மூன்று எனவரும். பிறவும் அன்ன. ஏற்புழிக் கோடல் என்பதனால் எண்ணும்மையே ஈண்டு தொகுவதென்று கொள்க.

இடைச்சொல் ஓத்தினுள்ளும் உம்மை தொகும் என்றாரால் எனின், ஆண்டு விரிந்து நின்ற சொல்லின்கண் உம்மை தொகவும் பெறும் என்றார். ஈண்டு ஒட்டி நிற்கும் சொற்கு இலக்கணம் கூறினார் என்க.

**சூ 21** *பண்பு தொகவரூஉம் கிளவியானும்*
*உம்மை தொக்க பெயர்வயி னானும்*
*வேற்றுமை தொக்க பெயர்வயினானும்*
*ஈற்று நின்றியலும் அன்மொழித் தொகையே*

அன்மொழித் தொகை ஆமாறு உணர்த்திற்று.

உரை :- பண்பு தொகவரும் பெயர்க்கண்ணும் உம்மை தொக்க பெயர்க்கண்ணும் வேற்றுமை தொக்க பெயர்க்கண்ணும் இறுதி அன்மொழித்தொகை.

அல்லாத மொழி தொகுதலின் அன்மொழித் தொகையாயிற்று இம்மூவகைத் தொகையினும் ஈற்று நின்று இயலும் என்றதனால் முன்னும் பின்னும் என்ற இரண்டினும் உணரப்படும் பொருண்மை உடைத்து அன்மொழித் தொகை என்று கொள்க

உதாரணம் : * ''கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் அதுவல்லது இல்லை நிலக்குப் பொறை''

என்புழிக் கடுங்கோல் என்பது அஃது உடைய அரசர்க்குப் பெயராகி வருதலின் அன்மொழித் தொகையாயிற்று. கோலிற்கு அடையாகி நின்ற கடுமையும் அரசன்மேல் ஏறிய வாறு கண்டுகொள்க.

தகர ஞாழல் என்பது உம்மைத் தொகை இவையிற்றை உறுப்பாக அமைக்கப்பட்ட சாந்தினையும் தகர ஞாழல் என்பவாகலின், அன்மொழித் தொகையாயிற்று. தூணிப்பதக்கு என்றவழி அளவிற்குப் பெயராதலன்றி அளக்கப்படும் பொருளுக்குப் பெயராகிய வழி அன்மொழித் தொகையாம். இவை இரண்டு சொல்லும் அன்மொழித் தொகைமேல் ஏறியவாறு கண்டு கொள்க.

இஃது உம்மை பற்றிவந்தது. பொற்றொடி என்பது வேற்றுமைத் தொகை அதனை உடையாட்குப் பெயராகிய வழி அன்மொழித் தொகையாகி, தொடிக்கு அடையாகி நின்ற பொன் தொடியை உடையாளது செல்வத்தைக் காட்டுதலின் இவ்விரண்டு சொல்லும் அதனை உடையாளைக் குறித்தவாறும் அறிந்து கொள்க.

துடியிடை எனவும் தாழ்குழல் எனவும் உம்மைத் தொகைப் புறத்தும் அன்மொழித் தொகை வருமாலெனின் துடி என்பதூஉம், தாழ்குழல் என்பதூஉம் இடை, குழல் என்பவற்றிற்கு அடையாகிவரின் அல்லது அவற்றையுடையாட்குப் பெயராகுங்கால் இறுதி நின்ற பெயர்ப் பொருண்மை வந்து

* குறள் 570

ஏனைய வாராமையின் ஆகுபெயர் எனின் அல்லது அன்மொழித் தொகை ஆகாது எனக்கொள்க. அதனானேயன்றே இருபெயர் ஒட்டும் என ஆகுபெயர்க் கண் எடுத்தோதுவாராயிற்று என உணர்க.

ஆ 22 அவைதாம்
முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும்
இருமொழி மேலும் ஒருங்குடன் நிலையலும்
அன்மொழி நிலையாது அன்மொழி நிலையலும்
அந்நான்கென்ப பொருள்நிலை மரபே

மேற்சொல்லப்பட்ட பொருள் நிற்குமாறு உணர்த்திற்று.

உரை :- மேற்சொல்லப்பட்ட தொகைச் சொற்கள் தாம் முன்மொழிக்கண் பொருள் நிற்றலும் பின்மொழிக்கண் பொருள் நிற்றலும் இருமொழி மேலும் பொருள் நிற்றலும் அத்தொகை மேல் பொருள் நில்லாது பிறமொழிக்கண் பொருள் நிற்றலும் என நால்வகைப்படும் பொருள் நிற்குமாறு.

அவைதாம் என எல்லாப் பொருளும் சுட்டுதலான் அவற்றுள் இவ்விலக்கணம் அவ்வத் தொகைக்கு ஏற்றவழிக் கொள்ளப்படும்.

உதாரணம் :- மாம்பழம் தின்றான் என்றவழி தின்னப்பட்டது பழமாதலின் அத்தொகைச் சொல்முன் மொழிக்கண் பொருள் நின்றது

''இடைமுலைக் கிடந்து நடுங்கலானீர்'' என்றவழிக் கிடக்கப் பட்டது. முலையிடையாதலின் பின் மொழிக்கண் பொருள் நின்றது. குதிரைத் தேரோடிற்று என்றவழி குதிரையும் ஓடி, தேரும் ஓடுதலின் இருமொழி மேலும் பொருள் நின்றது. பொற்றொடி வந்தாள் என்றவழி பொற்றொடியை அணிந்தாள் மேல் பொருள் நிற்றலின் அம்மொழியால் வந்தமொழி மேல் பொருள் நின்றது. இவை நான்கும் வேற்றுமைத் தொகை. ஏனைத் தொகைகளுள்ளும் பொருள் நிற்குமாறு ஏற்பனவற்றுள் கண்டு கொள்க.

ஆ 23 எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய

தொகைச் சொற்கெல்லாம் உரியதோர் இலக்கணம் உணர்த்திற்று

உரை :- அறுவகைத் தொகைச்சொல்லும் ஒரு சொல் நடைய, என்றவாறு.

என்பது என்சொன்னவாறோ எனின் இரண்டு சொல்லாகி ஒட்டுப்பட்டபெயர் பிரிந்து நில்லாது ஒருபெயர் மாத்திரமாகி நிற்கும் என்றவாறு

உதாரணம் :- யானைக்கோடு கிடந்தது, துடியிடை நன்று, கொல்யானை ஓடிற்று, கருங்குதிரை வந்தது கழஞ்சரை நிறைந்தது, பொற்றொடி வந்தான் என எழுவாயும் பயனிலையும் ஆகியும் யானைக்கோட்டை, துடியிடையை கொல்யானையை, கருங்குதிரையை உவப்பதினுன்கை கழஞ்சரையை, பொற். றொடியை என உருபேற்றும் ஒருசொல் நடையவாகி வந்தவாறு கண்டுகொள்க.

ஆ 24 உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே
பலசொல் நடைத்தென மொழிமனர் புலவர்

எய்தியது ஒருமருங்கு மறுத்தலை நுதலிற்று.

உரை :- உம்மைத் தொகையுள் உயர்திணைப் பொருள்மேல் வரும் உம்மைத் தொகை பல சொன்னடைத்தாகித் தொடரவும் பெறும்.

உதாரணம் :- கபிலர் பரணர் வந்தார்.

அஃதேல், ஒட்டுப்பெயர் ஒருசொல் நடைத்து என்றல் அமையாது, பலசொல் நடைத்தாகியும் சிலசொல் வருதலின் எனின் ஆண்டும் ஒருசொல் நடைத்து என்பதே கருத்து. ஒருவர் என்பது பன்மைவினை கொண்டு முடிந்தாற்போல. உயர்திணை ஒட்டுப்பெயர் பன்மைவினை கொண்டு முடியும் எனச் சொன்முடிவு நோக்கிக் கூறினுர் என்க

ஆ 25 வாரா மரபின வரக்கூறு தலும்
என்னு மரபின எனக் கூறுதலும்
அன்னவை எல்லாம் அவற்றவற் றியலான்
இன்ன என்னுங் குறிப்புரை யாகும்

ஒருசார் சொற்களுக்குக் குறியிடுதல் நுதலிற்று.

உரை :- வாரா மரபினவற்றை வருமாகக் கூறுதலும் என்னு மரபினவற்றை என்றனவாகக் கூறுதலும் அத்தன்மைய பிறவும் எல்லாம் அவற்று அவற்று இயல்பினுன் இத்தன்மைய என்னும் குறிப்புரையாகும்.

வாரா மரபின என்றதனுல், செலவு, வரவு எனக்கொள்ளப்படும்.

என்னுமரபின என்றதனால் நினைத்தலும் சொல்லுதலும் கொள்ளப்படும். அன்னவை என்றதனால் காணாமரபின, கேளாமரபின என்பன கொள்ளப்படும். இவ்வாறு சொல்லுதல் குற்றமாயினும் சொல்லுவான் குறிப்பு வேருதலின் குறிப்பு மொழியாயிற்று. இதனானே சில சொற்களுக்குக் குறிப்பு மொழி எனவும் குறியிட்டாராம்.

உதாரணம் :- அம்மலை வந்து இதனோடு பொருந்திற்று. மலை வருதல் இன்மையின் அதுவும் இதுவும் ஒன்றிக் கிடந்தது என்னும் பொருள் நடை குறித்து இவ்வாறு சொல்லப்பட்டது.

''சென்றது கொல் மீண்டதுகொல் செவ்வி பெறுந்துணையும்
நின்றது கொல் நேர்மருங்கிற் கையூன்றி—மூன்றில்
முழங்கும் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாற்றம்
உழந்துபின் சென்ற என் நெஞ்சு''

இதனுள் வந்தனவெல்லாம் குறிப்புமொழி என்று கொள்க.

1 ''அன்னச் சேவல் அன்னச் சேவல்'' என்னும் பாட்டினுள் ''இரும்பிசிராந்தை அடியுறையெனின்'' என்பது அன்னச் சேவலைக் குறித்துக் கூறுதலின் சொல்லா மரபின சொல்லுமாக வந்த குறிப்புமொழி. 'நீலமுண்ட துகில்' நீலம் பற்றினதுகில் என்னும் பொருண்மை குறித்து உண்டதாகக் கூறப்பட்டது. பிறவுமன்ன.

ஆ 26 இசை நிறை அசை நிலை பொருளொடு புணர்தலென்
றவைமூன் றென்ப ஒருசொல் அடுக்கே

ஒருபொருள் மேல் ஒரோவழி வேறுபாடு உணர்த்திற்று.

உரை :- ஒரு சொல் அடுக்கிவரும் சொல் இசை நிறையாகி அடுக்குதல், அசைநிலையாகி அடுக்குதல், பொருளொடு புணர்ந்து வருதல் என மூவகை என்ப ஆசிரியர்.

ஒரு சொல் அடுக்கெனப் பொதுவாக ஓதினமையால் பெயர் முதலாகிய நான்கு சொல்லும் அடுக்கம் பெறும் என்று கொள்க.

---

1. புறம் 67

உதாரணம் :- ''துறக்குவன் அல்லன் துறக்குவன் அல்லன் தொடர்வரை வெற்பன் துறக்குவன் அல்லன் தொடர்புளினையவை தோன்றி-யற்று'' இதனுள் முந்துற்ற சொற்பொருள் உணர்த்திற்று. ஏனைய இசைநிறைக்கண் வந்தன.

இசைநிறையாவது, பாட்டுக்குறித்துவரும் அசைநிலை செய்-யுளின்பம் குறித்துவரும்.

1 ''குறங்கென மால்வரை ஒழுகிய வாழை, வாழைப் பூவெனப் பொலிந்த ஓதி'' என்றவழி வாழை என்னும் சொல் இரண்டனுள் ஒன்று அசைநிலையாயிற்று.

2 'நின்றன நின்றன நில்லா எனவுணர்ந் தொன்றின வொன்றின வல்லே செயிற் செய்க'—

நின்றன பலவாதலின் அடுக்கிவந்த சொல்லும் பொருள் குறித்து நின்றது. பிறவுமன்ன

## சூ 27 இசைப்படு பொருளே நான்கு வரம்பாகும்

இசை அடுக்கிற்கு வரையறை உணர்த்திற்று.

உரை :- இசைப் பொருட்கண் அடுக்கிவரும் சொல்லிற்கு எல்லை நான்கு என்றவாறு.

உதாரணம் :- ''ஒக்குமே ஒக்குமே ஒக்குமே ஒக்கும் விளக்கினிற் சீறெரி ஒக்குமே ஒக்கும், குளக்கொட்டிப் பூவின் நிறம்''

இதனுள் ஒக்கும் என்னும் சொல் நான்கு வரம்பாகி இசை நிறைக்கண் வந்தவாறு கண்டு கொள்க.

## சூ 28 விரை சொல் அடுக்கே மூன்று வரம்பாகும்

குறிப்புப் பொருள் உணர்த்தும் ஒருசொல் அடுக்கிற்கு வரை-யறை உணர்த்திற்று.

உரை : விரைவுப் பொருண்மை குறித்த ஒருசொல் அடுக்கிற்கு எல்லை மூன்றாகும்.

உதாரணம் :- பாம்பு, பாம்பு, பாம்பு, தீ, தீ, தீ. இவற்றுள்

1. புறம்-87 2. சிறுபாண்-20

முந்துற்றன பொருள் உணர்த்தின. ஏனைய பொருள் இலவாயினும் விரைதல் என்பது குறித்தலின் பொருளொடு புணர்ந்த அடுக்காயிற்று. இசை நிறைக்கும் பொருளொடு புணர்தற்கும் எல்லை கூறி அசைநிலை அடுக்கிற்கு எல்லை கூறாமை-யின் அஃது இரண்டல்லது வரப்பெறாதென்று கொள்க.

சூ 29 *கண்டிர் என்று கொண்டிர் என்று*
*சென்றது என்று போயிற்று என்று*
*அன்றி அனைத்தும் வினாவொடு சிவணி*
*நின்றவழி இசைக்கும் கிளவி என்ப*

இதுவும் ஒருசார் அசைநிலை ஆமாறு உணர்த்திற்று.

உரை :- கண்டிர் என்பது முதலாக ஓதப்பட்ட சொற்கள், வினாப்பொருள் உணர்த்தும் சொல்லொடு கூடி நின்றவழி அப்பொருள்நிலை இசைக்கும் சொல்லாம்.

எனவே, சொற்களோடு கூடாதவழி அசைநிலையாம் என்ற-வாறும். வினாவொடு கூடுதலாவது, கண்டீரோ, கண்டீரோ என, கண்டிர் என்-பன. இனி, அவை அசைநிலை(யாக) வருமாறு.

''படையிடுவான் மற்கண்டீர், காமன் படையடும் பாலொடு கோட்டம்புகின்'' என்பதனுள் கண்டீர் என்பது அசைநிலையாயிற்று. ஏனைய-வற்றிற்கு வந்துழிக் கண்டுகொள்க.

சூ 30 *கேட்டை என்று நின்றை என்று*
*(காத்தை என்று) கண்டை என்று*
*அன்றி அனைத்தும் முன்னிலை அல்வழி*
*முன்னுறக் கிளந்த இயல்பா குமே*

இதுவும் அது.

உரை :- இந்நான்கு சொல்லும் முன்னிலை வினைச்சொல் அல்வழி அசைநிலையாகும்.

உதாரணம் : ''மோரொரொடு வந்தாள்தகை கண்டை யாரொடுஞ் சொல்லி......'' என்றவழி, கண்டை என்பது அசைநிலையாயிற்று. ஏனையவும் வந்தவழிக்கண்டு கொள்க.

சூ 31 இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றச்
சிறப்புடை மரபின் அம்முக்காலமும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ விடத்தான் வினையினும் குறிப்பினும்
மெய்ம்மையானும் ஈரிரண்டாகும்
அவ்வா றென்ப முற்றியல் மொழியே

சூ 32 எவ்வயின் வினையும் அவ்வயில் நிலையும்

சூ 33 அவைதாம்
தத்தம் கிளவியடுக்குந வரினும்
எத்திறத் தானும் பெயர் முடிபினவே

இவை மூன்று சூத்திரத்திற்கும் பொருள் வினையியலுள் உரைக்கப்பட்டது.

சூ 34 பிரிநிலை வினையே பெயரே ஒழியிசை
எதிர்மறை உம்மை எனவே சொல்லே
குறிப்பே இசையே ஆயீரைந்தும்
நெறிப்படத் தோன்றும் எஞ்சுபொருட்கிளவி
எச்சக் கிளவி ஆமாறு உணர்த்திற்று.

உரை :- நெறிப்படத் தோன்றும் எஞ்சு பொருள் உணர்த்தும் கிளவி, பிரிநிலை முதலாக இசை ஈருக ஓதப்பட்ட பத்தும் :

எஞ்சு பொருட்கிளவியாவது சொல்லா தொழிந்த பொருளை இனிது விளக்கும் சொல். நெறிப்படத் தோன்றுதலாவது, வாக்கியமாகிய தொடர்மொழிக்கண் முன்னும் பின்னும் நின்ற சொல்லை நெறிப்படுத்தற்கு ஆண்டுத் தோன்றுதல். அது புலப்பட நில்லாமையின் எச்சமாயிற்று. பிரிநிலை எச்சமாவது, பல பொருளில் ஒன்று பிரிந்தவழி பிரிக்கப்பட்ட பொருண்மையும் தோன்ற நிற்பது. வினையெச்சமாவது ஒரு வினைச்சொல் எஞ்சி நிற்பது. பெயரெச்சமாவது ஒருபெயர் எஞ்சி நிற்பது.

அஃதேல் வினையெச்சம், பெயரெச்சம் என்பன வினையியலுள்

ஓதப்பட்டன அன்றோ எனின், ஆண்டு ஓதப்பட்டன பெயரையும் வினையையும் ஒட்டி நின்றியலும், ஈண்டையன அன்னவல்ல ஆமாறு காரணத்தால் விளங்கும்.

ஒழியிசை எச்சமாவது, சொல்லப்பட்ட பொருளை ஒழியச் சொல்லா தொழிந்து நின்ற பொருளும் தோன்ற நிற்பது.

எதிர்மறை எச்சமாவது, ஒருபொருளைக் கூறியவழி அதனின் மாறுபட்ட பொருண்மையும் அதனானே உணர நிற்பது.

உம்மை எச்சமாவது, உம்மை கொடுக்க வேண்டும்வழி அஃது எஞ்சி நிற்றல் எனவென் எச்சமாவது எனவென்று சொல்ல வேண்டும்வழி அச்சொல்லே நிற்பது.

சொல்லெச்சமாவது, ஒருசொல்லின் பொருளை விதந்தோதிய வழி அவ்விதப்பினானே பிறிது பொருளைக் கொள்ளுமாறு நிற்பது.

குறிப்பெச்சமாவது, சொற்பொருள் இன்றிச் சொல்லுவான் குறித்த பொருள் எஞ்சி நிற்பது.

இசையெச்சமாவது, ஒருசொல் பொருளன்றிப் பிறிதுமொரு பொருளை இசைக்குமாறு வருவது. இவையெல்லாம் வழக்கினும் செய்யுளினும் வந்து பொருளை விளக்குதலின் எடுத்தோதினர். உதாரணம் தத்தம் சிறப்புச் சூத்திரத்துட் காட்டுதும்.

சூ 35 *அவற்றுள்*
*பிரிநிலை எச்சம் பிரிநிலை முடியின*

பிரிநிலை எச்சம் முற்றுப்பெறுமாறு உணர்த்திற்று.

உரை :- மேற்சொல்லப்பட்டவற்றுள் பிரிநிலையாகிய எச்சம் அதன்கணின்றும் பிரிக்கப்பட்ட பொருளொடு தொடர்ந்து முடிவு பெறும்.

இவன் கல்வியுடையன் என்றவழி சொல்லுவான் இவ்வையத் தாருள் எனக் கருதினானாயின் இவ்வவையத் தாருள் என்பது எஞ்சி நின்று பிரிநிலை எச்சமாயிற்று இவட்குக் கண் அழகிது என்றவழி மற்றுள்ள உறுப்புக்களில் என்பது எஞ்சி நின்றது இவை பிரிக்கப்பட்ட பொருளொடு தொடர்பு பட்டு முற்றுப்பெற்றதெனக் கொள்க.

சூ 36 வினையெஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்
நினையத் தோன்றும் முடிபா கும்மே
ஆவயிற் குறிப்பே ஆக்கமொடு வருமே

வினையெச்சத்திற்கு முடிபு உணர்த்திற்று

உரை:- வினையெச்சமாக உடைய சொல்லிற்கு வினையும் வினைக்குறிப்பும் நினையத் தோன்றிய முடிபாகும். ஆண்டு வினைக்குறிப்பாகச் சொல்லோடு ஒத்து வரும்.

நினையத்தோன்றும் என்றதனால் ஆராயத்தோன்றும் என்று கொள்க. எனவே வினையியலுட் கூறிய வினையெச்சம் ஆராய்தல் வேண்டாமையின், அஃது அன்றென்று கொள்ளப்படும்.

உதாரணம்:- 1 ''அழுக்காறுடையார்க்கது சாலும் ஒன்னார் வழுக்கியும் கேடீன்பது'' என்பதனுள் கேடுபயத்தற்கு அழுக்காறு தானே அமையும், பகைவர் கெடுக்குதல் தப்பியும்...வேண்டுதலின், வரும் என்பது எஞ்சி நின்றது. 2 ''அற்றார் அழிபசி தீர்த்தல் அஃது ஒருவன் பெற்றான் பொருள் வைப்புழி'' என்பதற்குப் பொருள் அற்றாரது குணங்களைச் செய்ய ஒருவன்தான் தேடின பொருள் வைத்தற்கு இடம் பெற்றானும் என உரைக்க வேண்டுதலின் ஆம் என்னும் வினைக்குறிப்பு எஞ்சி நின்றது.

சூ 37 பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே

பெயரெச்சத்திற்கு முடிபு உணர்த்திற்று.

உரை:- பெயரெச்சமாக உடையசொல் பெயரொடு முடிவு பெறும் என்றவாறு.

உதாரணம்: 3 ''துறக்குவன் அல்லன் துறக்குவன் அல்லன் தொடர்வரை வெற்பன் துறக்குவன் அல்லன், தொடர்புள் இனையவை தோன்றி' என்றவழி, அவன் தொடர்பு என வேண்டுதலின் அவன் என எஞ்சி நின்றது.

4 'உயர்திணை என்மனார் மக்கட்சுட்டே' என்பதனுள் என்மனார் ஆசிரியர் என வேண்டுதலின் ஆசிரியர் பெயர் எஞ்சி நின்றது.

1. குறள்-165 2. குறள் 22 3 கலி-41 4. கிளவி-1

''மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே, அரும்பிய சுணங்கின் அம்பகட்டிளமுலைப் பெருந்தோள், நுணுகிய நுசுப்பிற் கல்கெழு கானவர் நல்குறு மகளே''

இதனுள் எனக்கென வேண்டுதலின் (பெயர்) எஞ்சி நின்றது.

சூ 38 *ஒழியிசை எச்சம் ஒழியிசை முடிபின*

ஒழியிசை எச்சத்திற்கு முடிபு உணர்த்திற்று.

உரை :- ஒழிந்த சொல்லை எச்சமாக உடையது, அவ்வச் சொல்லினால் பொருள் முடிவு பெறும்.

உதாரணம் :- இவர் கல்வியாற் குறைவிலர் என்றவழி ஒழுக்கத்தாற் குறையுடையர் என்றுதல் பொருளால் குறையுடையர் என்றுதல் ஒரு பொருள் குறித்தவழி அப்பொருள் பட்டவாறும அதனானே அச்சொல் முற்றுப் பெற்றவாறும் கண்டு கொள்க.

சூ 39 *எதிர்மறை எச்சம் எதிர்மறை முடிபின*

எதிர்மறை எச்சம் முடியுமாறு உணர்த்திற்று.

உரை :- எதிர்மறைப் பொருண்மையை எச்சமாக உடையது அவ்வெதிர் மறையால் பொருள் முடிவு பெறும்.

உதாரணம் :- 1 ''இம்மைப் பிறப்பிற் பிரியலம் என்றேனாக்
கண்ணிறை நீர் கொண்டனள்''

என்பதனுள், மறுபிறப்புப் பிரிவேம் என நினைத்துக் கண்ணிறை நீர் கொண்டனள் என பொருள் உரைக்க வேண்டுதலின், எதிர்மறை எஞ்சி நின்று அதன் எதிர் மறைப் பொருளொடு முடிந்தவாறு கண்டு கொள்க.

சூ 40 *உம்மை எச்சம் இருவீற்றானும்*
*தன் வினை ஒன்றிய முடிபாகும்மே*

உம்மை எச்சம முடியுமாறு உணர்த்தற்று.

உரை :- உம்மையாகிய எச்சம் இரண்டு வேறுபாட்டின் கண்ணும் தன்வினையொடு பொருந்திய முடிபாகும்.

இருவீறுவன, முன்னிற்சொல்லும் பின்னிற்சொல்லும்.

1. குறள்-1312

தன்வினையாவன, இரண்டு சொல்லின்கண்ணும் உடன்பாடாகியும், மறையாகியும் வரும் தொழிலும் காலமும் ஒத்த வினைச்சொல். அது உம்மைக் கேற்ற வினையாதலின் தன்வினை என்றார்.

ஒன்றிய முடிபாகுது. அவ்வினையொடும் பொருந்திய முடிபாகும் என்றவாறு. ஏனை எச்சம் போலத்தான் வந்து முடிதலே அன்றிதான் வந்தாலும் சார்ந்த வினையொடு கூடியல்லது பொருட்கு முடிபாகா.

உதாரணம்:- சாத்தனும் வந்தான், கொற்றனும் வந்தான் என்பாலன, சாத்தன் வந்தான், கொற்றன் வந்தான் எனவரின் ஆண்டு உம்மை எஞ்சி நின்றதெனக.

இருவீற்றுறும் என்ற உம்மையால், தனிவரினும் என்று கொள்க "வதுவை வந்தவன் பறழ்க்குமரி இருதோள் பற்ற" என்றவழி இருதோளும் என்னும் உம்மை எஞ்சி நின்றது.

இடைச்சொல் ஓத்தினுள், "உம்மை எண்ணின் உருபு தொகல் வரையார்" எனவும் இவ்வோத்தினுள் 'உம்மைத் தொகை' எனவும் 'உம்மை எச்சம்' எனவும் கூறினார். ஆதலின், அவற்றின் வேறுபாடு புலப்பட்டிலது எனின், பல பொருளை எண்ணி ஒரு வினையான் முடிக்கும்வழி சொற்றோறும் உம்மை கொடுத்து இடைநின்ற ஒன்றானும் இரண்டானும் சொல்லின்கண் உம்மை கொடாதவழி, உம்மை எண்ணாகுமோ, ஆகாதோ என நின்ற ஐயம் கொளற் குறித்து ஆண்டு, "உம்மை எண்ணின் உருபு தொகல் வரையார்" என்று ஓதுதலின் உம்மை ஆண்டுத் தொக்கதெனக.

இரண்டானும் பலவானும் பெயரை அடுக்கி, ஒருசொற்போல ஒரு வினையான் முடிக்கும் வழி, உம்மைத் தொகை என்க.

தனித்தனி வினைகொண்டு உம்மை பிரிந்து நின்றே பொருள்படும் சொற்கள் செய்யுளகத்து எஞ்சி நிற்கின்றதனை எஞ்சிற்றெனக. அஃதற்றாக, காலமும் வினையும் ஒத்தல் வேண்டும் என்றது என்னை?

சாத்தன் வந்தான், கொற்றன் வரும் எனவும் காலமும் வினையும் ஒவ்வாமையும் வருமாலெனின் அவை உம்மை எஞ்சிய சொல் அன்மை வருகின்ற சூத்திரத்தான் விளங்கும்.

சூ 41 தன்மேற் செஞ்சொல் வரூஉம் காலை
நிகழும் காலமொடு வாராக் காலமும்
இறந்த காலமொடு வாராக் காலமும்
மயங்குதல் வரையார் முறைநிலையான

மேற்சொல்லப்பட்ட உம்மைப் பொருட்கண் வரும் வேறுபாடு உணர்த்திற்று.

உரை :- உம்மைப் பொருட்கண் உம்மை கொடாது செஞ்சொல்லாகி வருகின்றவற்று நிகழ்காலத்தொடு எதிர்காலமும் இறந்த காலத்தொடு எதிர்காலமும் மயங்குதல் நீக்கார்—முறைபிறழாமல் நிற்கும்வழி.

உதாரணம் :- சாத்தன் வாரா நின்றான் கொற்றன் வருவன் போம், சாத்தன் வந்தான், கொற்றன் வருவனபோம என இவையும் உம்மை கொடாமல் பொருள்பட்டவாறும் காலமும் தொழிலும் மயங்கியவாறும் கண்டு கொள்க. அஃதேல் சாத்தனும் வாரா நின்றான், கொற்றனும் வருவன என உம்மை கொடுத்து வழக்கு நிகழுமால் எனின் உம்மை கொடுக்கின்றது. பொருள் வேற்றுமையுணர்தற்கன்றே; அது கொடாக்காலும் பொருள் விளங்குமாயின் கொடுத்தனல் பயனின்று என்க. இவ்வாறு செய்யுளகத்து வரின் இசை நிறைத்தற் பொருட்டு வந்ததென்க.

சூ 42 எனவென் எச்சம் வினையொடு முடிமே

எனவென் எச்ச முடிபு உணர்த்திற்று.

உரை :- எனவென்று சொல்லப்பட்ட எச்சம் வினையொடு முடியும் உம்மையால் பெயரொடு முடியுமென்று கொள்க முடிதலாவது அவற்றைச் சார்ந்து நின்று பொருளை உணர்த்தல். முடிதல் எனினும் தொடர்தல் எனினும் ஒக்கும்.

உதாரணம் : 1 "வீழ்ணர்ந்தோர்க்கும் வியப்பாமால் இந்நின்ற, வாடல் முதியாள் வயிற்றிடம்-கூடார், பெரும்படை வெள்ளம் நெறிதரவும பேரா, இரும்புலி சேர்ந்த இடம்'' என்பதனுள் இரும்புலி சேர்ந்த இடம். வியப்பாமால் எனப்பொருள் உரைக்க வேண்டுதலின், என என்பது எஞ்சி நின்ற வியப்பென்பதனோடு தொடர்ந்தது இதுவினை.

---

1- பு-வெ-19

1 ''பிரிநிலை வினையே'' என்னும் சூத்திரத்துள், 'குறிப்பே இசையே ஆயீரைந்தும்' என்றவழி குறிப்பே இசையே என அவ்வீரைந்தும் எனப் பொருளுரைக்க வேண்டுதலின் என என்பது எஞ்சி நின்றது. ஈரைந்-தென்னும் பெயரொடு முடிந்தது.

சூ 43 *எஞ்சிய மூன்றும் மேல்வந்து முடிக்கும்*
*எஞ்சு பொருட் கிளவி இலாவன மொழிப*

சொல் எச்சத்திற்கும் குறிப்பெச்சத்திற்கும் இசை எச்சத்திற்கும் உரியதோர் மரபு உணர்த்திற்று.

உரை :- மேல் அதிகரிக்கப்பட்ட பத்தினுள்ளும் முடிவு சொல்-லாது ஒழிந்த மூன்று சொல்லும் வந்து முடிக்கும் சொற்களை எஞ்சி நிற்றல் இல.

எனவே முந்துற்ற எழுசொல்லும் வந்து முடிக்கும் சொற்களை உடைய என்பதூஉம், இவை நின்ற வாற்றால் பொருள் வேறுபடூஉம் என்பதும் கூறியவாறும். இதன் பொருள் வருகின்ற சூத்திரத்தால் விளங்கும்.

சூ 44 *அவைதாம்*
*தத்தம் குறிப்பின் எச்சம் செய்யும்*

இதுவும் அது.

உரை : மேற்சொல்லப்பட்ட மூன்று சொல்லும் வந்த சொல்லை உடைய வல்லவாயினும் தத்தம் குறிப்பினால் எஞ்சிய பொருண்மையை உணர்த்தும் உதாரணம் சிறப்புச் சூத்திரத்துட் காட்டுதும்.

சூ 45 *சொல்லென் எச்சம் முன்னும் பின்னும்*
*சொல் அளவல்லது எஞ்சுதல் இன்றே*

சொல் எச்சம் ஆமாறு உணர்த்திற்று

உரை :- சொல் என்னும் எச்சம் சொல்லாவதற்கு முன்னும் பின்னும் மற்றொரு சொல் எஞ்சி நிற்றல் இல்.

எனவே அச்சொல்லினாலே உய்த்துணர்ந்து கொள்ளப் பிறிது ஒரு பொருள் வரும் என்றவாறும்.

உதாரணம் :- 2 'கடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலில் நீங்கின் அதனைப் பிற''

1. தொல-எச்-31 2. குறள்-495

1 ''காலாழ் களரின் நரியடும் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு''

என்றவழி, தமது நிலத்தில் எளியவர் நின்ருலும் பிறரது நிலத்தில் வலியாரும் எளியராவர் என்னும் பொருண்மை இச்சொல் தானே உணர்த்தலின் சொல்லெச்சமாயிற்று.

ஆ 46 அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்

இனிக்குறிப்பெச்சம் உணர்த்தற்பாலது.

அது, ''தெரிபு வேறு நிலையலும் குறிப்பிற்றேன்றலும், இருபாற்றென்ப பொருண்மை நிலையே'' எனப் பெயரியலுள் ஓதுதலால் அதன் கண் சில சொற்களை மரபு வழுவமைக்க வேண்டுதலின் அவை அமையுமாறு உணர்த்திற்று.

உரை :- அவைக் களத்து வழக்க மல்லாத சொல்லை மறைத்துப் பிற வாய்பாட்டான் மொழிக.

மறைத்துச் சொல்லுதல் இருவகைப்படும் மங்கள மரபிற் கூறுதலும் இடக்கர் அடக்கிக் கூறுதலும் என.

உதாரணம் :- மங்கல மரபினுற் கூறுவது : செத்தாரைத் துஞ்சினுர் என்றும், ஓலையைத் திருமுகம் என்றும் கூறுதல்.

இவை அவைக்களத்துப் பட்டாங்கு கூறின் குற்றம் பயக்குமாதலின் அவ்வாறு கூறினுர் என்க.

இடக்கர் அடக்கிக்கூறுதல், கண்கழீஇ வருதும் கால்மேல் நீர்பெய்தும் எனப்பிற வாய்பாட்டான் வரும் பொருண்மையை மறைத்துச் சொல்லுதல். இவை வேறென்றைக் குறித்துக் கூறுதலின் குறிப்பெச்சமாயின.

ஆ 47 மறைக்கும் காலை மரீஇய தொராஅல்

மேலதற்கு ஓர் புறநடை உணர்த்திற்று.

உரை :- அவையல்லாத சொற்களைச் சொல்லுங்கால் (அங்கக் காலத்து) தேர்ந்த சொல்லை மறையா தொழிக.

உதாரணம் :- மருவிப் போந்தன, ஆப்பீ, கோமூத்திரம் என்றற் போல்வன.

---

1. குறள் 500

சூ 48 ஈதா கொடுவெனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகிடன் உடைய
அவற்றுள்
ஈயென் கிளவி இழிந்தோன் கூற்றே
தாவென் கிளவி ஒப்போன் கூற்றே
கொடுவென் கிளவி உயர்ந்தோன் கூற்றே
இதுவும் ஒருசார் குறிப்பெச்சம் உணர்த்திற்று.

உரை :- ஈ, தா, கொடு என்னும் சொற்கள் ஒருபறவையின் பெயரும், தொழிற் பொருண்மையும், கொடுமையும் ஆதலன்றி இரப்போன் கூற்றாதலும் உரிய. அவற்றுள் ஈ என்பது இழிந்தோன் கூற்று என்பதூஉம் தா என்பது ஒப்போன் கூற்று என்பதூஉம் கொடு என்பது உயர்ந்தோன் கூற்று என்பதூஉம் உணர்த்தும்.

இச்சொற்கள் தம்மானே இழிந்தான், ஒப்பான், மிக்கான் என்னும் பொருண்மை எஞ்சி நிற்றலின் குறிப்பெச்சமாயிற்று.

சூ 49 கொடுவென் கிளவி படர்க்கை யாயினும்
தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பில்
தன்னிடத் தியலும் என்மனார் புலவர்
மேலதற்கோர் வழுவமைதி உணர்த்திற்று.

உரை :- மேற்சொல்லப்பட்டவற்றுள் கொடு என்னும் சொல் படர்க்கையாயினும் தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பினால் தன்னிடத்தியலும் என்று சொல்லுவர் புலவர்.

தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பெச்சமாயிற்று இச் சூத்திரத்தானும் குறிப்பெச்சம் அதிகாரப்பட்டவாறு கண்டுகொள்க.

சூ 50 பெயர்நிலைக் கிளவியின் ஆ அகுநவும்
திசைநிலைக் கிளவியின் ஆ அகுநவும்
தொன்னெறி மொழிவயின் ஆ அகுநவும்
மெய்ந்நிலை மயக்கின் ஆ அகுநவும்

*மந்திரப் பொருள் வயின் ஆ அகுநவும்*
*அன்றி அனைத்தும் கடப்பாடிலவே*

அதிகார முறையான் இசை எச்சம் ஆமாறு உணர்த்திற்று.

**உரை :-** பெயர்நிலைக் கிளவிகளின் ஆகும் சொல்லும் திசைநிலைக்கிளவிகளின் ஆகும் சொல்லும் பழமைத்தாகி நெறிப்பட வரும் சொல்லின் ஆகும் சொல்லும் பொருள்நிலை மயக்கின் ஆகும் சொல்லும் மந்திரப் பொருள் வயின் ஆகும் சொல்லும் அவ்வனைத்தும் இச்சொற்கு இம்முறையை என்னும் நியமம் இல.

எனவே தன்பொருள் ஒழியப் பிறிது பொருள்படும் என்றவாறும். ஒருசொல் இரண்டு பொருள்பட நின்றவழி ஒருபொருளை உணர்த்தும் இசை எஞ்சி நிற்குமன்றே. அஃது இசை எச்சமாவது என்று கொள்க. ஆகும்சொல் என்றமையால் ஏற்பன கொள்ளப்படும்.

இசை எச்சம் ஐந்து வகை என்பது போந்தது. அவற்றுள் பெயர்நிலைக் கிளவியின் ஆகுவன :

வேங்கை என்பது ஒருமரத்திற்குப் பெயராயினும் புலிக்கும் பெயராயிற்று அதுவுமன்றிக் கைவேம் என்றும் பொருளும் பட்டது. இவ்வாறு ஒருசொல்லினனே பிறிது பொருள் உணரின அதை உணர்த்தும் ஓசை எஞ்சி நின்றது என்க.

இது பல பொருள் ஒருசொல் அன்றோ எனின், ஆம் பல பொருட்கண் ஒருசொல் வருதற்கு இலக்கணம் ஈண்டு உணர்த்துகின்றது. என்னை உணர்த்தியவாறு எனின் வேங்கை என்னும் சொல் புலிப்பொருண்மை உணர்த்தி...பின் பிற பொருள்...உணர்ந்து...வதல்லாது...நுகட...யுணர்த்தும்... ஓசை எஞ்சி நின்றதெனினல்லது விடை பெருதாம். அதனுனே இலக்கணம் உணர்த்தியவாறு அறிந்து கொள்க.

'திசைநிலைக் கிளவியின் ஆ அகுநவும்' என்பது செந்தமிழ் நாட்டு வழங்கும் சொல் திசைச் சொல்லாகியவழிப் பொருள்வேறுபடுதல். கரை என்பது வரம்பிற்குப் பெயராயினும் கருநாடர் விளித்தற்கண் வழங்கும் தொன்னெறி மொழி என்றதனு ஏ முந்து...வழக்காகித் தொடர்பு பட்டுச் செய்யுளகத்தும், பா வழக்கினும் வரும் தொடர்மொழி என்று கொள்ளப்படும்.

'குன்றேருமா' என்றவழி குன்று, ஏறு, ஆ, மா எனவும் படும். குன்றின்கண் ஏருநின்ற ஆமா எனவும்படும். குன்றின்கண் ஏரு ஆமா என்னும் பொருளும்படும்.

இவ்வாறு வரும் பொருட்கெல்லாம் இத்தொடர் மொழிதானே சொல்லாகி இதன்கண் இசை வேறுபட்டுப் பொருள் வேறுணர்த்தலின் இப்பொருண்மைகளை உணர்த்தும் இசை எஞ்சி நின்றது.

1 ''காதற் கொழுதனைப் பிரிந்தலர் எய்தா
மாதர்க் கொடுங்குழை மாதவி தன்னொடும்

என்றவழி இச்சொல்லெல்லாம் குருக்கத்திக்கும் அடையாகி, மாதவி என்னும் ஒரு பெண்பாற்கும் அடையாகிப் பொருள் வேறுபடுதலின் இசை எச்சமாயிற்று. இது தனிமொழியாகிய பெயர்நிலைக்கிளவியின் அடங்காமையின் தொடர்மொழி என்று வேறு ஓதினர்.

மெய்ந்நிலை மயக்கமாவது, பொருள்நிலைமை மயக்கம் கூறுதல்

''குருகு கருவுயர்ப்ப, ஒருதனி ஓங்கிய திருமணிக் காஞ்சி''

என்றவழி குருகு என்பது மாதவி என்னும் கொடிக்கும் பெயராதலின் அப்பெயருடையதனைக் குருகு என்றார். காஞ்சி என்பது மேகலைக்குப் பெயராதலின், அது மணிக்காஞ்சி என்று ஒட்டி மணிமேகலை என்பாள் மேல் வந்தது.

இவ்வாறு பொருள்நிலை மயங்க வருவனவும் இசையெச்சமாம் என்றவாறு.

மந்திரம் என்பது பிறர் அறியாமல் தம்முள்ளும் அறிய மறைத்துக்கூறும் சொல். அதன்கண் ஆகுவன உலகினுள் வழங்குகின்ற பொருட்கு, தாம் அறிகுறி இட்டு ஆண்டுவரும் குழுவின் வந்த குறிநிலை வழக்கு அது வெளிப்பட்ட சொல்லால் உணரும் பொருட்கு, மறைத்துப் பெயரிடுதலும் எழுத்திற்குப் பிறபெயரிட்டு வழங்குதலும் என இருவகைப்படும். இவையும் பொருள் வேறுபடுத்தி வழங்குதலின் இசை எச்சமாயின.

அவற்றுள் பொருட்கு வேறுபெயர் இட்டன. வண்ணக்கர்,

1. மணி ; 4556

காணத்தை நீலம் என்றலும் யானைப்பாகர் ஆடையைக் காரை என்றலும் முதலாயின.

எழுத்திற்கு வேறுபெயர் இட்டு வழங்குமாறு:

பண்ணைச் சுமந்தவன்றனும்
வரதராசன் மகன்றனும்,
எண்ணிய வரகாலி மூன்றும்
இரண்டுமரம், ஓர்யாறும்,
திண்ணம் அறியவல்லார்க்குச்
சிவகதியைப் பெறலாமே''

இதனுள் மண்ணைச் சுமந்தவன்—ந, வரதராசன் மகன்—ம, வரகாலி மூன்று—சி இரண்டு மரம்—வா, ஓர்யாறு—ய, எனக்கூற நமசிவாய எனப் பொருளாயிற்று. பிறவுமன்ன.

சூ 51 *செய்யா என்னும் முன்னிலை வினைச்சொல்*
*செய்யென் கிளவி ஆகிடன் உடைத்தே*

இது வினைச்சொற்கு உரியதோர் வேறுபாடு உணர்த்திற்று.

உரை : செய்யா என்னும் ஆய் ஈற்று முன்னிலை வினைச்சொல் செய் என்னும் ஏவல் குறித்த வினைச்சொல்லுமாகி வரும்.

உதாரணம் :- நீ எம் இல்லத்து உண்ணாய் என்றவழி உண்ணுமையைக் குறித்தலே அன்றி, உண்க என்பதும் குறித்தவாறு கண்டு கொள்க. இவ்வாறு வருவதும் இசையெச்சம். இன்னும் இச்சூத்திரத்திற்குப் பொருள், செய்யாய் என்னும் வினைச்சொல் செய் எனக் குறைந்து நிற்கவும் பெறும். உண்ணாய் என்பது உண் எனவரும்.

சூ 52 *முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்*
*அந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே*

இதுவும் முன்னிலை வினைச்சொற்கு உரியதோர் வேறுபாடு உணர்த்திற்று.

உரை :- முன்னிலை வினைச்சொற்கண் ஈகாரமும் மகரம் ஊர்ந்த ஏகாரமும் முன்னிலை மரபினை உடைய மெய்யை ஊர்ந்து வரும் என்றவாறு,

முன்னிலை மரபின் மெய்யாவன உண், தின் என்னும் சொற்களின் ஈற்றெழுத்தோடும் பால் காட்டும் எழுத்தினைப் புணர்க்க இடையே வரும் மெய்யெழுத்து :

உதாரணம் :- 1 "செல்தீ பெருமதிற் றகைக்குநர் யாரோ" 2 "அட்டிலோலை தொட்டனை நின்மே" 3 'இன்று துறைவி யரும்படர் களைமே' எனவரும். இ. ஐ. ஆய், அன்றி இவையும் சிறுபான்மை வருமெனக் கொள்க.

சூ 53 *கடிசொல் இல்லைக் காலத்துப் படினே*

இது வினைச்சொற்கண் வருவதோர் வழுவமைதி உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- மேற்சொல்லப்பட்ட இலக்கணத்தான் வந்தில எனக் கடியப்படா, வினைச்சொற்கள் காலத்தொடு பொருந்தின என்றவாறு.

காலமாவது இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் காலப் பொருண்மை மயங்காமல் வரின் ஈறுதிரியினும் அமைக என்றவாறு.

உதாரணம் :- 4 "மறம்பாடிய பாடினியும்மே, யேருடைய விழுக்கழஞ்சில், சீருடைய இழைபெற்றிலனே, இழைபெற்ற பாடினிக்கு, குரல் புணர்சீர் கொளைவல்பான் மகனும்மே எனவாங்கு, ஒள்ளழற் புரந்த தாமரை வெள்ளி நாராற் பூப்பெற்றிசினே" என்பதனுள் படர்க்கை வினைச்சொல் ஈறு திரிந்து நின்றது காலப் பொருண்மை வழுவாமையின், குற்றமின்றாயிற்று.

5 "ஆரமர் அலறத் தாக்கித் தேரோடு
ஒருபுறங் காணேனாயிற் சிறந்த
பேரமர் உண்கண் இவளினும் பிரிக" எனவும்,

6 'முறைதிரிந்து மெலிகோல்
செய்தே னாகுக எனவும்,

தன்மைக் கண் எதிர்காலம் குறித்த வஞ்சினம் வியங்கோள் வாய்பாட்டான் வந்தன.

"பகலே பலரும் காண நாண்விட்
டகல்வயற் படப்பை யவனூர் வினவி
சென்மோ வாழி தோழி பன்னூட்

1. அகம்-46 2. நற்-300 3 புறம்-145 4. புறம்-11 5. புறம்-71 6. நற்-365

கருவி வானம் பெய்யா தாயினும்
அருவி ஆர்க்கும் கழைபயில் நனந்தலை
வான்தோய் மாமலைக் கிழவனை
சான்றோய் அல்லை என்றனம் வரற்கே''

என்றவழிச் சொல்வேமோ எனற்பாலது சென்மோ என வந்தது பிறவும் அன்ன.

இச்சூத்திரத்திற்குப் பிறவாற்றால் பொருள் உரைப்பவால் எனின் வினைச்சொல் திரிபு அதிகாரப்பட்டு வருதலாலும், காலத்துப் படினே என்றமையாலும் பிறவாற்றான் உரைப்பது பொருளன்றென்க

சூ 54 *"குறைச்சொற் கிளவி குறைக்கும்வழி அறிதல்"*

குறைச்சொல் ஆமாறு உணர்த்திற்று.

உரை :- யாதானும் ஒருசொல்லைக் குறைக்க வேண்டுவழி குறைக்கவேண்டும் இடமறிந்து குறைக்க என்றவாறு.

அது தலைக்குறைத்தலும் இடைக்குறைத்தலும் கடைக் குறைத்தலும் என மூவகைப்படும்.

உதாரணம்:- ''மரையிதழ் புரையும் அஞ்செஞ்சீறடி என்ற வழி, தாமரை என்பது தலைக்குறைந்து நின்றது.

'அகலிரு விசும்பின ஆ அல்''—ஆரல் என்பது இடைக் குறைந்து நின்றது.

''நீலுண்துகிலிகை'' என்றவழி நீலம் என்பது கடைக்குறைந்து நின்றது.

தொகுக்கும்வழித் தொகுத்தல் என்பதனோடு இதனிடை வேறுபாடு என்னை எனின், ஆண்டு விரிந்து நின்ற சொல் தொகுக்க வேண்டும்வழித் தொகுமாறு கூறினார். ஈண்டு இயற்கையில் குறைதலின் குறைச்சொல் என்றார்.

சூ 55 *குறைத்தன வாயினும் நிறைப்பெயர் இயல*

மேலதற்கோர் புறனடை உணர்த்திற்று.

உரை :- [குறைச் சொல் கிளவி குறைந்து நின்றவாயினும் பொருள்வேறுபடா. நிறைந்த பெயர் இயல என்றவாறு.

உதாரணம் மேற்காட்டப்பட்டன இவ்விதி மேல் விகாரப்பட்ட சொற்கும் ஒக்கும் என்று கொள்க.

சூ 56 *இடைச் சொல் எல்லாம் வேற்றுமைச் சொல்லே*

இடைச் சொற்கண் எஞ்சி நின்றதோர் பொருள் நிகழ்ச்சி உணர்த்திற்று.

உரை :- இடைச் சொற்கள் எல்லாம் வேற்றுமைச் சொல்லாம் என்றவாறு என்பது என் சொன்னவாறோ எனின், பெயரும் வினையும் போலப் பொருளையும் நேர்காட்டாது, ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்னும் வேற்றுமை உருபு போல வேறுபட்ட பொருளைக் குறித்து நிற்றலின் இடைச் சொல்லும் பொருள் வேறுபடுக்கும் சொல் எனப்படும், பொருள் உணர்த்தும் சொல் எனப்படா, மன் என்பது கழிவினும், ஆக்கத்தினும் ஒழியிசையினும் வந்தவழி, தான் இடைப்பெற்று நிலைமொழியின் வேறுபட்ட பொருளைக்குறித்து நின்றதல்லது, அப்பொருட்கு வாசகம் அன்றி நின்றமை கண்டு கொள்க. பிறவும் அன்ன

சூ 57 *உரிச்சொல் மருங்கினும் உரியவை உரிய*

உரிச்சொல் மருங்கினும் இடைநின்று பொருள் உணர்த்தும் சொல் உள என்பது உணர்த்திற்று.

உரை :- உரிச்சொல் இடத்தும் வேற்றுமை உருபுபோல அப்பொருள் வேறுபடுத்தற்கு உரியவை உரியவாம் என்றவாறு.

அது நனி என்பது உறுவும், தவவும் போல மிகுதி குறித்து வரினும் உறுவன, தவவன எனப்பொருள உணரவாராது இடைச்சொல் போல குறிப்பினான் மிகுதி உணர்த்துதலின இதுவும் பொருள் வேறபடுக்கும் சொல்லாயின் அல்லது பொருள் உணர வாராமை கண்டு கொள்க. பிறவும் அன்ன

சூ 58 *வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய*

வினையெச்சத்திற்கு உரியதோர் வேறுபாடு உணர்த்திற்று.

உரை : வினை எச்சச் சொல்லும் வேறாகிய பல இலக்கணத்தை உடைய என்றவாறு.

வேறு குறிய என்னாது பல் குறிய என்றது சொல்லானும் பொருளானும் வேறுபடும் எனபது அறிவித்தற்கு எனக் கொள்க.

சொல்லான் வேறுபடுதலாவது, பொதுவகையான் எடுத்து ஓதிய செய்து செய்யூ என்பன உகர, ஊகார ஈருகி வருதலே அன்றிப் பிறவீற்றுனும் வருதலும் எச்சச் சொல்லாகி வரற்பாலது முற்றுச் சொல்லாகி வரற்பாலது முற்றுச் சொல்லாகி வருதலும்.

பொருளான் வேறுபடுதலாவது, ஒருவாய்பாட்டான் உணரும் பொருளை மற்றொரு வாய்பாட்டான் கூறுதலும் எல்லா வினை எச்சமும் பிரித்து நோக்குவார்க்குப் பெரும்பான்மையும் வேற்றுமைப் பொருளாகித் தோற்றுதலும்.

அவையாமாறு: செய்தென் எச்சத்தின்கண் ஓடி, போய் எனவும் செய்யூ என்பதன்கண் செய்யா எனவும் வருவன ஈறுவேறுபட்டு வந்தன.

உதாரணம் :- 1 "மோயினள் உயிர்த்தகாலை" எனவும் "ஒலி சினை வேங்கை கொய்குவம் சென்றுழி" எனவும், கண்ணியன், வில்லன் வரும் எனவும்......

இவை வினையெச்ச முற்றாகி வந்தன. இவற்றுள் மோந்து என்பது மோயினள எனவும், கொய்ய என்பது கொய்குவம் எனவும், கண்ணி-யணிந்து வில்லையேந்தி என்பன, கண்ணியன வில்லன வரும் எனவும் முற்று வாய்பாட்டான வரினும் எச்சப் பொருண்மைத்தாகலின வினையெச்சம் எனப்பட்டன.

அஃதேல் முற்றென்பதில்லையாம், எச்சப்பொருண்மைத்தாகி வருதலின் எனின், அஃது ஆமிடனும் ஆகாவிடனும் அறிதல் வேண்டுமென்பது வருகின்ற சூத்திரத்தான் விளங்கும்.

2 "உரற்கால் யானை ஒடித்துண்டெஞ்சிய வாய்வரி நீழல் துஞ்சும்" என்றவழி உண்டு என்பது வினைமுதல் வினையொடு முடியாமையின் உண்ணவெனத் திரித்தல் வேண்டிற்று. இந்நிகரன ஈறு திரிந்தன.

மருந்துண்டு நோய்தீர்ந்தான், மழைபெய்ய மரம் குழைந்தது. என்பனவற்றைப் பிரித்து நோக்க, மருந்துண்டலான், மழை பெய்தலான் என வேற்றுமைப் பொருட்பட்டன. அஃதேல் இவை வேற்றுமை மயங்கியலுள் கூறப்-பட்டன. அன்றே எனின், ஆண்டு வேற்றுமைப் பொருள் வினைச்சொல்லானும்

1. அகம்-5 2. குறு-232

விளங்கும் என அதன் இலக்கணம் கூறினர். ஈண்டு வினையெச்சம் வேற்றுமைப் படும் என்று இதன் இலக்கணம் கூறினர் என்க. வினையெஞ்சு கிளவியும் என்ற உம்மை இறந்தது தழீஇற்று.

**சூ 59** *உரையிடத் தியலும் உடனிலை அறிதல்*

மேலதற்கோர் புறனடை உணர்த்திற்று.

உரை :- உரை என்பது தொடர்மொழி முற்றுச் சொல் எச்சமாகி வருதலும் வினையெச்சம் ஈறுதிரிதலும் தொடர்மொழிக்கண் முடிக்கும் சொல்லொடு கூடி நின்ற நிலைமையை அறிந்து கொள்க.

''மோயினள் உயிர்த்தகாலை'' என்றவழி உயிர்த்தல் என்னும் வினையொடு நிற்றலின் எனபது மோயினள் எச்சமாயிற்று அல்லாதவழி முற்றாய் நிற்கும். ஞாயிறுபட்டு வந்தான் என்றவழி வந்தான் என்பதற்குப் பட்டென்பது ஏலாமையின், பட எனத் திரிதல் வேண்டிற்று. பிறவும் அன்ன.

**சூ 60** *முன்னத்தின் உணருங் கிளவியும் உளவே*
*இன்னவென் னுஞ் சொன்முறை யான*

மனக்கருத்தினுல் பொருள் உணரும் இடம் உணர்த்திற்று.

உரை :- சொல்லினான் அன்றி இத்தன்மைய என்னும் சொல்லினது தொடர்ச்சிக்கண் மனக்குறிப்பினால் பொருள் உணரப்படும் சொல்லும் உள.

உம்மை இறந்தது தழீஇய எச்ச உம்மை [1] தொடி நோக்கி மென்றோளும் நோக்கி அடிநோக்கி, அஃதாண்டவள் செய்தது' என்றவழி இருப்பேமாயின் வளைகழன்று தோள்மெலியும் எனக்கருதி, நடக்க வல்லீராகல் வேண்டும் என அடியை நோக்கினாள் ஆதலான் உடன்போக்கிற்குக் கருதினாள் என இப்பொருளெல்லாம் அவள் குறிப்பினுல் உணர நின்றவாறு கண்டுகொள்க. இது சொல்லினான் உணராமையான் எடுத்தோதல் வேண்டிற்று. பிறவும் இந்நிகரன அறிந்து கொள்க.

**சூ 61** *ஒருபொருள் இருசொல் பிரிவில வரையார்*

செப்புவழு அமைத்தலை நுதலிற்று.

---

1. குறள்-1279

உரை :- ஒரு பொருள்மேல் இரண்டு சொல் பிரிவின்றி வரின் நீக்கப்படா என்றவாறு.

''உயர்ந்தோங்கு பெருமலை'' ''உச்சிமீமிசை'' நிலத்துவழி மருங்கிற்றோன்றலான் என்பன பிரிவில என்றதனுள் ஒட்டிவரும்.

நூ 62 *ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி*
*பன்மைப் பொருட்கும் இடனுமா ரூண்டே*

ஒருமைப்பெயர் பன்மைப் பொருள் உணர்த்துமாறு உணர்த்திற்று.

உரை :- ஒருமைப்பெயர்ச் சொல் பன்மைக்கு ஆகும் இடம் உணர்த்திற்று.

உதாரணம் :- 1 ''புலையன் எறிந்த பூசற்றண்ணுமை
ஏவல் இளையர் தாய்வயிறு கரிப்ப

என்றவழி, தாயர் எனல் வேண்டுமாயினும் தாய் என்பது பன்மை குறித்து நின்றது.

நூ 63 *முன்னிலை சுட்டிய ஒருமைக்கிளவி*
*பன்மையொடு முடியினும் வரைநிலையின்றே*
*ஆற்றுப்படை மருங்கிற் போற்றல்*
*வேண்டும்*

இது ஒருமை பன்மை மயக்கம் உணர்த்திற்று.

உரை : முன்னிலையைச் சுட்டிய ஒருமைச்சொல் பன்மையொடு முடியினும் நீக்கப்படாததனை ஆற்றுப்படுக்கும் வழிப் பாதுகாத்துக் கூறுக.

ஆற்றுவழி மருங்கிற் போற்றல் வேண்டும் எனவே அல்லாத வழி போற்றுமையும் கூறப்படுமாயிற்று.

ஆற்றுப்படை மருங்கில் போற்றுதலாவது 2 ''புல்லென் யாக்கைப் புலவு வாய்ப்பாண'' என அண்மைவிளி ஏற்று முன்னிலை வினையைக் குறித்து நின்ற ஒருமைப்பெயர், 3 'நீயிரும் பல்வேற்றிரையற் படர்குவிராயின்' எனப்பன்மையொடு முடிந்தது.

கூத்தராற்றுப்படையுள், 4 ''கலைபெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ'' என அண்மைவிளி ஏற்று முன்னிலை குறித்து நின்ற ஒருமைப்பெயர், 5 ''நீயிரும் நன்னற் படர்ந்த கொள்கையொடு உள்ளினிர்சென்றீராயின'' எனப்

1. அகம்-96 2. பெரும்-22 3. பெரும்-37 4. கூத் 50 5. கூத்-50

பண்பையொடு முடிந்தது. இவ்வாறு வருங்கால் கூத்தரும் பாணரும் விறலியருமாகி ஆண்டுச் செல்வார் பலராயுழியே வரப்பெறுவதென்றும் தனியொருவனுழியின் மயங்கப் பெறுதென்றும் கொள்க.

இனி ஆற்றுப்படை அல்லாதவழி பலர் இல்வழியும் மயங்கப்பெறும்.

''குறிப்பேவல் செயல்மாலைக்
கொளைநடை அந்தணிர்
வெவ்விடைச் செலல்மாலை
ஒழுக்கத்தீ ரிவ்விடை
என்மகள் ஒருத்தியும்
பிறன்மகன் ஒருவனும்

தம்முளே புணர்ந்த 1 ''தாமறி புணர்ச்சியர் அன்னாரிருவரைக் காணிரோ பெரும'' எனவும்,

2 ''மறப்பரு காதல் இவளீண்டொழிய
இறப்பத் துணிந்தனிர் கேண்மின் மற்றைய'' எனவும்

3 ''என்னிர் அறியாதீர் போல இவை கூறல்,
நன்னீரவல்ல நெடுந்தகாய்'' எனவும் வரும். பிறவுமன்ன.

சூ 64 செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி எல்லாம்
பல்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது
சொல்வரைந் தறியப் பிரித்தனர் (காட்டல்)

இவ் அதிகாரத்தில் ஓதப்பட்ட எல்லாச் சொற்கும் புறனடை உணர்த்திற்று.

உரை:- செய்யுளிடத்தும் வழக்கிடத்தும் பொருளுணரச் சொல்லப்பட்ட சொற்களெல்லாம் ஈண்டு ஓதிய இலக்கணத்தான் முற்றுப் பெற்றிலவாயினும் பலவகைப்பட்ட ஆசிரிய மத விகற்பத்தான் வருமிலக்கணத்திற பிழையாமல் யாதாயினும் ஒருசொல்லாயினும் பாகுபடுத்துணருமாறு வகுத்துக் காட்டி யுணர்த்துக நூலுணர்ந்தோர். பிறநூல் முடிபினும் முடியினும் இலக்கணப் பிழைப்பின்றாகும்.

4 ''கொடுங்கோற் கோவலர்
பின்னின் றுய்ப்ப
இன்னே வருவதாயர்''—

1. கலி-பாலை-9 2. பாலை-2 3. பாலை-6 4. முல்லை-15.16

என்றவழி ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியின் அடங்காமைக்கு இலக்கணம் வேறு வேண்டிற்று.

1 "வளியிடை வழங்கா
வானம் சூடிய
மண்டிணி கிடக்கை"

என்றவழியும் நெடிய, வலிய ஆனெனவும் பெயரெச்சம் அடுக்கி வந்தது.

2 "நெல்லரியு மிருந்தொழுவர்" என்னும் பாட்டு முற்றும் பெற்றடுக்கி வந்தது.

"ஒன்னாதார்க் கடந்தடூஉம்
உரவுநீர் மாகொன்ற
வென்வேலான் குன்றின்மேல்"

என்றவழியும் அடுக்கி வந்தது.

வினைத் தொகைப் புறத்தும் உவமத் தொகைப் புறத்தும் பொருளொற்றுமைப்படாது அன்மொழித் தொகையாகிச் சான்றோர் செய்யுளகத்து வரின் இச்சூத்திரமிடமாக அமைத்துக் கொள்க.

"நின்ன கண்ணியு மார்பிடைத்தன்றே"

என்பது நின்னுடைய என்னும் பொருண்மைக்கண் ஒட்டிய அவ்வாய்பாடு குறித்து நின்றது. பிறவும் எடுத்தோதிய இலக்கணத்து மாறுபட்டு வருவன உளவேல் இச்சூத்திரத்தான் அமைத்துக் கொள்க.

இவ்வோத்தினுள் சூத்திரம் உட்பட்ட உரையினதளவு கிரந்த வகையான் அறுநூற்றிருபது.

ஆத்ரேய கோத்திரத்து.

1. புறம்-35 2. புறம்-24

# பிழைத்திருத்தம்

| தொல். பக். | வரி. | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 9 | இசைக்குமன | இசைக்குமன் |
| | 10 | செய்யுமன | செய்யுமன் |
| 9 | 9 | பொருத்த | பொருந்த |
| | 11 | பொருக்த | பொருந்த |
| 11 | 4 | திணகண்ணும் | திணைக்கண்ணும் |
| | 23 | திரிபின்றில்ப் | திரிபின்றிப் |
| 13 | 7 | தினை | திணை |
| 14 | 10 | இயினும் | வழீஇயினும் |
| 15 | 7 | ஒக்குபென்றுனும் | ஒக்குமென்றனும் |
| | 10 | தமீஇயின | தழீஇயின |
| 18 | 10 | செயர்க்கை | செயற்கை |
| 19 | 11 | உருபென | உருவென |
| | 15 | உருபு | உருவு |
| | 20 | அஃகறிணை | அஃறிணை |
| | 25 | உருபு | உருவு |
| 20 | 7 | குற்றின் | குற்றியின் |
| 21 | 15 | செவிசெந் | செவிசெஞ் |
| 22 | 6 | மூடியோா | மூடியா |
| | 10 | கொன்ளன் | கொல்லன் |
| | 19 | உணர்த்தனை | உணர்த்தலை |
| 23 | 8 | அவன் | எவன் |
| | 11 | அவன் | எவன் |
| 24 | 7 | இத்துனை | இத்துணை |
| 26 | 1 | கியறும் | கியலும் |
| 29 | 2 | அஃறினை | அஃறிணை |
| | 5 | அஃறினை | அஃறிணை |
| | 7 | சாலும் | சாரும் |
| | 8 | சாநீர் | சாரீர் |
| | 9 | காறும் | சாரும் |
| 29 | 15 | உயர்திணா | உயர்திணை |
| | | பொருல்மேல | பொருள்மேல |
| | 19 | என்னு | எண்ணு |
| 30 | 20 | பழகண் | பழங்கண் |
| | 4 | ஒருவனை | ஒருவினை |
| | 12 | அரகர் | அரசர் |
| | 2.. | அஃறினை | அஃறிணை |
| | | உயர்தினை | உயர்திணை |
| | 23 | பொறமை | பொதுமை |

| தொல். பக். | வரி. | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 32 | 3 | அந்தனரும் | அந்தணரும் |
| | 9 | அணியற் | ஆனயற் |
| | 10 | பிணியுடையூரும் | பிணியுடையீரும் |
| | 19 | தினே | திணே |
| | 23 | இடிதமிழி | இடிதமிழி |
| 36 | 3 | கிளர்ந்தாங் | கிளர்ந்தாங்கு |
| | 16 | ஒன்ஞர் | ஒன்ஞர் |
| | 18 | ஆஞகிய | ஆஞகிய |
| 40 | 17 | பண்மை | பன்மை |
| 42 | 5 | விழி | விளி |
| 46 | 5 | மற்ெறடு | மற்ெறாரு |
| 54 | 9 | கணி | கனி |
| 56 | 7 | என்மதுவே | என்பதுவே |
| | 15 | வேற்றுமையை | வேற்றுமையா |
| | 16 | .. | .. |
| | 18 | இச்சூத்திரத்திரம் | இச்சூத்திரம் |
| 60 | 15 | ஏழாகுவாத | ஏழாகுவதே |
| 63 | 8 | அணித்வகாது | அணிந்தகாது |
| 67 | 10 | பாணிணியார்க்கும் | பாணியார்க்கும் |
| | 13 | நோக்கா | நோக்கோ |
| | 20 | இருவாற்றலும் | இருவாற்ருனும் |
| | 23 | அமைத்தஞ | அமைச்சன் |
| | 24 | அமைத்தனே | அமைச்சனே |
| | | அமைத்தனில் | அமைச்சனிற் |
| 68 | 24 | பனுவரின் | பனுவலின் |
| 77 | 9 | அஃறினே | அஃறிணே |
| | 18 | புன்னினை | புளினை |
| 79 | 19 | இன்னற் | இன்னதற் |
| 80 | 19 | கானகம் | காரகம் |
| 83 | 18 | அப்பாள் | அப்பன் |
| 84 | 13 | உணர்த்திகின்ஞேரே | உணர்ந்திகின்ஞேரே |
| | 21 | எண்ணிப்பெயர் | எண்ணுப்பெயர் |
| 85 | 4 | நிகற | நிகர |
| | 9 | அன்று | அன்றி |
| | 20 | களப்பியல் | களிப்பியல் |
| | | சிற்ருளி | சிற்ருளி |
| | 26 | மூப்பட | முற்பட |
| | | உணரயிரது | உரையினது |

| தொல். பக். | வரி. | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 86 | 4 | முறையாஞே | முறையானே |
| 87 | 14 | இ ஏ | இ ஈ |
| | 19 | தந்தாம் | நந்தாம் |
| 88 | 13 | ஐயணிறுதி | ஐயெனிறுதி |
| | 20 | அன்ஞமைச் | அன்மைச |
| 92 | 2 | மதுங்குளம் | மருங்குளும் |
| | 6 | விளிகோல் | விளிகோள் |
| | 10 | ஆரம் | ஆகும் |
| 93 | 12 | புறகிளந்தின்ன | கிளந்தன்ன |
| | 22 | ருமமின | நுமமின |
| 94 | 24 | ணகார | ளகார |
| 95 | 15 | மாகல் | மாஅல் |
| | 21 | ஈற்றிணே | ஈற்றினே |
| 96 | 2 | எல்லாம | எல்லாந் |
| | 3 | பெறுலங் | பெறுமவ் |
| | 21 | அளவிறந்தனனே | அளவிறந்தனவே |
| | 22 | வழக்கத்திரள | வழக்கத்தான |
| 97 | 6 | அம்மவென்னும் | அம்மவென்னும் |
| | 17 | தகதுஎ | தநநுஎ |
| | 22 | தக | தந |
| 98 | 13 | இரந்த | கிரந்த |
| 104 | 11 | விளங்கும் | விளங்க |
| 107 | 9 | குறுக்கும | குறிக்கும் |
| | 12 | வழக்கி | வழக்கில் |
| | 14 | வெடியான் | வெட்கியள |
| | 18 | வழக்கியயறைற் | வழக்கிறுடிய |
| 109 | 4 | குறிப்போடும் | குறிப்பெயரும் |
| 113 | 8 | அந்தான் | அந்நான் |
| 117 | 11 | பன்மைகல்லது | பன்மைக்கல்லது |
| 123 | 13 | அம்மு | அம்மூ |
| 138 | சூறள் | 206 | 653 |
| 140 | 9 | செப்பு | செப்பு |
| 161 | 7 | பாயிகது | பாய்ந்து |
| | கடைசிவரி | தேறென் | தேறென |
| 168 | 17 | இடும்மையுள் | இடும்பையுள் |
| | | பல்குனத் | பல்குரைத் |
| 170 | 26 | மாது | மா |
| 172 | சூ 34 | எச்சு | எச்ச |

| தொல். பக். | வரி. | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| | 3 | பெற்றிலவயிலெனில் | பெற்றலவெனில் |
| 176 | 15 | சொற்றெருலும் | சொற்றெருறும் |
| | சூ 43 | இடறுமா | இடனுமா |
| 177 | 20 | வுட்டுயகு | வுட்குவகு |
| | 21 | கெரூட | கெழூட |
| 178 | 19 | மிகுஎஞ்சின | மிகுஞ்சின் என்றும் |
| 180 | 26 | ஞாணுளர் | நாணுளர் |
| 181 | 7 | தூரத்தி | சாரத்தி |
| 183 | 10 | பெற்றுதல் | பெறுதல் |
| | 12 | ,, | ,, |
| 186 | 18 | மழகனிறு | மழகனிறு |
| | 26 சூ-20 | உள்ளாது | உள்ளது |
| 189 | 16 | மாதர்நோக்கு | வம்பமாரி குறு-66 |
| | குறிப் அகம் | 198 | 378 |
| 196 | 1 | விறுப்பாகும் | விரிப்பாகும் |
| 198 | சூ 79 வரி-2 | புணிறு | புனிறு |
| | சூ-83 உதாரணம்-8 | | சென்றவட்டி |
| 199 | 19 | முன்றேற் | முன்னேற் |
| 202 | 18 | மாணுர்க்கு | மாணுக்கர்க்கு |
| 205 | 8 | வியங்கு | வயங்கு |
| | 12 குறள | பொருளாகு மெல்லற மென்றியாதிவறும் | பொருளான மெல்லாமென்றி |
| 216 | 26 | குறியும் பெனும் | குறிப்பெனும் |
| 218 | 7 | உலகம் உவப்ப | வாணுதல்கணவன் |
| 219 | ஈற்றடி | செறநரை | செறுநரை |
| 228 | ,, | மொய்ம்மலர்த்தார் மாற்றம் | மலர்த்தார் நாற்றம் |
| 229 | 1 | புறம் | சிறுபாண்-20 |
| | 2 | சிறுபான் | நாலடி-4 |
| 233 | அடி | குறள்-22 | குறள்-226 |
| 234 | 1 | மருந்தெனின் குறு-71 | குறந்-71 |
| 241 | 27 | மணி 5556 | 'குருகு' மணி 18-55,56 |
| 244 | 6 | சொல்வேமோ | சொல்லோமோ |
| 246 | 27 | குறந்-232 | குறந்-262 |
| 250 | 9 | 'ஒன்றுதார்' | கலி-27 |